உ

சிவமயம்.

# ஜோதிஷ தரங்கிணி

1-2 பாகங்கள்.

இவை

எட்டயபுரம்

எஸ். குருகுஹதாஸப் பிள்ளையவர்களால்

இயற்றப்பெற்று



மதுரை

மீனலோசனி அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1929. [ரூ. 1—0—0.

உ

சிவமயம்.

# ஜோதிஷ தரங்கிணி

1-2 பாகங்கள்.



இவை

எட்டயபுரம்

எஸ். குருகுஹதாஸப் பிள்ளையவர்களால்

இயற்றப்பெற்று



மதுரை

மீனலோசனி அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றன.

விலை] 1929. [ரூ. 1—0—0.



H. H. THE MAHARAJAH OF ETTAYAPURAM.

# To

**His Highness Raja Jaga Veera Rama Kumara Venkatesvara Ettappa Maharajah Aiyan Avergal**

**RAJAH OF ETTAYAPURAM**

**This work**

**Undertaken And Carried Out**

**Under His Highness' Kind Patronage And Encouragement**

**Is**

**By Permission**

**DEDICATED**

***With Every Sentiment Of Respect, Regard, Love And Loyalty***

**By**

**HIS HIGHNESS'**

***Grateful, Sincere And Humble Servant***

**As A Token Of Scientific Homage In Memory**

**Of**

***His Highness' Accession To The Ancient And Historic Musnad***

**On**

—9—1928




THE AUTHOR

# ஜோதிஷ தரங்கிணி.

## மதிப்புரை.

---

எல்லாம் வல்ல இறைவன் படைப்புகளாகிய பல்லாயிரங்கோடி யண்டங்களில் இந்த மண்ணுலகம் ஒன்று. இதிலுள்ள இந்துமாக் கடலுள் மூழ்கிக் கிடக்கின்ற தமிழகத்தில் மக்கள் முதற்கட்டோன் றினரென்று புலவர் ஹேக்கல் (Prof Hackel) முதலிய செய்தியாசிரி யர் கூறுகின்றனர். தமிழகத்திற்றோன்றிய மக்கள் பல்வேறு இடங் களுக்குச் சென்று குடியேறிப் பல மொழிகள் கற்பித்துப் பேசிப் பல இனத்தாராயினர். தமிழகத்தில் இயல் இசை நாடக நூல்களும் வானூல் (Astronomy) ஒளிநூல் (Astrology) எண்ணூல், மருத்துவ நூல், மந்திரநூல், ஒழுக்கநூல், சமயநூல் முதலிய பல நூல்கள் தமிழ் முதற் சங்க காலமாகிய 16,000 ஆண்டுகட்கு முன்றொடங்கி நிலவிவந்தன. முதற்கடல் கோள், இரண்டாவது கடல் கோள்களில் தென்மதுரையும் கவாடபுரமும் அவற்றைச் சார்ந்த நாடுகளும் பல தமிழ் நூல்களும் கடல் கொள்ளப்பட்டன. அதை,

"ஏரண முருவம் யோக மிசைக்கணக் கிரதஞ் சாலம்
தாரண மறமே சந்தந் தம்பநீர் நிலமு லோகம்
ஆரணம் பொருளென் றின்ன மானநூல் யாவும் வாரி
வாரணங் கொண்ட தந்தோ வழிவழிப் பெயரு மாள"

என்ற பழம்பாட்டு விளக்குகின்றது.

மெசபட்டோமியாவிற் பழைய இந்தியரைக் குறித்து ஏ. கோச் எழுதியது. (by A. Ghose):—

சாம்பாலியன் என்பவரைப் போன்ற இன்னொருவர் தோன்றிப் பழமையரான திராவிடருடைய (தமிழருடைய) ஆழத்திற் புதைந்து போயிருக்கிற நாகரிகத்தின் குறிப்புகளை வெளிப்படுத்தும் பொழுது, பழமையான மெசபட்டோமியாவின் மேலான நாகரிகம் இந்தியாவில் இருந்து வந்தங்கு குடியேறின சுமேரியரா (திராவிடரா)ல் உண்டான தென்று இப்பொழுது ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதுபோலவே சார்

திரமான வானநூலும், மிகப் பழமையான எழுத்துகளும் இந்தியாவில் முதன்முதல் உண்டானதென்று எல்லா வகையாலுந் தெரியவருகிறது. இவ்வகையில் பழைய திராவிடர்க்கு உலகம் எவ்வளவு தூரம் கடமைப் பட்டிருக்கிறதென்பதைப் பழைய இந்தியாவைப் பற்றிய ஆராய்ச்சி செய்யும் தற்கால சரித்திரக்காரரின் நூல்களிற் காணக்கூடவில்லை. திராவிட நாடு இயற்கையில் செழிப்புடையதாயிருந்தபடியால் ஆரிய ருக்கு முற்பட்ட திராவிடரின் நாகரீகமானது அவர்கள் பழைய பூமியில் செழித்து வளர்ந்ததாகக் கருதுவதற்கு எல்லா ஆதாரமு முள்ளன.

இப்பொழுது பல சித்தர் ஒளிநூல்களும், உள்ளமுடையான், குமாரசாமியம் முதலிய பல ஜோதிட நூல்களும், சாதகங் கூறும் பல இருடிகளின் வாக்கியங்களும் வழக்கில் இருக்கின்றன. இற்றைக்கு 10,000 ஆண்டுகளுக்கு முன்றொடங்கி. எருதூர், (Ur of Erudu) அங்காடியூர், (Ur of Accadians) கழநியூர், (Ur of Kalni) முதலிய ஆட்சிகளையுடைத்தான மெசபட்டோமியர் சுமேரியர் எனப்படும் தமிழரிடமிருந்து ஜோதிட நூலையும், பிறநாகரீசங்களையும் பெற்றமை போலவே, மேற்றிசை ஐரோப்பிய தேசத்தவரும் பெற்று மேன் பட்டனர் என்பதை அறியப் பல ஆதாரங்களிருக்கின்றன. ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்ற ஏழு கோள்களின் பெயர்களும், ஏழு நாட்களின் பெயராகத் தமிழில் வழங்கி வருதலால் கோள்களை முதலில் கண்டுபிடித்தவர் தமிழர் என்பது நன்கு விளங்குகின்றது.

வடமொழி, தெலுங்கு, ஆங்கில முதலிய பிறமொழிகளில் ஆதித்யவாரம், பானுவாரம், சண்டே (Sunday) அய்த்வார் எனச் சூரியநாள் (சூரியனுக்குரியநாள்) என்ற பொருளில் வழங்கி வருத லால் பிற்காலத்து அச்சொற்கள் அமைக்கப்பட்டனவென்று கருதத் தக்கதாகின்றது.

சிவாலய விண்டு ஆலயங்களிறைந்த திராவிட நாட்டில் கிராமத் துக்கு உதவிபாகக் குறிக்கப்பட்டோர் 1. ஜோதிடர். 2. கணக்கர். 3. வைத்தியர். 4. யானைப்பாகர். 5. மருந்துகொடுப்போர். 6. விடம் போக்குவோர். 7. தொழிலாளிகள். 8. தெய்வங்கொண்டாடுபவர்

என எண்மர் என்று காமிகாகமம் படலம் 30 சுலோகம் 2ல் குறிக்கப் படுகின்றனர். ஆதலால் ஜோதிடர் ஒவ்வோரூரிலும் இன்றியமையா திருத்தல் வேண்டுமென்பது முற்காலக் கொள்கையென்று தெளிவா கின்றது. ஜோதிஷர் அமைச்சர் குழாத்துட் சிறந்தோரென்றதன் உண்மையைச் சிலப்பதிகாரத்திலுங் காண்க.

இத்திராவிட நாட்டில்மட்டுமின்றி, மேற்றிசை நாடுகளிலும் பல அரசர்களும் கல்விமான்களும் ஒளிநூற்றேர்ச்சியுடையவரா யிருந்ததன்றி அதன் பயனையும் அநுபவத்தில் அடைந்து மகிழ்ந்ததை விளக்கும் பல செய்திகள் ஆங்கில நூல்களில் வெளிப்படுகின்றன.

மண்ணுலகைச் சுற்றிவருகிற 27 விண்மீன்களில் வீடொன்றுக்கு இரண்டேகால் ஆக 12 வீடுகளமைந்துள்ளன. அவ்வீடுகளால் அமைந்த விண்வட்டத்தில் ஞாயிறு முதலிய கோள்கள் 7. நிழற் கோள்கள் 2. ஆக 9 கோள்கள் நடத்தவி னியைபால் மண்ணிலுள்ள உயிர்களுக்குண்டாம் நலந்தீங்குகளைக் கணித்தறியும் நூல் ஜோதிடம் எனப்படும்.

ஞாயிறு ஒளியாயும் பிற 6 கோள்கள் ஒளிபெற்றியங்குவனவாயு மிருத்தலால் அவற்றிலுண்டாம் நலந்தீங்குகளைத் தெரியக் கூறும் நூல் ஒளிநூலெனப்பட்டது.

கோள்களின் நடை வேற்றுமைகள் உயிர்களின் முற்பிறவிகளின் வினை வேற்றுமைகளாலுண்டாகின்றனவென்பது தெளிவு.

இதுகாறும் தமிழ், வடமொழி, ஆங்கிலமொழிகளிற் பல ஒளி நூல்கள் விரிந்திருக்கினும் அவற்றில் பலன் கூறுதற்குரிய எல்லா வகைகளும் ஒருங்கே முறைபடக் கூறப்பட்டில்லை. "ஜோதிஷ தரங் கிணி" யென்ற இந்நூலில் மண்ணுலகின் அமைப்பு, அளவுகள், விண் வட்டத்தின் இயல்பு, விண்மீன்கள், அவற்றின் பகுதிகள், கோள்க ளின் இயல்புகள், அதிதேவதைகள், காலம்பற்றிய பயன்கள், கோள்க ளின் உச்சம், நீசம் (இழிவு), முக்கோணம், தன்னிலம், ராசிகளின் இயல்புகள், காலம், இராசி, கோள் முதலியவற்றின் சேர்க்கையா லுண்டாம் பலன்கள், இராசிகளின் தோற்ற வேற்றுமைகள், இராசி வகுப்புகள், கோள்களின் உருவம், இலக்கணம், செயல்கள், இனம், பார்வை, நேயம், பகை, ஒத்ததன்மை, மங்கலம், அமங்கலம், (சுபம்

அசுபம்) பால் வேற்றுமை, கோள்களின் இலக்கணம், கோள் தோன்றும் வீடு, பாவம், முன்வினைப்பயன், யோகம், இராஜயோகம், சமயோகம், ஆயுள், நலம், தீமை, புகழ்முதலியபலன்களை நன்குதெரியும் வழிகளைப் பிறர்துணையின்றித் தாமே கற்றுக்கொள்ளும் விதமாய்த் தெளிவான தமிழ்நடையில் எழுதப்பட்டிருக்கிறது.

இந் நூலாசிரியர் எட்டயபுரம் அரண்மனை வித்வான்கள் பரம்பரையிற்றோன்றியவர். ஆங்கிலம், தமிழ், இலத்தீன் மொழிகளில் உள்ள பலநூல்களில் நல்ல பயிர்ச்சியுடையவர். எட்டயபுரம் அரண்மனையில் நிகழ்ந்த பலநிகழ்ச்சிகளை நெடுநாள் முன்னமே கணித்தெழுதித்தந்து ஜோதிடம் உண்மைநூல் என்று மெய்ப்பித்த திருவன் குருகுக தாசப்பிள்ளையவர்கள். அவர் இப்பொழுது இந்நூலின் முதலாவது இரண்டாவது புத்தகங்களை எழுதிமுடித்துலகுக்குத் தந்ததுபோல மிக முக்கியமான மூன்றாவது புத்தகத்தையும் விரைந்து முடித்துத் தருவார்களென நம்புகிறேன். இந்நூலொன்றை நன்கு படித்தறிந்தவர் நூறு ஜோதிட நூல்கள் படித்தாற்பெறும் அறிவும் அநுபவமும் பெற்றுப் பெரிய ஜோதிடராவா ரென்பது திண்ணம்.

இந்நூலை எழுதற்குவேண்டிய துணைபுரிந்தருளிய எட்டயபுரம் சமஸ்தானாதிபதி மாட்சிபொருந்திய இராஜ ஜெகவீர ராமகுமார வெங்கடேஸ்வர எட்டப்ப மகாராஜா அய்யனவர்கள் தங்கள் பரம்பரையில் இயல் இசை நாடகம் என்ற முத்தமிழை வளர்த்துவந்தமைபோல இம்மன்னர் அவர்கள் அவற்றோடு ஜோதிஷத்தையும் ஆதரித்து வளர்க்கின்றமை பெரிதும் போற்றற்பாலது.

எட்டயபுரம் சமஸ்தானத் தாசர்மீது ஷை சமஸ்தானக் கவிஞர் 200 ஆண்டுகளுக்கு முன் மடக்கு, யமகம், திரிபு, இலக்கண இலக்கியங்களில் மிகச்சிறந்தவராகிய கடிகைமுத்துப் புலவர் சமுத்திர விலாசம், காமரசமஞ்சரி முதலிய நூல்களியற்றினர். மற்றோர் புலவரான உமறுப்புலவர் என்பார் சீறாப்புராண மியற்றியவராவர். தேம்பாவணி, வேதியரொழுக்கமாகிய நூல்களை யாத்தவீரமாமுனிவர் தமிழைக்கற்றுக்கொண்டதும் இந்தச் சமஸ்தானத்திலேயே. முத்தமிழ்க்கவிஞர் நாகூர்முத்துப் புலவராதிய பல்லோர் விளங்கினது

மீண்டே. சம்ஸ்தானாதிபதிகள் மீது அக்காலத்துப் பல ஏனையபுலவர் அரிய பல கவிகளியற்றி யிருக்கின்றனர். அவற்றிற் பல தனிப் பாடற் றிரட்டிற் காணலாம்.

இசையில் மிகச்சிறந்த கீர்த்தனைகள் வடமொழியிலியற்றி இந்து தேசமுழுவதும் "தீக்ஷிதர் கிர்த்தி" என்ற பெயரோடு வழங்கிவரு கின்ற இசைநூலாக்கியோர் எட்டயபுரம் சம்ஸ்தான இசை நூற் புலவர் முத்துசாமி தீக்ஷிதர். பாலசாமி தீக்ஷிதர் அன்னோர் சகோ தரர். இவர் குமாரரான சங்கீத சாகித்யவித்வான் சுப்பராம தீக்ஷிதர் அவர்கள் "சங்கீத சம்பிரதாயப் பிரதர்சினி" என்ற சங்கீத நூலைத் தெலுங்கில் இயற்றியிருக்கின்றனர். இப்போதைய அரசர் தந்தையவர் களுக்கு முன் பட்டம் ஆண்டராஜா இராஜ ஜெகவீர ராம வெங்க டேஸ்வர எட்டப்ப மகாராஜா அய்யனவர்கள் தாமே சில நாடகநூல் களியற்றி யிருக்கின்றனர். இவர்களது பிதாமகர்களான முன்னைய அரசர்களும் சம்ஸ்கிருதம், ஆந்திரம், திராவிடமாகிய மொழிகளில் வல்லுநராக விளங்கினார்களென்பது அவர்களால் அவ்வப்பாஷை களிலியற்றப்பட்டிருக்கும் சூர்ணிகை, தண்டகம், விருத்தப்பாக்களா கியவைகள் சான்றாகின்றன. ஆதலால் இப்போதுள்ள எட்டயபுரம் சம்ஸ்தானாதிபதி யவர்கள் இயல், இசை, நாடகம், ஒளிநூல் ஆகிய நாற்றமிழையும் வளர்ப்பவர்களென்று கூறல் மிகையாகாது.

தமிழ், வடமொழி, ஆங்கிலத்துள்ள பல ஒளிநூல்களின் சாரத் தை ஒருங்குதிரட்டி எழுதப்பெற்ற இச்"சோதிஷ தரங்கிணி" என்ற ஒளிநூல் நன்கு முற்றுப்பெற் றுலகிற் பரவிப் பலருங் கற்றுப் பின் னிகழ்வனவற்றை முன்னரேயறிந்து தெய்வ வழிபாட்டால் இன்னல் வாராதுகாத்து நன்மையு மின்பமுமடைந்துய்ய எல்லாம்வல்ல இறை வனை யிறைஞ்சுகின்றனன்.

மறைத்திருவன் சுவாமி விருதை
சிவஞான யோகி,
தமிழ் பிரம சூத்திராசிரியர், சித்த வைத்திய
டெக்ஸ்டு புக் சூப்ரவைசிங் கமிட்டித் தலைவர்.

கோவிற்பட்டி,
27—9—29.

---

# சாற்றுக்கவிகள்.

---

எட்டயபுரம் சம்ஸ்தானம் வித்வானும் மதுரைத் தமிழ்ச் சங்கத்து
வித்வானுமாகிய பிரமஸ்ரீ

## திரு. வீராசாமி அய்யங்கார் அவர்கள் இயற்றியவை.

திருமால் விண்ணுறை தேவரை முன்னம்
பாற்கடல் கடைந்து பருகச் செய்தனன்
அமுதினை மானிடர்க் களித்தில னென்னும்
அபவா தத்தினை யகற்றுதற் கன்றேன்
குருகுஹ தாச னெனும்பெயர் கொண்டு
அவனியி லவதரித் தருமறைக் கங்கமாம்
சாஸ்திர மாறனுட் சகலரும் புகழும்
எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகுமெனும்
இரண்டனுள் முன்னதா மினியநூற் கடலினைக்
குரவரை யின்றித்தன் கூர்மதி யென்னும்
மந்திர மதனால் மதித்ததிற் றோன்றிய
ஜோதிஷ தரங்கிணி என்னும் சுதையை
மண்ணுள விபுதர் மனமகி ழும்வகை
அளித்தது மன்றி யதனைக் கல்வியும்
செல்வமு மீகையும் சிறந்தநற் குணங்களும்
வம்ச முறையானே வாய்க்கப் பெற்றவன்
இளசைமா நகருக் கிறைவனெங் கோமான்
எட்டப்ப னென்னும் பட்டப் பெயரை
உடையவர்க் குரியதாய்ச் செய்துவப் பித்தனன்
தோன்றிற் புகழொடு தோன்றுக வென்னும்
சொற்களின் பொருளைச் சுவாதினஞ் செயும்
அற்புத விற்பன னுமிவ னியற்றிய
நன்னூல் தன்னைப் பன்முறை நவிலினும்
நயத்தரும் பண்புடை யாளர்நட் பாமால்.

---

முத்தமிழ்க் கவிஞர் நாகூர் முத்துப் புலவரவர்களின் பேரனும்
எட்டயபுரம் சமஸ்தான வித்வானுமாகிய மகா-ா-ா-ஸ்ரீ

## நாகூர் மூத்துப்புலவரவர்களியற்றியவை.

பொன்னு டெனத்திகழ் நன்னு டாகிய
பாரத பூமியில் சீர்மிகப் புனைந்து
செந்தமி முணங்குட னிந்திரை யும்மகிழ்ந்
தன்பிற் குரியார்க் கின்பமே பெருக்கும்
எட்டய புரத்தில் சட்டப் படியே
அரசு செலுத்தும் நிருப ராகிய
ராமக் குமார பூம னென்னும்
வெங்கடே சுரெட்ட சிங்கேறு மெச்சும்
எத்திசை யும்புகழ் வித்வ மரபில்
வந்தவ தரிக்கும் சுந்தர புருஷன்
குருகுக தாஸெனுந் திருமான் உலகின்
மன்னுயிர்க் கெல்லாம் நன்னிலை காட்டும்
ஆதர வாகிய "ஜோதிஷ தரங்கிணி"
என்னுமிந் நூலை நன்னூ லாகத்
தந்தனன் நூற்கெலாந் தந்துரை யென்கோ
கணிதம் கற்கத் துணிவோர் தமக்கு
முதலின் முறைபாய்ப் பதிநூ லென்கோ
அல்லது மயங்குநர்க் கொல்லென விளக்குந்
தெளிவா கியநல் லொளிநூ லென்கோ
பட்சங் களுடன் நட்சத் திரங்களும்
பக்குவ மாயமை லக்ன வகைகளும்
கிரக நிலையின் தரமும் வகுத்து
வெள்ளிடை மலையெனத் தெள்ளிதிற் காட்டும்
விதம்பல வாகிய கதம்ப மென்கோ
யாதிசைப் பேமிக் கோதிலா நூலை
புவியினுக் கணியாய்க் குவிவுற வியற்றி
என்றும் நிலவுந் தன்றுணைப் புகழ்பெற்
வரும்பே ராற்றலை அருளிய விறைவன்
ஈங்கிவற் கிதுபோற் பாங்கினின் றுதவி
நீண்ட ஆயுளும் வேண்டிய பவிசும்
யாண்டுந் தரவே வேண்டுகின் றனன்மாலே.

---

உ

# ஜோதிஷ தரங்கிணி.

## கர்த்தாவின் வேண்டுகோள்.

இற்றைக்கு முப்பதாண்டுகளுக்கு முன்னர் இவண் வந்துளவோர் ஜோதிஷர் எங்களது ஜாதகங்களிற் சிலவைகளைப் பார்வையிட்டவைகளுக்குப் பல்வகையான பலன்களைத் தனித்தனியாகக் கூறிக்கொண்டு வரும்போழ்தி லவணிருந்த யாமும் எமது ஜாதக பலன்களைத் தெரிய வவாவு படைத்துளேமெனச் சொல்லலு மன்னோர் தங்களது முன்னோர்களின் ஜாதகங்களை யறிந்துகொண்டதினின்றுந் தங்களது ஜாதகத்தைப் பார்க்காது வேறு ஜாதக மொன் றியற்று மாற்றல் பெற்றுளே னென்பதைத் தங்கட்கு மற்றுமிங் குளோர்க்குங் காட்டுவதிலிருந்து என்னாற் சொல்லியிருக்கும் வருங்காலத்திய பலன்களுமொத்து நடைபெறுமென்பது திண்ணம் என்பதையறிவீர்களென்றார். அன்னோ ருரைத்தவாறே யாண்டு குழுவியிருந்தோ ரனைவரும் வியக்குமாறு எமது கைவசம் முன்னுள்ள ஜாதகத்திற்கு விலகாத மற்றோர் ஜாதகத்தை யெழுதிக் கொடுக்க யாவரு மிறும்பூதெய்தினர். தசாபுக்தியினிருப்பிற் சிறிது காலம் வேறுபட்டிருந்ததென்பதே முன்னுள்ளதற்கும், அன்னோரா லியற்றப்பெற்றதற்கும் பேதமாகும். இவ்வாறெழுதிக்கொடுத்தோர் இந்த ஜில்லாவைச்சேர்ந்த காரிசாத்தான் என்றவோர் கிராமவாசியான ஜோதிஷர். இவர் ஜாதியிற் பூசுரராவர். ஆங்கிலப் பாடசாலைகளி லப்போது யாங் கல்வி பயின்றமையா லன்னோர்மாட்டு எமக்குக் கணித சாஸ்திரத்தில் வேண்டிய அறிவுக்குக் குறைவுபட்ட ஞானமிருந்த லெது காரணமாகுமென உசாவ அன்னோர், "நீவிர் பிற்காலத்தில் ஜோதிஷ ஞானவலு வாய்க்கப்பெற்றவராவதாக உமது ஜாதகங் காட்டுகின்றதால் நாளடைவில் கோசர முதலியன மாறுபடுங் காலங்களில் நீவிர் ஜோதிஷத்தில் விற்பன்னராக நியாயமிருக்கலாம்" என்றார். இயற்கையில்

ஜோதிஷ சாஸ்திரம் எமக்கு வேம்பினுங் கைப்பாக இருந்தது மன்றி அதில் போதிய நம்பிக்கையு மில்லாதிருந்தது காரணமாக அன்னோர் கூறியுள்ளவைகளைப் பதினைந்து வருஷ காலங்களாக முற்று மறந்துளோம். இதன்பின்ன ரோர்தினம் பசிநோயாற் பீடிக்கப்பட்ட வொருவர் எமதுகிரகத்துக்கு முன்னர்வீற்றிருந்த எம்மையணுகி அன்னோர் வரலாற்றினைக் கூற யாமு மன்னோர்மாட் டிரக்கங்கொண்டு சிறிதுபகாரமுஞ்செய்தனம்.* அதன்பின் அவருக்கு ஜோதிஷ சாஸ்திரத்திற் பிரக்ஞையுண்டென வறிந்து சிலஜாதகங்களை யெடுத்துக் கொடுக்க அவைகளுக்குப் பலன்களை அவர் விண்டது மிக்க வியப்பாகவே யிருந்தமையற்றி யெமக்குமச்சாஸ்திர வுண்மையை யறிய வவாவுறுத்த யாமுமதனைக் கற்றுக்கொண்டேம். ஆசானின்றி யோர் சாஸ்திரத்தை யெங்ஙனங் கற்றல் கூடுமெனில், "ஆம்" என்பேம். பூர்வ வாசனா பலமே காரணமெனலாம்.

"குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்."

என்ற பொய்யில் புலவர் வாக்கி னுட்பொருளைச் சிரமேற் கொண்ட சான்றீர்! யாம் விடுக்கு மோர் விண்ணப்பத்தைச் சிறிது கேண்மின். தங்கப் பிரகாசம்போல மிளிருந் தேசத்திற் சிறிது வடுக்கண் படும் சீழினிடமே ஈக்கள் செல்வதுபோ லல்லாமல் நூலினுட் காணப்படும் குணத்தினிடமே உங்களது நாட்டத்தைச் செலுத்துவீர்களாக. இதனுட் காணப்படுங் குற்றங்களை யாராயாது ஆதரிப்ப தெவ்வாறெனில், "இரப்பார்க்கொன் றீவார்மே னிற்கும் புகழ்." என்ற வேதவாக்கினை விதியாகக் கொண்டுளீர் ஆதலின் என்க. சாவித்திரி வெண்பாவின் ஆசிரியரான காலஞ்சென்ற சாமிநாதமுதலியார் கூறிய வண்ணம் இந்நூலை யியற்றக் காரணம் எமக்கே புலப்பட்டிலது. இந்நாட்டில்,

" இந்நூல்போல் நன்னூ லில்லையென்றோ—அன்று
எந்நூலும் என்னூலை மேம்படுத்த வேண்டுமென்றோ—அன்று
எந்நூலும் இந்நூலால் மேம்பட வென்றே—எனலாம்."

---

* எட்டயபுரம் சம்ஸ்தானத்தைச் சேர்ந்த கோவிற்பட்டிக் கருகாமையிலிருக்குங் கரிசற்குளம் சேத்திரை முத்தப் பிள்ளை யென்பார்.

கற்கும் ஊழும், கற்றோர்மாட்டுச் சாரும் பாக்கியமும் பெற்றில மெனினும், "ஓர் நூலை யியற்றவேண்டிய" தென்ற வோர் எண்ண மட்டுங் காரணமின்றி யெம்மி னுண்டாயது. இங்ஙனம் எண்ணுதற்கு மற்றோ ரஞ்சுவர்; யாமஞ்சேம்.

"நன்றறி வாரிற் கயவர் திருவுடையார்
நெஞ்சத் தவல மிலர்."

என்ற வாக்குக்கேற்க நிகழ்வது சகஜமன்றோ? "எண்ணுவது கூடும்; எண்ணியாங்கு முடித்தல் கூடுமோவெனில் ஆம்" எனவுங் கூடும்.

"வல்லான்கைக் கோலால் விழாத மாங்காயும்
அல்லான் கைக் கல்லால் விழவுங் கூடுமல்லவா?" என்றதை யொப்பவென்க.

இதனைக் கற்றதின் பயனாக யாங் கூறியுள்ள விஷயங்கள் பல நிகழ்ந்தன வென்பதனுள் எமது கருணாநிதியான அரயர் அவர்கள் மாட்டு யாம் பின்னிகழ்வனவாயுள்ள சம்பவங்களைக் குறித்த முன்னுரைகளில் **1914, 1915, 1921, 1924, 1925—1928**-ம் வருஷங்களில் எட்டயபுரம் சம்ஸ்தானத்தி னிகழ்ந்த விஷயங்கள் குறிப்பிடத் தக்கவைகள் என்றும். எமது ஜாதகத்தையுங் கீழே காட்டியுளேம். அதனையுற்று நோக்குவார்க்கு ஜோதிஷ சாஸ்திரத்தில் எமக்குள்ள ஆற்றலெத்தன்மைத்தென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோன்றதாம். சுபம்.

எட்டயபுரம்.
18—9—28.

எஸ். குருகுஹதாஸப் பிள்ளை,
நூலாசிரியர்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | சு | சூ | | | |
| ரா | ரா | | | | |
| பு | சூ-பு<br>ல<br>சனி<br>சங்-சு | ராசி சக்கரமும் நவாம்சமும் | | —— | ல |
| சே<br>வி | | சே | வி | கே | சங்<br>கே |
| | | | | சனி | |

# நூன் முகவுரை.

மனிதர்களில் முதல் மனிதனுக சிருஷ்ட்டிக்கப்பட்டவன் என்பதாகப் பைபில் நூலிற் கூறப்பட்டுள்ள ஆதாமுக்கு ஜோதிஷ நூலைத் தேவ அருளால் உபதேசிக்கப்பட்டதென்றும், அவரது வம்ஸத்தில் தலைமுறை தலைமுறையாக அந்தச் சாஸ்திரம் பயிலப்பட்டு வந்ததில் அவரது பின்சந்ததியாரான செத் என்பவர் ஜோதிஷ சாஸ்திரத்தில் மகா நிபுணராக விளங்க நோவாவின் காலத்தில் உலகம் ஜலப்பிரளயத்தால் அழிக்கப்படுவதையும் அத்துடன் ஜோதிஷ சாஸ்திரமும் அழிந்துவிடும் என்ற பயத்தைக்கொண்டு இரண்டு பெரிய ஸ்தம்பங்களில் பின் வருபவரின் நயங்கருதி அதனை அவரால் எழுதி வைக்கப்பட்டிருந்த தென்றும், அந்த ஸ்தம்பங்களை நேரில் தான் கண்டிருப்பதாயும் யூதர்களின் சரித்திராசிரியரான ஜோஸெப்ஸ் கூறியிருக்கிறார்.

ஏகசக்ராதிபதியான ஸீஸர் என்பவர் தன்னையொத்த வல்லரசர்களிடம் போர்புரியுங் காலங்களில் ஜோதிஷ நூலோரைக் கலந்துகொண்டபின்னரே போரையாரம்பிக்கவோ அல்லது அதனை நிறுத்திவிடவோ செய்வது வழக்கமாக இருந்தாரென்பார்.

வான சாஸ்திரத்தில் மகாமதியூகியாக விளங்கிய சர்ஐசக்நியூடன் என்பார் வான சாஸ்திரப் பாண்டித்திய மடைந்ததின் ஆராய்ச்சியின் காரணமாக ஜோதிஷ சாஸ்திரம் கிருஸ்து பிறப்பதற்கு ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்னமே ஆம்மான், சிசாக், ஒர்சஸ், மீம்னுன் முதலிய அரசர்களின் காலங்களிலிருந் திருப்பதாகச் சொல்லுகிறுர். எகிப்து நாட்டின் ஜோதிஷர்களால் செயிஸ் நாட்டில் அந்தசாஸ்திரம் பாவி நிகிப்சாஸ் என்ற அரசனுல் ஆதரிக்கப்பட்டதெனத் தெரியவருகிறது.

மிஸ்ரைம் குமாரரான காக்ராலுஷ் என்ற எகிப்து நாட்டின் முதல் அரசரின் காலத்தில் ஜோதிஷ சாஸ்திரம் ஓங்கி வளர்ந்ததென்றும் இவரே இஸ்லைாஸ் என்ற நகரத்தை நிர்மாணம் செய்தவரென்றும் இவர் வழியிற்றோன்றிய நீராஸ் என்ற அரயன் இராசிமண்டலங்கள் பன்னிரண்டையும் அவைகளைப் பொருத்துள்ள மற்றுமுள்ள விசேஷங்கள் யாவையும் சாஸ்திரோக்தமாக எடுத்துக் கூறியிருப்பன

யாவையுங் கவனிக்கின் அவருக்கு அந்த சாஸ்திரத்தில் மகா தேற்சியுண்டென்பதைக் குறிப்பிடுவதாக இருக்கிறதென்பார். இந்த வழியிலுதித்த அடின் என்ற ராஜனின் ஆக்ஷியில் ஜோதிஷசாஸ்திரத்திற்கு இருகண்மணிகளென ஹாருத், மாருத் என்றிருவர் விளங்கினர். இவர்களிருவர்களும் மனோதத்துவ நூலிலும் தேற்சியடைந்திருந்தனர் என்பார் சரித்திர நூலோர்.

எகிப்து தேசத்திய அரசரான பாரோ என்பவரால் இஸ்ரவேலர்கள் துன்புறுத்தப்பட்டபோது செங்கடல் யாத்திரையில் அக்கினி ஸ்தம்பம் பிரசன்னமானது உண்மையன்றோ? ஜோதிஷ சாஸ்திரத்தில் வல்லமை வாய்ந்திருந்த ஓர் பெண்மணியான நீடுர் என்பவள் டெலூக் அரசனின் ஆக்ஷியில் பெருங்கேடுவருவதாக இருந்ததை யறிந்து அந்த நாட்டின் தலைநகரில் பெரும் ஸ்தம்பம் ஒன்றை நிர்மாணித்து அதன் நாற்பக்கங்களிலும் யுத்த சன்னத்தமான சைனியங்களின் உருவங்களை யமைத்து எதிரிகள் வருகிற திசைக்கெதிராக உள்ள தூணின் பக்கத்தில் எழுதப்பட்டிருக்கிற சித்திரங்களை மட்டும் எதிரிகள்வருந்தருணத்தில் உடைத்துப் பொடியாக்குவதனுல் எதிரியின் சைனியமும் அதுபோலவே தூள்களாகிவிடு மென்ற சொல்லைநம்பி அவ்வாறு செய்யவும் அஃதுண்மையாகவே முடிந்தது. எதிரிகளும் துரத்தியடிக்கப்பட்டார்கள். இந்த ஸ்தம்பம் அழிக்கப்படும் காலவரை சுமார்நானூறு வருஷங்களுக்கு மேலாக எகிப்து நாடு எவ்விதக் கேடுமின்றியிருந்திருப்பதாகச் சரித்திரத்தில் காணப்படுகின்றது. இதனை மறுக்க வல்லார்யாவர்? இதுபோன்ற ஓர் சம்பவங் கலிங்கத்துப் பரணியில் முகரிராஜனின் சரித்திரத்தில் வந்திருப்பது நம்மவர் பலர்க்கு ஞாபக மிருக்கலாம்.

மேல் நாட்டாருள் அக் காலங்களில் நிகழ்ந்த இராஜாங்கப்புரட்சியிலுங் கூட ஜோதிஷ சாஸ்திரத்தின் பெருமை சிறிதேனும் கெட்டுவிடவில்லை. பாபிலோனியர்களும், மாஸிடோனியர்களும், ரோமர்களும் கிரேக்கர்களும், முகம்மதிய அரபியர்களும், பார்ஸிகர்களும் இந்த சாஸ்திரத்தில் மிக்க அபிமானமுடையவர்களாக இருந்தனர் என்பது தெற்றென விளங்குகிறது. வானின் கீழ்த்திசையில் ஓர் பெரும் ஜோதி தோன்றியதைக் கண்ட யாதவர்களில் சிலர் அத்திசையை நோக்கிச் செல்ல ஆங்கோர் குறிப்பிட்ட இடத்திற்கு வரவும் ஏசுநாதர் பிறந்திருக்கிறுர் என்ற சந்தோஷ சமாசாரத்தைக் கேட் டானந்தித்து

உலகத்துக்கும் சந்தோஷத்தை யூட்டினரென்பதை யறியாதா ரெவரே யுளர்?

ஜோதிஷ சாஸ்திரத்திற் தேர்ச்சியடைந்திருந்த அராபியர்கள் மகமதுநபியின் பிற்காலத்தைக் குறித்து அவரது இளம் பிராயத்திலேயே கூறியிருக்கிறார்கள். அவர்களில் இயூகிஸ் என்றவர் மகமதுநபியின் சிறியதகப்பனாரிடம், "இச் சிசு உலகத்துக்கு ஒப்பும் உயர்வுமற்ற ஓர் பெரும் மகானுபாவனாகும். இதின் உயிரைச் சிறிது கவனத்துடன் காத்துவரவேண்டும்" என்றார். மற்றொரு ஜோதிஷர் மகமதுவை பஸ்ரோராவிற் கண்டபோது பக்தியினிட்டால், "உலகநாயகனே! கருணைக்கடலே!" என்று அவரை விளித்து, "நீயே உலக ரக்ஷகன்" என்றாராம். இவ்வாறு எதுபற்றி இத்தகைய பெருங் கல்வியாளர்கள் நம்மைக் குறித்துச் சொல்லியதெனச் சிந்தித்துக்கொண்டிருக்குங்காலை ஓர்நாள் இரவில் இரண்டாகப் பிளந்துள்ள உலகம் மறுபடியும் ஒன்று சேர்ந்து கீழ்முனையும் மேல்முனையும் சந்தித்ததாகவும் கனவுகண்டார். உலகங்களை ஐபித்து பிளவுபட்டிருந்த மதங்கள் பலவற்றையும் ஒன்றாகச் சேர்க்கும் தன்மையையடைந்தவர் இவரே என்று காட்டுவதற்கென்றே இக்கனவை அவருக்குத் தூதனாக அனுப்புவிக்கப்பட்டது போலும்.

முதல் உஸ்மான் அரசன் காலத்தில் கீர்த்திபெற்றிருந்த ஷியூக் என்ற ஜோதிஷவல்லோன் இவ்வரசன் முன்பாக வந்து மிக்க கெம்பீரத்துடனும், வினயத்துடனும் யான் எலிஜா என்ற தீர்க்க தரிசியின் அருள்பெற்றவன். அவ்வருளைக்கொண்டு உனக்கு வரும் பிற்காலத்தை குறிப்பிடுகிறேன்: அதைச் சிறிது கேள். "கீழ்நாட்டில் நீ சூரியனைப் போல் விளங்குவாய். நின் அரசின் ஜோதி எங்கும் களங்கமறப் பிரகாசிக்கும். நின் சந்ததியார் மத்தியலோகம் ஏழையும் ஆக்ஷிபுரிவர்" என்றார். இதன் உண்மையைச் சரித்திரவாயிலாகத் தெரிந்துகொள்ளலாம். இவருக்குக் கொடுக்கப்பட்ட வெகுமதிகளையெல்லாம் மறுத்துவிட்டனர். ஆனால் ஓர் கலாசாலையை ஜோதிஷ சாஸ்திரத்தினிமித்தமும், சந்நியாசிகளின் சௌகரியத்தின் பொருட்டும் தன் நகரில் கட்டுவிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அதற்கிணங்கி அங்ஙனம் அதனைக் கட்டுவித்து அதன் பாதுகாப்புக்காக வேண்டிய பொருளும்

சாஸ்வதமாய் ஈந்திருக்கின்றனர். அஃது இன்னும் நிலையுற் றிருக்கின்றது.

ஆகாயத்தில் ஓர்வால்வெள்ளி தோன்றியதைக் கண்ணுற்ற தைமூர் என்ற அரசர் சண்டைக்குச் சன்னத்தமாக இருக்குங் காலத்திலிது தோன்றியதால் தனக்கு அபஜெயம் நேரிட்டு விடுமோ எனச் சந்தேகித்து அக்காலத்தில் அவரது இராஜாங்கத்தில் ஜோதிஷ சாஸ்திரத்தில் நிபுணராக விளங்கிய அப்துல்லாலிஸ்ஸாம் என்பவரைக் கேட்க அவர் அதற்குக் கூறிய விடையாவது, "அரச! நீ இப்போது ஒட்டமான் ஏகாதிபத்திய அரசனுன முதலாம் பேயிஜெட் என்பாருடன் செய்யக் கருதியிருக்கும் போரில் வெல்லுநர் எவரோ எனச் சந்தேகங் கொள்ளற்க. இப்போது காணப்பட்டுள்ள வால் நக்ஷத்திரம் உன்னுட்டின் மேற்குத் திசையிலிருப்பதுவும், மேஷராசியி லகப்பட்ட நாட்டினையும் பொருந்தியதா யிருக்கின்றது. இக்காலத்தில் நீ போர் தொடங்குவதானுல் வெற்றி யுன்பாலதே" எனச் சொல்லக் கேட்டனும் போர் நிகழலாயிற்று. அக்காலத்தில் நிகழ்ந்த பெரிய போர்களிலிது குறிப்பிடத் தக்கதோர் யுத்தமாகுமென்பார் சரித்திர ஆராய்ச்சியில் தேர்ந்த நிபுணர்கள். இதைத்தான் அங்கோரா யுத்தமெனச் சொல்வது.

இரண்டாவது முராட் என்ற அரசன் ஒருநாள் வேட்டையாடிவிட்டு அரண்மனைக்குத் திரும்பும்போது வழியி லோர் பாலத்தில் ஓர் சன்னியாசி உட்கார்ந்துகொண்டிருந்தான். வழியிற் போய்க்கொண்டிருக்கும் அரசனை நோக்கி ஆரூடமாகப் பின் வருமாறு கூறுவதாயினன். "ஏ அரச! உன் காலம் சமீபித்துவிட்டது; நீ இங்கு உன் முன்வினையின் கர்மானுபவங்களை அனுபவிக்கும் பாரப்தம் முடிவுக்கு வந்துவிட்டது. ஜோலி உனக்கு இங்கு வேறு இல்லை. சந்தோஷத்துடன் எமதூதர்களுடன் செல்வதே உன் அடுத்த காரியம்" என்ருர். அவ்வரயனும் சித்தமாகி வேண்டியவைகளைச் செய்து முடித்துக்கொண்டிருக்கும் மூன்றும் நாளில் உயிர் துறந்தனர். வைத்திய சாஸ்திரத்தில் கைதேர்ந்த நிபுணர்கள் பலரும், இராஜ தந்திர நிபுணர்களான அநேகரும், கல்வி கேள்விகளில் விற்பன்னர் எண்ணிறந்தவர்களுமாகக் குழுவியும் மரணம் நிச்சயமென அவர்களுக்கு முன்

தெரிவிக்கப்பட்டிருந்தும் அதனைத் தடுக்காது வாளாவிருந்தது என்னே என்று பரிகாசமாகச் சரித்திரத்தில் கூறியுளது.

இரண்டாவது முகமது அரசரின் காலத்தில் அவருக்கு வெற்றி நாளாபக்கங்களிலு முண்டென்றும், தனலக்ஷ்மியையும், ஜயலக்ஷ்மியையும் மணம்பூண்பவர் என்றும் ஜோதிஷ நூலோர் வகுத்துரைக்க அதன் பின் அவர் மகுடாபிஷேகமாகுங் காலத்தில் செவ்வாய்க்கிழமையாகவே யிருத்தல் வேண்டுமென்றும் வற்புறுத்தினர். இஸ்லாம் மதத்தினர்கொள்கையின்படி செவ்வாய்க்கிழமையும் வியாழக்கிழமையும் மூன்றாம் தினமாகவும், ஏழாம் தினமாகவும் வருவது சிறந்ததென்பது கோரான்புஸ்தகத்தின் கோட்பாடாகும் என்றதால் செவ்வாயன்றே முடிசூட்டப்பட்டார். இம்மன்னரது காலத்தில்தான் கிரேக்கர்கள் முற்றிலும் தோற்கடிக்கப்பட்டனர். கான்ஸ்டாண்டி நோப்பிளை ஜயித்தவரிவரே யாதலால் இவருக்கு "கான்ஸ்டாண்டி நோப்பிளின் வெற்றியாளர்" என்று மறுபெயரும் சரித்திரத்தில் காணலாகும். (Conqueror of Constantinople) மகா அறிவாளிகளாகவும், சகல சாஸ்திர நிபுணர்களாகவும், அருள்வாய்க்கப் பெற்றவர்களாகவும் இருந்த அரசாண்டார்களில் இவர் ஒருவராவர்.

முதலாவது ஸலீம் அரசரின்காலத்தில் டமாஸ் என்ற நகரத்தில் ஒருஜோதிஷன் இருந்தான். அவனிடம் அரசன் தனது வாழ்வின் நலங்குறித்துக் கேட்க, அதற்கு அவன் அம்மன்னர் வெற்றியுடையவராவரென்றும், எகிப்து நாட்டிற்கும் அரசராவார் என்றும், ஒன்பது வருஷ காலமே அவரது ஆளுகையின் கால அளவு என்றும் அதன் பின் அவரது புத்திரரான ஸுலேமான் ராஜரீகத்தில் ஒழுங்கு சிறிதும் தவறாமல் ஐம்பதுவருஷ காலம் அரசாண்டு தன் தகப்பனை ஒப்ப பெருங்கீர்த்தி வாய்க்கப் பெற்றும், சகலராலும் புகழ்ப்பெற்றும் நற்கதியை அடைய நியாயமென்றதையும் எடுத்துரைத்தனன். இவ்வுண்மைகள் சிறிதும் பிழைத்திலவாம். இவைகளையெல்லாம் சரித்திர வாயிலாகத் தெரிந்துகொள்ளலாம். இந்த ஸுலேமான் அரசன் ஹிஜிரா வருஷம் 900த்திற் பிறந்தார். சிம்மாசன மேறியது பத்தாம் மாதமாகும். வருஷமும், மாதமும் முழுத்தொகைகளாக இருப்பனவும் நீர்வகை அதிர்ஷ்டத்தின் அறிகுறியோரும்.

1572-ம் வருஷத்தில் அரசுபுரிந்த இரண்டாவது கிலீம் என்பார் காலத்தில் ஓர் வால் நக்ஷத்திரம் தோன்றியதை யறிந்த அம்மன்னன், இதன்பயன் என்னும் என்று ஜோதிஷசாஸ்திரிகளைக் கேட்க, அதற்கு அன்னோர், இற்றைக்கு நாற்பதாம் தினத்தில் மழையின் பாதையால் உலகத்துக்குப் பெரிய நஷ்டமுண்டாகலாம் என்று தெரிவதாகச் சொல்லினர். அவ்வாறே நாற்பதாவது நாளில் அளவிடக்கூடாத மழையினால் ஐரோப்பா ஆசியா கண்டங்களிற் பெரும்பாகம் நாச முற்றுவிட்டதும் அதன் பின்னால் இதுகாரணத்தால் உலகத்தினர்க்கு நிகழ்ந்த சம்பவங்களாதிய பலவிஷயங்களை சரித்திரம் புனைந்தோர் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கின்றனர். இந்நிகழ்ச்சியினை முன் னுரைத்தவர் ஓர் அராபிய ஜோதிஷராவர்.

மூன்றாவது முகமது என்பார் ஓர் சந்நியாசியைக்கண்டு பேசிக் கொண்டிருக்கும்போது அவரை ஜோதிஷர் எனத்தெரிந்து சில விஷ யங்களைக்கேட்க அவைகளுக்குப் பதில் கூறிக்கொண்டு வரும்போதே இம்மன்னருக்கு இதற்கு 56-ம் தினத்தில் மரணந்தப்பாது என்றார். அதன் உண்மையும் சரிவர முடிந்ததாம். எகிப்து நாட்டை ஜெயித் துத் தன் ஆக்ஷியை ஆங்கு நிலைநாட்டியுள்ள முன் சொல்லப்பட்ட சிலீம் முதலாவது அரசரால் கொண்டுவரப்பட்டுள்ள அபூர்வம் வாய்ந்தவைகளில் ஜோதிஷ சாஸ்திரமும் ஒன்றாகும். இந்தச் சாஸ்திரம் சமிக்ஞா அக்ஷரங்களால் எழுதப்பட்டுள்ளது. அதில் எகிப்து நாட் டில் உலகம் முடியும்வரை அரசு செய்பவர்களின் பெயர்களை ஒன்றன் பின் ஒன்றாக எழுதப்பட்டிருந்தன. அதில் முராட் நான்காவதாவாி ரின் பெயரும் அவருடைய மரணநிர்ணயகாலமும் குறிப்பிட்டிருப் பதைக்கண்டார். இதைக் காணலும் திகிலடைந்து புஸ்தகத்தை உடனே மூடிவிட்டு இதை இனி எவர்களாயினும்திறந்து விஷயங்களை அறிவார்களானால் அவர்களுக்கு என்னுடைய சாபம் பலிக்கக்கடவது என்று கோபித்து உரக்கக் கூவினர்.

மெக்காவிலிருந்து அதுசமயம் அங்கு போயிருந்த ஷிஸீஹ் என்ற ஓர் ஜோதிஷன் இந்த நான்காவது முராட் என்பவர் 1640-ம் வருஷம் அவர் பிறந்துள்ள ஷிவால் மீத்தில் இறந்துவிடுவது உறுதி யென்றுசொல்வதைப் பிறர்சொல்லக்கேட்டு முன்னினுமதிக கோபா

வேசங்கொண்டனர். இந்த மரணத்தினின்றும் தப்புவதானால் பரிகாரவகையில் தர்மமாதி செயல்களைச் செய்யும் வழியொன்று தவிர வேறு எதுவும் இருப்பதாகவுங் காணப்படவில்லை என்றனராம். அதற்கு இணங்கி அவ்வரசரும் ஏராளமான தர்மங்களை தன் ராஜ்யம் எங்கும் செய்விக்குமாறு கட்டளையிட்டும் சிறைச்சாலையி லடைபட்டிருந்த கைதிகளை விடுத்தும் கடைசியாக ஷிவால்மீ 16-ம் தேதியில் விண்ணுலகமடைந்தனர்.

பார்சிக தேசத்து அரசரான டாரியஸ் ஹிஸ்டாஸ்பிஸ் என்பார் காலத்தில் ஜாமாஸ்ப் (Gjamasp) என்று மறுபெயர் விளங்கிய அல்ஹாகிம் (மகாஞானி) என்னும் ஓர் ஜோதிஷர் இருந்தார். இவரை அவ்வரசரது துணைவர் என்றும் அவருக்கு அந்தரங்க மந்திரியென்றும் சொல்வார்கள். இந்த ஜோதிஷர் கிறிஸ்துநாதர் பிறப்பதைக் குறித்துத் தன்னுடைய காலத்திலேயே எழுதிவைத்திருப்பதாகவும் சரியான ஆதாரங்களைக் காட்டி நிரூபிக்கின்றனர். இந்த ஜோதிஷரின் வல்லமையைக் குறித்துள்ள விவகாரத்தில் டாக்டர் தாமஸ்ஹைடி என்பவர் பூர்வ நூலிலிருந்து போதுமான ஆதாரங்களை எடுத்து விளக்கி இவரை ஒப்பார் அவ்வரசரது காலத்தில் பதின்மரிருந்தனரென்றும், அவருள் இவர் ஆறுவதாவர் என்றும் கூறுநிற்பர். இது போல் விக்கிரமாதித்தன் சபையிலிருந்துள்ள நவமணிகளை ஒத்தாருள் மகாரிஷிவராக மிகிரர் ஒருவரை இவர் ஒத்தவர் போலும். இன்னேரும் மகமதுநபி தோன்றுவதையும் கூறியுள்ளார்.

பார்சிக தேசத்தில் கோராசன் என்றொரு நாடுண்டல்லவா? அந்நாடு இத்தகைய பெரியோருக்குத் தாய்போன்றதாகும். அங்குள்ளாரே ஜோதிஷ சாஸ்திரத்தில் அக்காலத்தில் வேறு எங்குள்ளாரினும் சிறந்து விளங்கினர். அங்கோர் சிறிய நகர் இருக்கின்றது. அதன் பெயர் ஜினபாட். (Genabad.) அந்நகரில் 700-வருஷகாலம் வரையில் ஜோதிஷ சாஸ்திரத்தில் தலைமுறை தலைமுறையாக இடையில் காலியின்றி ஜோதிஷ விற்பன்னர்களாக அபார ஞானத்துடன் வித்யாதரர்களைப்போல் இதே குடும்பத்தில் பிரகாசித்திருந்தனராம்.

டியோடோரஸ் சிகுலஸ் (Diodorus Siculus.) என்றவர் பூர்விக ரோம கிரேக்க சரித்திர நூலோரில் முக்கியமானவர்களில் ஒருவ

ராவதால் அவரின் கோட்பாட்டையும் இங்கு இது சம்பந்தமாக சிறிது ஆராய்வோம். ஹெர்குலீஸ் (Hesiod) என்றவர் இந்தச் சாஸ்திரத்தை கிரீஸ் நாட்டில் புகுத்தியதாகச் சொல்லுகிறார். புளுடார்ச் என்றவர் இந்தச் சாஸ்திரத்தை அங்கு ஹிஸியோட் கற்றுக்கொண்டார் என்கிறார். மற்றொரு பூர்வநூல் ஆசிரியரான பிலோஸ்ட்ராடஸ் டிராய் (Troy) நகர முற்றுகைக்கு முற்பட்ட காலத்திலேயே பாலாமீடஸ் (Palamedes) என்பவருக்கு இந்தச் சாஸ்திரத்தில் விற்பத்தியுண்டென்கிறார். அங்கு பலவகையான சம்பவங்களையும் காலத்தின் செழிப்பையும் தீமையுங் குறித்து முன் எச்சரிக்கைகளாகச் சொல்லியிருந்தவையெல்லாம் ஒத்துமிருந்ததெனச் சான்றுரைக்கின்றனர். ஆஸ்டியா ஜீஸ்ரின் காலத்தில் நிகழ்ந்த சூரிய கிரகணத்தின் சம்பவங்களைக் குறித்தும் அதனால் உலகத்துக்கு விளைந்த கேட்டினைப் பற்றியும் கிரகணம் சம்பவிப்பதன் காலத்துக்கு முன்னரே தேலீஸ் என்பார் கூறியுள்ளார்.

அப்பல்லோனியஸ், தியோனியஸ், எகிப்து, காலடியா, அரேபியா, பார்ஸீகம், இந்தியா முதலிய தேசங்களுக்குச் சென்று ஆங்காங்குள்ள தன்மைகளை இந்தச் சாஸ்திரத்தைப் பொருத்த மட்டுங் கற்றுக்கொண்டு திரும்பவும் தன் சொந்தத் தேசம் போயினர் என்றும், அவரை அக்காலத்தில் கடவுளின் அவதாரமாக நினைத்திருந்தார்களென்றும், அவரால் ஜோதிஷ சாஸ்திரத்தில் நான்கு கிரந்தங்கள் எழுதப்பட்டிருந்தன வென்றும், அவைகளனைத்தும் அக்காலங்களில் நிகழ்ந்த இராஜாங்கப் புரட்சிகளின் அந்தகாரத்தில் மறைவுற்று நசித்துவிட்டதென்றும் கூறுகிறார்.

லத்தின் மகா கவியாகிய விர்ஜில் எவ்வளவுக்கு எவ்வளவு காவியம், லக்ஷணம், அலங்கார முதலியவைகளில் அப்பாஷையில் சிறந்து விளங்கினரோ அவ்வளவுக்கு அவ்வளவு கணித சாஸ்திர விற்பன்னராகவும் விளங்கியதைத் தன்னுலியற்றிய நூலின் கதாநாயகனை ஈனியாஸ் என்பவனது ஜனனகாலத்தைக்குறிப்பிடும்போது வியாழன், சுக்கிரன், சூரியன் முதலிய கிரகங்கள் வலுவுற்றிருப்பதை நியாயவாயிலாகப் போதுமான ஆதாரங்களுடன் எடுத்துச் சொல்வதே கிறிஸ்துவுக்கு முந்தியகாலத்தில் ஜோதிஷ சாஸ்திரம் காவியங்களிலும்

அப் பாஷையில் ஏறத் தலைப்பட்டுவிட்டதென்றதைக் காட்டுகின்ற தல்லவா? அகஸ்டஸ் மன்னனும் ஜோதிஷ சாஸ்திரத்தில் பெரு மதிப்புடனிருந்திருக்கிறார்.

மிராண்டாலோ தலைவரான பிகுஸ் என்றவர் ஜோதிஷர்கள் அவருக்கு முப்பத்திரண்டாம் வயதில் மாரகம் என்று சொல்வதைக் கேட்டு அன்னோர் மாட்டு வீண் துவேஷங்கொண்டு உங்களது சாஸ்திர மனைத்தும் ஆதாரமற்றன. அவைகளைத் துணையாகக் கருதிச் சொல்லும் உங்களது கூற்றும் முற்றும் பிழையுள்ளனவாதலால் அவைகளை மறுத்து வேறு நூல் எழுதி எனது சுக்ஷியை நிரூபிக்கின்றேன் என்று சொல்லி நூல் எழுதி முடியுங்காலத்துக்குள்ளாக அவரது 32-ம் வயதில் வாய்மூடி மௌனியாகி வான்புக்கனர். இதுவே இவரது செயலுக்குத்தக்க கூலிபோலும்.

நாஸ்டிராடாமஸ் என்ற காலிக் ஜோஸியர் வெகு காலத்திற்குப் பின் நடக்கும் விஷயங்களை யெல்லாம் எழுதிவைத்திருப்பனவற்றிலிருந்து 1824-ம் வருஷம் டிசம்பர் மாதத்திய Gentlemen's Magazine என்ற சஞ்சிகையில் பிரான்சு தேசத்து அரசனான இரண்டாவது ஹென்றி என்பார் குதிரைப் பந்தயச் சண்டையில் கொலையுண்டிறப்பாரென்று இச்சம்பவம் நிகழ்வதற்கு மூன்று வருஷங்களுக்கு முன்னமே எழுதிவைக்கப்பட்டிருந்ததை எடுத்து விளக்கியுள்ளார். நாஸ்டிராடாமஸ் எழுதியிருப்பவைகளில் பிரான்சு தேசத்திய புரட்சி கலகமும் குறிக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இச்சம்பவங்கள் நிகழ்வதற்கு 250 வருஷங்களுக்கு முற்பட்டது இவ்விதம் எழுதிவைக்கப்பட்டிருக்கும் சாஸ்திரம்.

இத்தாலியாதேசத்து ஜோதிஷரான குபிடோபோனடஸ் என்பவர் இத்தாலியா தேசத்திலிருக்கும் மாண்ட்செர்ராட்த் தலைவரின் நகரம் ஒன்று முற்றுகைபோட்டபோது அவரும் அங்கு அது சமயமிருந்தபடியால் அச்சிற்றரசனைக் கூவி இப்போதிய காலம் உமதெனகிரகங்கள் எனத்துவதால் தைரியத்துடன் முற்றுகையை விடுவிக்கலாம். எதிரி முற்றிலும் தோற்கடிக்கப்பட்டு சின்னபின்னமாக வுடைந்தோடுவான். ஆனால் அந்நிகழ்ச்சியில் உமக்கும் ஓர் காயம்

முழங்காலில் ஏற்படுவதாக இருப்பதால் புண்ணேக்கட்டி ஆற்ற வால மான துணிகளும் கைவசமிருத்தல் அவசியமெனச் சொல்லியபடி அச்சிற்றரசன் வெற்றிபெற்றுனுகினும் முழங்காலில் காயமும் உண்டாகும் என்றது உண்மையாக நிகழ அதனே அவர் கைவசம் எடுத்துச் சென்ற சிற்றுத்துணியால் கட்டுவித்துச் சௌக்கியமாக இருந்தார் என்பார். இதன் பெருமையைச் சிறிது ஆராய்வோர்க்கே சாஸ்திரத்தின் பெற்றி இத்துணைத் தென்பது தெரியலாகும்.

இத்தாலியா தேசத்திலுள்ள பாஜுவா (Padua) என்ற நகரில் வாலன்டைன்நைபாட் என்ற அரிய ஜோதிஷர் ஒருவரிருந்தார். இவர் தன்னுடைய ஜாதகத்தை ஏதோ தற்செயலாகப் பார்த்துவிட்டுத் தனக்குள்ளே அதன் பலனேயும் நிதானிக்கலாயினர். அதன் பயனுகத் தனக்கு மரணம் சமீபித்து விட்டதெனக் கண்டும், அப்படி நிகழுஞ் சாவு பிறர் கை ஆயுத நிமித்தமெனத் தெரிந்து வெளியிலிருந்து எவ்விதத் தீங்குகளுந் தன்னேச் சாராதிருக்கும் வண்ணம் ஓர் பெருங் கட்டிடம் ஒன்றைக் கட்டுவித்து அதன் பாதுகாப்புக்குப் போதுமானபடி இருப்புக் கம்பிகளால் தடுக்குகள் வைத்து அதன் மத்தியில் குறிப்பிட்ட காலம்வரை யிருந்துவிட்டுப் பின்னர் திரும்பவும் வீடுசென்று சௌக்கியமாக இருக்கலாமென்ற நோக்கத்துடன் காப்பு போதுமானபடிக் கமைத்து அதன் மத்தியில் வேண்டிய ஆட்டுணேகளுடனு மிருக்கு மோர் தினத்தில் கொள்ளேக்காரர்களிற் சிலர் இரவி லந்தமார்க்கம் போகும்போது அதனேக் கண்ணுற்று, அஃது ஏதோ ஓர் இராஜகிரகமாக இருத்தல் வேண்டுமெனக் கருதி, அதனுட் புகுந்து, நிதியெதுவுங் காணப்படாமையால் அதனுள் வாசியான ஜோஸியனே அது இருக்குமிடத்தைக் காட்டித்தரல் வேண்டுமென்று பலாத்காரம் செய்து கடைசியாக அவனேத் தங்களுடைய வாளுக்கு உணவு ஊட்டிவிட்டு சௌக்கியமாகத் தங்கள் தங்கள் கிரகங்களுப் போய்ச்சேர்ந்தனராம். விதி விடாதென்பதையும் தெரிக.

பதின்மூன்றும் நூற்றுண்டிலிருந்த மிக்கேல்ஸ்காட்டு என்னும் ஜோதிஷர் பிரான்சு தேசத்து அரசனுன பெரிடரிக் இரண்டாவது என்பவரின் காலத்திய பலன்களேக் கூறிக்கொண்டு வரும்போது சமீபத்தில் நிகழ்வனவற்றுள் பெரும் சம்பவத்தைக் குறிப்பிட

வேண்டுமென்று அவ்வரசன் கேட்க உடனே ஜோதிஷர், மன்னரது வினாவிற்கு விடை பகர வேண்டியது அவசியமெனத் தெரிந்து, தாங்கள் கேட்டுக்கொள்ளும் வண்ணம் தங்களுக்குச் சமீபத்தில் நேரிடும் முக்கிய சம்பவம் தங்களது மரணமாகும். அங்ஙனம் தங்களது மரணம் பிளாரின்ஸிலே (Florence) யென்றும் இடத்தையுங் குறிப்பிட்டார். அவ்வரசர் பிளரின்சுக்குப் போகாதிருக்க வேண்டுமென்று எவ்வளவோ முன் எச்சரிக்கையிலிருந்தும், ஓர் அவசர நிமித்தம் அங்கு சென்று உடனே திரும்புவதாக உறுதி செய்துகொண்டு போனவர் அங்கே யமனுக்குப்பக்ஷணமாகிவிட்டார். இதே மிக்கேல்ஸ் காட் என்பார் தன்னுடைய மரணத்தைக் குறித்துச்சொல்லியதில் மண்டையில் கல்லாலடிபட்டு இறப்பதாகச் சொல்லியிருந்தனர். ஒருநாள் அவர் தொழுகையின் பொருட்டு கோயிலுக்குப் போயிருக்கையில் கட்டிடத்தின் உச்சியிலிருந்த கல் ஏதோ காரணத்தால் திடீரென்று உடைந்து விழுந்த வேகத்தில் அவரது மண்டையை நசுக்கி மரணத்துக்குக் காரணமாகவும் நின்றது.

ரிமாக்னு என்ற நகரில் பிறந்தவரான ஆண்டியோகஸ் டைபிர்டீஸ் என்பவரை ஒரு உத்தியோகஸ்தன் பாரிஸ் நகரத்தில் கொண்டு போய் விட அவர் அங்குள்ள சர்வகலாசாலைகளிலும், மடங்களிலுமுள்ள கல்வியாளர்களையடுத்து பௌதிக சாஸ்திரம், ரசாயன சாஸ்திரம், வைத்திய சாஸ்திரம், கணித சாஸ்திரம், தத்துவ சாஸ்திரம், தருக்கசாஸ்திரம், சரித்திர நூல், பூகோளம், சங்கீதம், சிற்பம் முதலிய எண்ணிறைந்த கலைகளில் மகா நிபுணத்துவமடைந்து, ஜோதிஷ சாஸ்திரத்திலு மத்தகைய சிரேஷ்டத்துவமடைந்து பல்லோர்களாலும் மகா விற்பன்னர் என்று கொண்டாடக்கூடிய நிலைமையுடையவராகினர். சகலகலா வல்லமையடைந்தபின்னர் தன் சொந்தமாகாணமான இத்தாலியா தேசத்துள்ள ரிமாக்னுவை யடைந்தார். அங்குள்ள தன் அரசனுக்கும், அவரைப்போன்ற வேறு சிற்றரசர்களுக்கும் வருங்காலங்களை முன்னுரைத்து அவர்களைக் கொடுங்கோன்மைக்காளாகாமலிருக்கவேண்டிய சாதனமுமாகுமென நம்பிக்கைகொண்டவரானர். அக்காலத்தில் ரிமாக்னு என்ற மாகாணம் பான்டோல் பாமாலாடெஸ்டா என்பவர் ஆக்ஷியிலிருந்தது. இருவர்களுக்கும் மிகைப் பான்மை முதிர்ச்சியடைந்து ஒன்றுபட்டனர். இவ

ரால் அக்காலத்தில் எழுதி விடுக்கப் பெற்ற ஜோதிஷப் புஸ்த கங்கள் அநேக சிற்றரசர்களின் தாறுமாறுமான செயல்களில் நின்று அவர்களை அப்போதைக் கப்போது விலக்கி ஆபத்தி னின்றுந் தப்புவித்தமையால் இவர் எல்லா அரசர்களாலுங் கொண்டாடப்பட்டுத் தெய்வத்தைப்போல பாவிக்கப்பட்டார். பலா பலன்களைச் சொல்வதில் மிக்க ஆற்றல் படைத்துள்ளார் என்றும், இவர் சொல்லியிருக்கும் விஷயங்கள் எதுவுமே நிகழா திருந்திருப் பதில்லை யென்றும் சரித்திரவாயிலாக அறிகிறோம். அவைகளில் மூன்று சம்பவங்களைமட்டு மிங்கு சொல்லி மற்றவைகளை விரிவஞ்சி நிறுத்திக்கொள்வோம். முதல் விஷயம் அவரது ஆப்த சிநேகிதனைக் குறித்துள்ளது. இரண்டாம் விஷயம் அவரைப்பற்றியதே. மூன்றும் விஷயம் அவனுடைய ரக்ஷகனும் அந்நாட்டுச் சிற்றரசனுமானவனைக் குறித்ததுவுமாம். இவ் வகையான சம்பவங்கள் நிகழப்போவதைக் குறித்து அவர் எழுதியுள்ள காலத்தில் அப்போதிய கால தேசவர்த்த மானமாதிய நிலைமைகளிலிருந்து எவருமே இவ்விதச் சம்பவங்கள் எப்போதும் நிகழாதென்றே ஊக்கங்கொண்டிருந்தனர். இவரது ஆப்த நண்பரான குபிட்டோடி போகினி என்பவர் அக்காலத்தில் சைனியங்களை நடாத்தும் தளகர்த்தர்களில் கீர்த்தியுடனும் தைரியத் துடனும் சிறந்து விளங்கியவர்களில் ஒருவராவர். அவரது நண்பர் களில் ஒருவரால் ஆதாரமற்றகாரணத்தைக்கொண்டு நேரிடுமென்றும், இரண்டாவது விஷயமாக அவர் (ஜோதிஷர்) தூக்கிலிட்டு சாவுக் குள்ளாவாரென்றும், மூன்றுவதாகக்குறித்துள்ளதில் ரிமாக்னுஅரசன் தரித்திரனுகி அதிக கேவலதசையில் ஆதரிப்பாரின்றி போலோக்நா (Bologna) ஆஸ்பத்திரியில் உயிர்துறப்பார் என்றும் காணப்பட்டன நாளடைவில் குபிட்டோ சைனியத்தில் பெரும் அந்தஸ்துள்ள உத்தி யோகம் ஒன்றை வகித்து பிறர்கொண்டாடுந் தன்மையில் இருக்கும் போது அச்சிற்றரசனின் மாமனுன ஓர் பிரபுவால் இச் சேனுதிபதி ரோமாபுரி போபூ என்ற மதாசாரியாரிடம் கலந்துகொண்டு சில நாட்டை கோவிலுக்கு தர்மாசனமாகக் கொடுத்துவிட யோசனை செய்து நமக்குத் துரோகமாக நடக்க எத்தனித்திருக்கிறுர் என்ற குற்றத்தை அவ் வரசனுக்குத் தெரிவித்தார். இதைச் சிறிதேனும் சீர்தூக்கிப் பார்க்காது உண்மையெனக் கொண்டு அவ்

வரசர் ஓர் சூழ்ச்சி செய்யலாயினர். தன்னுட்டிலுள்ள உத்தியோகஸ்தர்களுக்கும் பிரபுக்களுக்கும் ஓர் விருந்து செய்ய நிச்சயித்திருப்பதால் அதனை எல்லோரும் வந்து சிறப்பிவிக்க வேண்டுமென்ற ஓர் இராஜாங்க பகிரங்க விளம்பரம் செய்வித்தனர். அதற்குட்பட்டு குறிக்கப்பட்ட தினத்தில் எல்லோரும் வந்து சேர்ந்தனர். குபிட்டோவும், ஜோதிஷரும் அங்கு வந்திருந்தாருள் இருவராவர். விருந்து முதலியவைகள் ராஜவைபவங்களுடன் நிகழ்ந்து கொண்டிருக்கு மத்தியில் திடீரென்று குபிட்டோ குத்துண்டு உயிர் நீத்தார் என்று கிளம்பிய சொல் அங்கிருந்தார் யாவரையும் ஒருங்கே பிரமிக்குமாறு செய்துவிட்டது. ஜோதிஷரான டைபர்டீஸ் அவருக்கு ஆப்த சிநேகிதராகையால் போப்பிடம் சேனைத்தலைவர் கலந்துள்ள சதியாலோசனைதான் இக்கொலைப்பாதகத்துக்குக் காரணமாயிருக்கலாமென்று சொல்லல் சாத்தியமாவதுபற்றி அவரையும் சிறையில் காவலிட்டார். இதிலிருந்து சிலகாலம் கழிக்க எவருக்குந்தெரியாது தப்பித்துத் தன் உயிரை அன்றே ஞாணிட்டு வதை செய்துகொண்டார். இவ்விரு சம்பவங்களும் நிழ்ச்சியானவைகளிலிருந்து அரசனும் தன் கதியும் ஜோதிஷன் சொல்லியவாறே முடியலாகுமென்று சிந்தை கலங்கினவனானன். காரணமின்றி இவ்வுயிர்களிரண்டின் மரணத்துக்குப் பாத்தியப்பட்ட அச்சிற்றரசனை வேறு அவனையொத்த கொடுங்கோற்சிற்றரசரும் ரோமாபுரி போப்புஅத்தியக்ஷரும்குற்றம்சாட்டிஅன்னுன் நாட்டின் மேல் படையெடுத்துச் சென்று நாட்டைப்பிடிக்க, சிற்றரசன் ஓடி ஒளித்து உயிர் பிழைக்கலாயினர். அன்னவர் தன் இருகுமாரர்களாலும் இகழப்பட்டார். கொடுமையும் தீராததுமான நெடுநாட் பிணி அவரைத் தொத்திக்கொள்ள ஆங்கு கீர்த்தியுடன் விளங்கிய போலோக்னு (Bologna) ஆஸ்பத்திரியில் சிகிச்சைசெய்யப்பட்டு உயிர் துறந்தார். நல்லோருக்கு இடுக்கண் இழைத்தலின் பயனை உடனே அடைந்தனர். அரசன் அன்று கேட்பான் தெய்வம் நின்று கேட்கும் என்ற முதுமொழியும் இங்கு அம்மன்னரதுகொடுஞ் செயலால் மாறியது போலும்! இத்தகைய சம்பவங்கள் 15-ம் நூற்றாண்டில் நிகழ்ந்தன.

பிரான்சு தேசத்திய அரசரான லூயி(ஸ்) பதினுன்காவதாவர். ஜெனனமானபோது அவருடைய ஜாதகத்தை ரத்தினக்சிதமாக்

இழைத்துள்ள ஓர் ராசிசக்கரத்தில் அமைத்துப் போற்றிவந்தன ரென்ருல் அந்நாட்டில் ஜோதிஷ சாஸ்திரத்திற்கு அப்போதிருந்த பெருமையை இஃது நன்கு காட்டுகின்றதல்லவா?

இங்கிலாந்து தேசத்தில் அரசுபுரிந்த ஸ்டுவர்ட்டு மன்னர்களின் காலங்களில் ஜோதிஷ சாஸ்திரத்தில் தேற்சிபெற்ருேர் அநேகர் இருந்தனர். அவர்களில் உவில்லியம் லில்லி குறிப்பிடத்தக்கவராவர். ஜீவ உருவ எழுத்துக்களால் இங்கிலாந்து தேசத்துக்கு இனி நிகழ்வனவாயுள்ள இரண்டு சம்பவங்களை எழுதி 1651-ம்வருஷத்தில் பிரசுரம் செய்து வெளியிட்டனர். அவைகளில் முதற்சம்பவத்தை அநேக பிரேதங்கள் கிடப்பதாகவும், அவைகள் துட்பட்டிகளால் போர்த்தப்பட்டுச் சுற்றி வைக்கப்பட்டிருந்தன வென்பதாகவும், கோவிலில் சாவுமணி அடிக்கிறதாகவும், அநாதைகளாக மூடப்பட்டுக் கிடக்கும் பிரேதங்களையெல்லாம் வண்டியில் குப்பைகளைப் போட்டுக்கொண்டு போய்க் கொட்டுவதுபோல வண்டிவண்டியாகப் பிரேதங்களைப்போட்டுக்கொட்டிக்கொண்டிருப்பதாகவும், அவைகளைக் கொண்டு தோண்டிக்கிடக்கும் கல்லறைக் குழிகளை நிரப்புவதாகவும் காட்டியிருந்தது. இரண்டாவது சம்பவத்தை லண்டன் நகரிலிருக்கும் தேம்ஸ்நதியின் பாலத்திலிருந்து அந் நகரின் காக்ஷியைக் கண்ணுற்று நோக்குவதுபோலவும், அச்சமயம் அக்கினியின் சுவாலை நாலாபக்கங்களிலும் நகரத்தைச் சுற்றிக் கொழுந்துவிட்டெரிவதுபோலவும் தோற்றுவிக்கப்பட்டிருந்தது. இந்த இரண்டு வகையான சம்பவங்களும் உவில்லியம் லில்லி எழுதிவிடுத்த சிறிதுகால அளவிலேயே உலகமனைத்தும் பிரமிக்கும்படியாக நிகழ்ந்துவிட்டன. பிளேக் நோயால் லண்டன்மாநகரம் பீடிக்கப்பட்டு நாள்தோறும் ஆயிரம் ஆயிரமாக உயிர்கள் இறந்தமையும் லண்டன்மாநகரில் இதுகாரணமாக லக்ஷக்கணக்கான ஜனங்கள் வீணுக இறந்தமை கருதி ஜனங்கள் திகிலிற் பீடிக்கப்பட்டு அடைந்த கஷ்டமும் இத்தன்மையது என்று எவரே சொல்லவல்லார்? இது சம்பவித்த மறுவருஷத்தில் லண்டன்மாநகரம் பெரிய அக்கினிக்கு இரையாகியதில் நகரமே அழிந்ததும் சரித்திரவாயிலாக நமது ஸ்கூல்களில் படிக்கும் சிறுவரும் சிறுமியரும் அறிவார்கள். இத்தகைய சம்பவங்கள் உவில்லியம்லில்லி என்பார் 1651-ம் வருஷத்தில் எழுதி

விடுத்த புஸ்தகத்தில் காணப்பட்டவை 14-15 வருஷ காலங்களுக்குப் பின்னர் 1665-1666-ல் உண்மையெனக் காட்டிற்று. (1) உவில்லியம்லில்லி ஏதோசில காரணமாக இச்சம்பவங்கள் நிகழ்ச்சியின் போது ரிச் மாண்ட் பட்டணத்தில் குடியிருந்துவந்தார். இச்சம்பவங்களில் அக்கினி வாதையைப்பற்றியுள்ள மூலகாரணத்தை அவர் மூலந் தெரிந்துகொள்ள இச்சைகொண்ட மந்திராலோசனை (House of Commons) சபையார் அவரை அழைத்துக்கொண்டு வந்து தியின் காரண வகைக்கு முகாந்தரம் எதுவாகலா மென்றும் சாஸ்திரோக்தமாகச் சொல்லவேண்டுமென்றும் கேட்க, அதற்கு அவர் இச்சம்பவங்களைக் குறித்து ஆராய்ச்சி செய்தபோதே இப் பெருங் கேட்டின் காரணங்களைச் சாஸ்திரோக்தமாய்ச் சோதித்துள்ளேன். அங்ஙனம் என் சோதனையில் 15 வருஷங்களுக்கு முன் தெய்வகோபமேயென்று புலப்பட்டதேயன்றி வேறு எதுவுமே கிடைத்திலது. வீணான சந்தேகங்களைப் பிறர்மேல் நினைத்து இன்னும் தெய்வகோபத்துக்குப் பாத்தியப்படாமல் விலகிக்கொள்ளுங்கள் என்றார். இச்சம்பவங்களின் நிகழ்ச்சி இங்கிலாந்து மன்னரான இரண்டாவது சார்லஸ் (1660-1685) காலமாகும்.

இங்கிலாந்து தேசத்திய அரசரான முதலாவது சார்லஸ் என்றவர் உவில்லியம் லில்லி எழுதியுள்ள ஜோதிஷ சாஸ்திரத்தில் சில பகுதிகள் மார்ல்பரோ பிரபுவின் மாளிகையிலிருப்பதைத் தெரிந்து அவைகளையெடுத்து வாசித்துவிட்டு அந்த க்ஷணமே ஹாம்டன் கோர்ட்டுக்கச்சேரிக்கு ஆயிரம் பவுண் வேண்டுமென்று ஓர் உத்தரவைப் பிறப்பித்தார். அந்தத்தொகையை இந்த ஜோதிஷருக்கு ஆலோசனை ஊதியமாக (Consulting fees) க்கொடுத்துச் சிலவற்றைக் கேட்க அதற்கு, "நீர் எதுபற்றியும் மேல்திசையை நோக்கி இதுசமயம் போவதானால் உயிர்ச்சேதமே உம்முடைய முயற்சிக்குக் கூலியாகும்" என்று ஜோதிஷர் சொல்லியதைச் சிறிதேனும் கவனிக்காது அங்கு சென்ற காரணமாக 1649-ம் வருஷத்தில் தலை வெட்டுண் டிறந்தார். ஐயோ பாவம்! இங்கு இம்மன்னருக்கு விதிவழியன்றோ மதியோடியது போலும். எவ்வளவு இராஜாங்க வலுவுற்றிருப்பினும் முன்வினையின் பயனைக் கடக்குநர் எவரேயுளர் என்பார் கூற்று வீணாகுமா? வருங்காலமறிந்து சொல்லிய ஜோதிஷரின் சொற்கேட்டுச் சிறிது கவனத்

துடன் நடந்திருப்பாரேயானால் இச்சம்பவம் நிகழ்தற்கு நியாயமிருத்தல் கூடுமோ?

பெம்புரோக் பிரபுவான உவில்லியம் என்பவரைக் குறித்து லேடி. டேவி என்ற ஜோதிஷ சாஸ்திரமறிந்த ஓர் பெண்மணி அச்சிற்றரசனின் மாரககாலத்தை வரையறுத்துக்கூற, அங்ஙனங் குறிப்பிட்டுள்ள தினமும் வந்ததையறிந்த அப்பிரபு "இன்றிரவில் என் படுக்கையில் எனது உயிர் போவதாகச் சொல்லியுள்ளாளே. நான் மிக்க சௌக்கியத்துடன் இருந்துகொண்டிருக்கிறேன். இனிமேலாக அப்பேர்க்கொத்த பெண்மணிகள் சொல்லும் ஜோதிஷ பலன்களை நம்பமாட்டேன்" என்று பரிகாசமாகச் சொல்லிக்கொண்டு படுக்கைக்குச் சென்றவர், விடியும்போது பிரேதமாகவே படுக்கையில் காணப்பட்டார் என்றால் சாஸ்திரத்தின் பெற்றியினை ரூபிக்க இதனிலும் வேறு சான்றும் வேண்டுமோ?

நெப்போலியன் ஜாதகத்தில் சகடயோக முதலியவைகளையும் கர்மஸ்தானத்தில் சனி உச்சனாகி யிருப்பவைபோன்ற விஷயங்களை எல்லாம் ஒன்றுபடச் சேர்த்து பலன்களைக் கூறிய ஓர் பிரான்சு தேசத்து ஜோசியர் நெப்போலியச் சக்கரவர்த்திக்கு ஏற்பட்ட உயர்வின் கடைசிப்படிக்கு சென்றதும், அவரது அதிர்ஷ்டம் தலைகீழாக விழுந்து பிரிஷ்டனாவார் என்றார். இதுவும் சரியாக நிகழ்ந்த தல்லவா?

ஜெர்மனி சக்கரவர்த்தியான கெயிஸர் இரண்டாவது உவில்லியம் என்பார் புரிந்த போரின் சரித்திரம் நம்மவர் எல்லோருக்குந் தெரிந்த விஷயமாயினும், இது சம்பந்தமாக ஓரே விஷயங்கூறல் அவசியமென்பது பற்றி யதனையுங் கூறுவோம். இவரது இளம்பிராயத்தில் ஒருவரிடம் சென்று தன்னுடைய அதிர்ஷ்டத்தின் பயனையும் தன்னாட்டின் ராஜாங்கமுறையின் பிற்காலத்திய நலத்தையுங் குறித்து வினவ அதற்கு, முடிசூட்டப்படாது. அரசாண்டு காலஞ்செல்லும் மன்னருக்குப் பின் வருகிறவரும், குதிரைச்சவாரி செய்வதில் வழக்கத்துக்கு விரோதமாக குதிரையின் கடிவாளத்தை வலது கையிற் பிடித்துக்கொண்டு ஏறுபவருமான மன்னரின் காலமே ஜெர்மனி நாட்டுக்குப் புரழ்ச்சியும் மாறுதலுமான காலமாகுமென்று விடையளித்த பலவற்

றன் சந்தர்ப்பம் கருதி அவைகளை நீக்கி இவைகளை மாத்திரம் கூறலாயினோம்.

1902-ம் வருஷம் ஏழாம் எட்வர்ட் சக்கரவர்த்தியாருக்கு மகுடாபிஷேக தினம் குறிப்பிட்டு அதற்கு வேண்டிய சகல வைபவங்களும் ஏகாதிபத்தியத்துக்குரிய தன்மையில் நிகழ்ந்துகொண்டிருக்க மகுடாபிஷேக தினம் குறிப்பிடப்பட்டதற்கு ஒரு மாதத்திற்கு முன்னதாகவே பகிரங்கமான விளம்பரங்கள் மூலமாக ஜோதிஷ சாஸ்திர விதிகளை எடுத்துக்காட்டி அக்குறிப்பிட்ட தினத்தில் நடக்காதென்று நிரூபித்தனரன்றோ? சமீபத்தில் காலஞ்சென்ற திண்டுக்கல் கந்தசாமிபிள்ளை என்பார். இதனை அறிந்துளார் இதனை வாசிப்பவருள் பலரிருத்தல் கூடுமென்று நினைக்கின்றோம்.

1910-ம் வருஷத்தில் ஹாலீஸ்காமெட் என்ற ஓர் பெரும் வால்நக்ஷத்திரம் தோன்றியதை உங்களில் பலர் பார்த்திருக்கக்கூடுமல்லவா? அச்சம்பவம் நிகழ்ந்தபோது தேசமன்னருக்குள் சேதமேனும், உலகத்துக்கு உத்பாதமேனும் நேரிடலுக்கு முன்னறிகுறியாகக் கடவுளால் அனுப்பி வைக்கப்பட்ட எச்சரிக்கை இது போலும் என்று நம்மவருள் பலர் பேசிக்கொண்டதையும் அறிந்திருப்பீர்களல்லவா? அதன் பயன் ஏழாம் எட்வர்ட் சக்கரவர்த்தியின் மரணமெனக்காட்டிற்றென்பதையும் பின்னர் அறிந்திருப்பீர்களல்லவா? ஐரோப்பிய மகாயுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்னதான காலமான 1914-ம் வருஷம் மார்ச்சு மாதத்திய ஜோதிஷ சஞ்சிகையில் அதன் ஆசிரியரான பிர்ம்மஸ்ரீ ப. சூரிய நாராயணராயரவர்கள் 1914-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் சூரிய கிரஹணமும், சந்திரகிரஹணமும் அடுத்தடுத்து வரும் நிமித்தமாதிய காரணங்களைக் கொண்டு ஐரோப்பாவில் ஓர் சிற்றரசன் கொலைபடுவானென்றும், ஆஸ்திரியா தேசத்தைக் காரணமாகக் கொண்டு ஜெர்மனி மகா யுத்தத்திற்கு ஆரம்பிக்குமென்றும், அதில் மற்றைய வல்லரசுகளான பிரிட்டன், பிரான்சு, ருஷியா முதலியவைகளும் அவைகளுடன் அமெரிக்காவும் யுத்த அரங்கில் நின்று தங்கள் தங்களுக்கு ஏற்பட்டுள்ள யுத்தநாடகங்களை நடித்தேதீரவேண்டியதாகுமென்றும் அதனால் ஏற்படுகிற பின்னுள்ள கஷ்டங்களைத் தெளிவாகவும் சாதுரியமாகவும் எடுத்துக்காட்

டியிருப்பவைகளை நம்மவர்பலர் வாசித்தும் அவைகளின் உண்மையை அறிந்துமிருக்கிறோமல்லவா? இதனை மறுத்துக் கூறுபவர் மூடர்களாகவேனும் அன்றேல் வம்பர்களாகவேனும் இருப்பார்கள் என்பதைத் தவிர அவர்களை வேறு எதுவுமேசொல்ல எமக்கு நாவெழவில்லை.

கண்ணகியின் சாபத்தால் எரிஉண்ட மதுரையின் அதிதேவதையானவள் மதுரைக்கு ஏற்பட்டுள்ள ஓர்சாபத்தைக் கண்ணகிக்கு எடுத்துக்கூறும்போது பின் வருமாறு கூறுவதானாள். ஆடிமாதம் கிருஷ்ணபக்ஷத்து அஷ்டமியில் கார்த்திகைநக்ஷத்திரமும், வெள்ளிக்கிழமையும் கூடிய ஓர் நாள் மதுரைக்கு அக்கினியினால் அழிவும், அவ்வரசுக்குப் பழுதும் ஏற்படும் என்றது இன்றேயாதலால், நின்பொருட்டு அங்ஙனமாயது என்க. இதின் முழு விவரமும் சிலப்பதிகாரத்தில்* காண்க.

இவ்வாறு அரியதும் பெரியதுமான சாஸ்திரத்தை உலகினர் கற்று ஆத்மலாபத்தையும் அறிந்துகொள்ள வேண்டுமென்ற பரோபகார எண்ணத்துடன் மகாரிஷிகளால் இயற்றப்பட்டதாகும். இதை வேதத்தின் கண் என்றதாலும், பூர்வஜன்மகர்மத்துக்குத் தக்கவாறு பிறப்பு என்ற தன்மையையும் எடுத்துக்காட்டும் ஆற்றலமைந்திருப்பதுபற்றியும் இதனைத் தெய்வீகநூலென்றும்,இதனைக் கற்றுள்ள பெரியோரைத் திவ்யெக்ஞன் என்றும் இதனை உள்ளவா அறிவது திவ்ய திருஷ்டியாலுமே என்பதால் இதன் பெருமையைச் சீர்தூக்கிப் பார்க்கும் ஆற்றலை இதனை வாசிப்பவருக்கே விடுக்கின்றோம். மேனாட்டார் இதனை உலக சிருஷ்ட்டியின் காலத்தது என்பர் எனின், இதனை அநாதி எனச் சொல்லல் தவறுடைத்தோ? இந்தச் சாஸ்திரம் எல்லா மதத்தினர்க்குள்ளும் எல்லா ஜாதியினர்க்குள்ளும், எல்லா நாட்டிற்குள்ளும் எக்காலத்திலு மிருப்பதென்பதையும் தெய்வீகமாகப் போற்றப்படுகிற தென்பதையும் தெளிவுபடுத்துவதற்கே இம்முகவுரையை விரிவாக எழுதினோம். இச்சாஸ்திரம் பயில்வோர் இக்காலத்தில் ஆதரிப்பாரன்றி சிறுகவே

---

*கோச்செங்கட்சோழன், அரியநாயக முதலியார், தேசிங்குராஜன் முதலியவர்களின் சரித்திரங்கள் நம்மவருக்கு நன்கு தெரிந்தமையால் அவைகளை ஈண்டுக் கூறாது விடுத்தனம்.

யுள்ளார். வைத்தியம், சட்டம் முதலிய கலைகளைப்போல ஊதியம் கொடுப்பது வேறு எக்கலைகளுமில்லை என்பது யாம் அறிந்ததே. சங்கீதம், ஜோதிஷம் ஆகியவைகள் மங்கலடைந்துகொண்டு வருவதுடன் அவைகளின் பெருமைக்கும் இழிவு கூறுதலையும் கேட்டுளோம். வைத்திய சாஸ்திரத்தின் பெருமை ஒருவாறு இருக்க, அச்சாஸ்திரம் ஜோதிஷ சாஸ்திரவழிநின்று காலபலனை ஜோதிஷன் வாயிலாகக் கலந்துகொண்டு நோயாளியின் தன்மையை அறியும் வைத்தியனது சிகிச்சை முறையே மேலானதாகுமென்பது வைத்திய சாஸ்திரத்தின் மர்மமாகுமல்லவா? வைத்தியத்துக்கும் ஜோதிஷத்துக்கும் உள்ள சம்பந்தாசம்பந்தங்களின் விவரங்களை மூன்றும் புஸ்தகத்தில் விரிப்போம். ஜோதிஷ ஞானத்தை உண்மையில் அடையவிரும்பும் எவனும் தக்க ஆதாரமுள்ள நூல்களில் கூறப்பட்டுள்ள விஷயங்களை பொதுவிதியுடனும், சிறப்புவிதியுடனும் நன்கு தெரிந்து கணித முதலியவைகளில் போதுமான விற்பத்தி பெற்று அநுபோக வாயிலாக அநேக ஜாதகங்களுக்குள்ள பலன்களை தனக்குள்ளேயே நிதானித்து தவறுவனவாயுள்ளவைகளுக்குச் சமாதானங்களைக் கண்டுபிடித்து பழகிக்கொண்ட பின்னரே பல சாஸ்திரம் கூறத்துணிவு கொள்வானாகில் நலமாம். இங்ஙனமின்றி திடீரென பலன்களைச் சிறிது கற்றதின் பயனுகக் கூறல் வெட்கத்திற்கு இடனுவது அன்றி சாஸ்திரத்தின் பெருமைக்குச் சிறுமை ஏற்பட்டு இப்போது இருக்கும் நிலைமையினும் தாழ்வடைந்து விடுமென்பது திண்ணம். சாஸ்திரத்தில் போதுமான ஞானம் படையாதோர் கூறும் பலன் குருடன் கையில் கொடுத்த கண்ணுடியில் அவனுல் காணப்படும் உருவத்தைப் போன்றதாம். சுபம்.

முகவுரை முற்றிற்று.

---

# ஜோதிஷ தரங்கிணி.

காப்பு.

"உலகெலாம் புரக்கு மொருதனிச் செங்கோல்
அலகிலா மகிமை யாற்றல்சால் பரமன்
திருவருள் மல்குக திருவருள் மல்குக
கருதிய கருமங் கைவரற் பொருட்டே."

வான் சிறப்பு.

*நாகமண் டலமிலகு கிரகங்க ளெனவுமொளிர் நட்சத் திரங்க ளெனவும்
நவிலுமெண் ணில்லாத சோதிவடி வங்களே நலமிடர் கடந்து மிளிரும்
ஏகனங் குமையுண்டு பண்ணியங் ஙனமிருத் தியதுங்க ளிடமி ருந்தே
எழுகின்ற பலவகைச் செயல்களிட மாய்நின்று மெந்தமக் கட்கு மற்றுந்
தேகமுறு சீவரா சிகளுக்கு மிடையினிற் சேர்நன்மை தீமை களையும்
திகழுமுற் பாதங்கள் முதலெவற் றையுமாழ்ந்து தெளிவுற் றிலங்கு கணிதச்
சாகர மடுத்தவல் லவர்தெரிந் தவனியர் தமக்கறி வுறுத்தி முன்னந்
தக்கவா றெச்சரிக் கையிலிருந் தொழுகிவரு தற்காக வேண்டி யன்றே.

## பிரதமாப்பியாசம்.

1. ககோள சக்கரத்தை 360 சமபங்குள்ள பாகைகளாக வகுக்கப்பட்டிருக்கின்றது.

2. அப்படி சமபங்குள்ள 360 பாகைகளடங்கிய ககோள சக்கரத்தை 12 ராசிகளாக வகுக்கப்பட்டிருக்கின்றது.

3. ஆகவே இராசி ஒன்றுக்கு 30 பாகைகளாகின்றன.

4. இப்படிக்கு வகுக்கப்பட்டுள்ள இராசி மண்டலங்கள் 12 அடங்கிய ககோள சக்கரத்தை மேஷராசி முதல் மீனராசி யீறுக எண்ணிக்கண்டதில்

* இது ஓர் ஆங்கிலச் செய்யுளின் மொழிபெயர்ப்பு.

5. மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என முறையே ஒன்றன் பின் ஒன்று வருவது காண்க.

| | | | |
|---|---|---|---|
| மீ | மே | ரிஷ | மிது |
| கு | சக்கரம். | | கட |
| ம | | | சிம் |
| த | வி | து | கன் |

6. ஒவ்வொரு ராசிக்கும் இரண்டேகால் நக்ஷத்திரங்கள் விதம் 12 ராசிகளுக்கும் 27 நக்ஷத்திரங்கள் வந்தவை யறிக.

7. இந்த 27 நக்ஷத்திரங்களையும் அஸ்வதி முதல் ரேவதி யீறாக கணக்கிடல் முறையாதலால் அஸ்வதி, பரணி, கார்த்திகை, ரோகணி, மிருகசீரிஷம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம், உத்தரம், ஹஸ்தம், சித்திரை, ஸ்வாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி என முறையாக எண்ணல் வழக்கம்.

8. பாதம் என்ற சம்ஸ்கிருத மொழிக்கு நான்கில் ஒருபாகமாகிய கால் என்பது பொருள்.

9. நக்ஷத்திர மொன்றுக்கு நான்கு பாதங்கள் விதம் 27 நக்ஷத்திரங்களுக்கு 108 பாதங்களாவதால்

10. இராசி ஒன்றுக்கு ஒன்பது பாதங்களாக பன்னிரண்டு ராசிகளுக்கும் 108 பாதங்கள் என்றதால்

11. ஒரு ராசிக்குள்ள 9 பாதங்கள் அதாவது ஒன்பது கால்களான 2¼-நக்ஷத்திரங்களே ஒரு ராசியிலிருப்பவையென்றும் அது பற்றியே 12 இராசிகளுக்கும் 27 நக்ஷத்திரங்கள் என்றுங் கண்டுகொள்க.

12. இராசிகள் 12ல் ஆண் இராசிகள் 6. பெண் ராசிகள் 6.

13. ஒற்றை இராசிகள் இரட்டை இராசிகள் என்றும் ஆண் பெண்ராசிகளை முறையே குறிப்பிடுதலுமுண்டு.

14. ஆண்ராசிகளாகிய ஒற்றை ராசிகளை ஓஜை ராசிகள் என்றும் பெண் ராசிகளாகிய இரட்டை ராசிகளை உக்ம ராசிகள் என்றும் சொல்லப்பெறும்.

15. நக்ஷத்திரங்கள் ஒவ்வொரு ராசிக்கும் பாத ளவுப்படிக் குள்ள விளக்கம்.

(1) அஸ்வதி 4 பரணி 4 கார்த்திகை 1 பாதங்களும், மேஷத்திலும்,

(2) கார்த்திகையில் பின் 3-ம், ரோகணியில் 4ம், மிருகசீரிஷத்தில் 2 பாதங்களும் ரிஷபத்திலும்,

(3) மிருக சீரிஷத்தின் பின் 2-ம், திருவாதிரையில் 4-ம், புனர்பூசத்தில் முன் 3 பாதங்களும் மிதுனத்திலும்,

(4) புனர் பூசத்தில் கடைசி 1-ம், பூசத்தில் 4-ம், ஆயில்யத்தில் 4 பாதங்களும் கடகத்திலும்,

(5) மகத்தில் 4-ம், பூரத்தில் 4-ம், உத்திரத்தில் முதல் 1-பாதங்களும் சிம்மத்திலும்,

(6) உத்திரத்தில் பின் 3-ம், அஸ்தத்தில் 4 ம், சித்திரையில் முன் 2-பாதங்களும் கன்னியிலும்,

(7) சித்திரையில் பின் 2-ம், சுவாதியில் 4-ம், விசாகத்தில் முன் 3 பாதங்களும் துலாத்திலும்,

(8) விசாகத்தில் கடைசி 1-ம், அனுஷத்தில் 4-ம், கேட்டையில் 4 பாதங்களும் விருச்சிகத்திலும்,

(9) மூலத்தில் 4-ம், பூராடத்தில் 4-ம், உத்திராடத்தில் 1 பாதங்களும் தனுசிலும்,

(10) உத்திராடத்தில் பின் 3-ம், திருவோணத்தில் 4-ம், அவிட்டத்தில் முன் 2 பாதங்களும் மகரத்திலும்,

(11) அவிட்டத்தில் பின் 2-ம், சதயத்தில் 4-ம், பூரட்டாதியில் முன் 3 பாதங்களும் கும்பத்திலும்,

(12) பூரட்டாதியில் கடைசி 1-ம், உத்திரட்டாதியில் 4-ம், ரேவதியில் 4 பாதங்களும் மீனத்திலும் இருப்பவை காணப்பட்டதால், இராசிகள் 12-க்கு 108 நக்ஷத்திர பாதங்கள் என்றது.

16. இந்த நியமப்படிக்குள்ள இராசிமண்டலம் ஆகாசமென்ற அகண்ட வெளியில் நாள் ஒன்றுக்கு ஒரு தடவை கிழக்கிலிருந்து மேற்கே சுழலுகின்றது.

17. கிரகங்கள் எல்லாவற்றிலும் பூமிக்கு அதிக நெடுந் தூரத்தில் சனியும், அதற்கு ஒன்றன்பின் ஒன்றாக வியாழனும், செவ்வாயும், சூரியனும், சுக்கிரனும், புதனும், சந்திரனுமாம். அவைகள் பூமியை மேற்கிலிருந்து கிழக்காகச் சுற்றி நகர்கின்றன.

17. (a) கிரகங்களின் பெயர்:—(1) சூரியன். (2) சந்திரன். (3) செவ்வாய். (4) புதன். (5) வியாழன். (6) சுக்கிரன். (7) சனி. (8) இராகு. (9) கேது. ஆக மொத்தம் ஒன்பது கிரகங்கள்.

18. கால புருஷனின் லக்ஷணம்:—

1. மேஷம் சிரசாகவும்
2. ரிஷபம் முகமாகவும்
3. மிதுனம் கழுத்தும் புஜமுமாகவும்
4. கடகம் நெஞ்சாகவும்
5. சிம்மம் வயிறாகவும்
6. கன்னி இடுப்பாகவும்
7. துலாம் அடிவயிறும் நாபியுமாகவும்
8. விருச்சிகம் மர்மஸ்தானமாகவும்
9. தனுசு தொடைகளாகவும்
10. மகரம் முழங்கால்களாகவும்
11. கும்பம் பிரிஷ்டபாகமாகவும்
12. மீனம் பாதங்களாகவும்

கருதப்படுவதாய் மகாரிஷிகள் மொழிந்திருக்கின்றனர்.

19. இராசிமண்டலத்தின் வடிவங்கள்:—

1. மேஷம்:—ஆட்டின் உருவத்தைப் போலவும்
2. ரிஷபம்:—எருதின் உருவத்தைப்போலவும்
3. மிதுனம்:—வீணையைக் கையிலேந்திய ஓர் ஸ்திரியும், கதாயுதத்தைத் தரித்த ஓர் ஆணும் ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்யும் பாவனையான உருவத்தைப் போலவும்
4. கடகம்:—நண்டைப்போன்ற உருவமாகவும்,
5. சிங்கம்:—மிருகராஜனான சிங்கத்தைப் போன்ற வடிவமாகவும்,
6. கன்னி:—ரம்மியமான தேகத்தோடு கூடிய ஓர் சிறுமி (கன்னியானவள்) கப்பலின்மீதிருந்துகொண்டு தன் கையில் தானியக்கதிரையும் தீபத்தையும் ஏந்திக்கொண்டிருக்கும் பாவனை போன்றதாகவும்
7. துலாம் :— கையில் தராசு ஏந்திக்கொண்டு தெருவிலிருக்கும் வணிகனின் தோற்றம் போலவும்,
8. விருச்சிகம்:—தேளைப்போலவும்
9. தனுசு:—வில்லை முன்புறமும், பின்புறமுமாகத் தரித்துக் கொண்டு இடுப்பின் கீழ் குதிரையின் வடிவம் போன்ற ஓர் வில்லாளியை ஒத்ததாகவும்
10. மகரம்:—முதலையின் சரீரம் போலவும், முன்பார்வையில் மானின் முகம் போலவும் காணப்படும் தோற்றமாகவும்
11. கும்பம்:—கையில் குடமேந்திய ஓர் மனிதனைப்போன்ற தோற்றமாகவும்
12. மீனம்:—இரண்டு மீன்களைத் தலைமாடு கால்மாடாகச் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கும் உருவத்தைப்

போலவும் இருப்பதாகக் கருதப்படுதல் தவ றாகமாட்டா தென்பது மகாரிஷிகளின் கொள்கை.

குறிப்பு:—இராக்காலங்களில் நக்ஷத்திரக்கூட்டங்களை இடைவிடாது கவனித்து வருபவர்களுக்கு இதன் உண்மை தெரியவரும்.

20. இராசிகளுக்குரிய கிரகங்கள்:—

1. மேஷத்துக்கு அதிபதி செவ்வாய்.
2. ரிஷபத்துக்கு அதிபதி சுக்கிரன்.
3. மிதுனத்துக்கு அதிபதி புதன்.
4. கடகத்துக்கு அதிபதி சந்திரன்.
5. சிம்மத்துக்கு அதிபதி சூரியன்.
6. கன்னிக்கு அதிபதி புதன்.
7. துலாத்துக்கு அதிபதி சுக்கிரன்.
8. விருச்சிகத்துக்கு அதிபதி செவ்வாய்.
9. தனுசுக்கு அதிபதி வியாழன்.
10. மகரத்துக்கு அதிபதி சனி.
11. கும்பத்துக்கு அதிபதி சனி.
12. மீனத்துக்கு அதிபதி வியாழன்.

21. (a) சூரியன், செவ்வாய், வியாழன் ஆண் கிரகங்கள்.
(b) சுக்கிரன், சந்திரன் பெண் கிரகங்கள்.
(c) சனி, புதன் அலிக்கிரகங்கள். இவைகளில் புதன் பெண் அலிக்கிரகம், சனி ஆண் அலிக்கிரகம்.
(d) சாயா கிரகங்களான இராகு ஆண் கிரகமாகவும், கேது அலிக்கிரகமாகவும் சொல்வது வழக்கம்.

22. மூல திரிகோணங்களும் சுக்ஷேத்திரங்களும்:—

1. மேஷம்—செவ்வாய்க்கு மூலதிரிகோணராசி. விருச்சிகம் சுக்ஷேத்திராசி.
2. ரிஷபம்—சுக்கிரனுக்கு சுக்ஷேத்திராசி. துலாம் மூலதிரிகோணராசி.

3. மிதுனம்—புதனுக்கு சுக்ஷேத்திராசி. கன்னி புதனுக்கு மூலத்திரிகோணராசி.
4. கடகம்—சந்திரனுக்கு சுக்ஷேத்திராசி.
5. சிம்மம்—சூரியனுக்கு மூலத்திரிகோணராசி.
6. தனுசு—வியாழனுக்கு மூலத்திரிகோணராசி. மீனம் வியாழனுக்கு சுக்ஷேத்திராசி.
7. மகரம்— சனிக்கு சுக்ஷேத்திராசி. கும்பம் சனிக்கு மூலத்திரிகோணராசி.
8. ரிஷபம்—சந்திரனுக்கு மூலத்திரிகோணராசி.

23. கிரகங்களின் உச்சராசிகள்:—

1. சூரியனுக்கு உச்சம் மேஷராசி.
2. சந்திரனுக்கு உச்சம் ரிஷபராசி.
3. செவ்வாய்க்கு உச்சம் மகரராசி.
4. புதனுக்கு உச்சம் கன்னிராசி.
5. வியாழனுக்கு உச்சம் கடகராசி.
6. சுக்கிரனுக்கு உச்சம் மீனராசி.
7. சனிக்கு உச்சம் துலாராசி.
8. இராகுவுக்கு உச்சம் ரிஷபராசி.
9. கேதுவுக்கு உச்சம் விருச்சிகராசி.

24. நீசராசிகள்:— எந்த கிரகம் எந்த ராசியில் உச்சமாகின்றதோ அந்த ராசிக்கு 7ம் ராசி அந்தக் கிரகத்துக்கு நீசராசியாகும்.

1. சூரியன் உச்சனக நிற்கும் மேஷத்துக்கு 7-ம் ராசியான துலாம் சூரியனுக்கு நீசராசி.
2. சந்திரன் உச்சனக நிற்கும் ரிஷபத்துக்கு 7-ம் ராசியான விருச்சிகம் சந்திரனுக்கு நீசராசி.
3. செவ்வாய் உச்சனக நிற்கும் மகரத்துக்கு 7-ம் ராசியான கடகம் செவ்வாய்க்கு நீசராசி.
4. புதன் உச்சமாக நிற்கும் கன்னிக்கு 7-ம் ராசியான மீனம் புதனுக்கு நீசராசி.

5. வியாழன் உச்சனாக நிற்கும் கடகத்துக்கு 7-ம் ராசியான மகரம் வியாழனுக்கு நீசராசி.

6. சுக்கிரன் உச்சனாக நிற்கும் மீனத்துக்கு 7-ம் ராசியான கன்னி சுக்கிரனுக்கு நீசராசி.

7. சனி உச்சனாக நிற்கும் துலாத்துக்கு 7-ம் ராசியான மேஷம் சனிக்கு நீசராசி.

8. இராகு உச்சனாக நிற்கும் ரிஷபத்துக்கு 7-ம் ராசியான விருச்சிகம் ராகுவுக்கு நீசராசி.

9. கேது உச்சனாக நிற்கும் விருச்சிகத்துக்கு 7-ம் ராசியான ரிஷபம் கேதுவுக்கு நீசராசி.

25. இராசிகளும் மூலதிரிகோண அளவுகளும்.

1. மேஷத்தில் செவ்வாய்க்கு 18 பாகை வரையிலும்
2. ரிஷபத்தில் சந்திரனுக்கு 27 ...
3. கன்னியில் புதனுக்கு 5 ...
4. துலாத்தில் சுக்கிரனுக்கு 10 ...
5. தனுசில் வியாழனுக்கு 13 ...
6. கும்பத்தில் சனிக்கு 20 பாகை வரையிலும் மூலத்திரிகோணங்களாகும். அதற்கப்பாற்பட்டு மீதியிருப்பன அந்தந்த கிரகங்களின் சுக்ஷேத்திரங்களாகும்.

26. கிரகங்களின் உச்சபாகை அளவு:—

1. சூரியனுக்கு மேஷத்தில் 10-ம் பாகை.
2. சந்திரனுக்கு ரிஷபத்தில் 3-ம் பாகை.
3. செவ்வாய்க்கு மகரத்தில் 28-ம் பாகை.
4. புதனுக்குக் கன்னியில் 15-ம் பாகை.
5. வியாழனுக்குக் கடகத்தில் 5-ம் பாகை.
6. சுக்கிரனுக்கு மீனத்தில் 27-ம் பாகை.
7. சனிக்குத் துலாத்தில் 20-ம் பாகை.

27. முன்னம் 24-வது அயிட்டத்தில் காட்டியுள்ள கிரகங்களின் நீசராசிகளில் சூரியன் முதல் சனி ஈருக 10, 3, 28, 15, 5, 27, 20 பாகைகளில் முறையே அவைகளுர்குரிய நீசபாகைகளாம்.

28. ராசிகளின் பலவகையான பேதங்கள்:—

1. சிரோதய ராசிகளென்றும், 2. பிரிஷ்டோதய ராசிகளென்றும், 3. சிரபிரிஷ்டோதய ராசியென்றும் வகுக்கப்பட்டுள. அவைகளில் மிதுனம், சிம்மம், கன்னி, துலாம், விருக்ஷிகம், கும்பம் இவை ஆறும் லக்கினமாகில் சிரோதயம்; மேஷம், ரிஷபம், கடகம், தனுசு, மகரம் இவைஐந்தும் லக்கினமாகில் பிரிஷ்டோதயம்; மீனம் லக்கினமாகில் சிரபிரிஷ்டோதயம்.

29. இராப் பகல்களில் வலுஉள்ள ராசிகளின் விபரம்:—

1. மேஷம், ரிஷபம், கடகம், தனுசு, மகரம், மிதுனம் இரவில் வலு உள்ளன.
2. சிங்கம், கன்னி, துலாம், விருக்ஷிகம், கும்பம், மீனம் பகலில் வலு உள்ளன.

30. இராசிமண்டலத்தின் மற்ரேர் பிரிவு:— சரம், திரம், உபயம் என முவ்வகையாம்.

| | சரம். | திரம். | உபயம். |
|---|---|---|---|
| 1. | மேஷம் | ரிஷபம் | மிதுனம் |
| 2 | கடகம் | சிம்மம் | கன்னி |
| 3. | துலாம் | விருக்ஷிகம் | தனுசு |
| 4. | மகரம் | கும்பம் | மீனம் |

31. மற்ரேர் பிரிவு:—

| | பூர்ணஜலராசி. | அர்த்தஜலராசி. | பாதஜலராசி. | நிர்ஜலராசி. |
|---|---|---|---|---|
| 1. | மீனம் | கும்பம் | மேஷம் | மிதுனம் |
| 2. | கடகம் | ரிஷபம் | துலாம் | சிம்மம் |
| 3. | மகரம் | தனுசு | விருக்ஷிகம் | கன்னி |

32. மற்றோர் பிரிவு:—

| | நரராசி. | பசுராசி. | கீடராசி. | ஜலசரராசி. |
|---|---|---|---|---|
| 1. | மிதுனம் | மேஷம் | விருச்சிகம் | கடகம் |
| 2. | கன்னி | ரிஷபம் | | மகரத்திற்பிற்பாதி |
| 3. | துலாம் | சிம்மம் | | மீனம் |
| 4. | தனுசின்முற்பாதி | தனுசின்பிற்பாதி | | |
| 5. | கும்பத்தின்முற்பாதி | மகரத்தின்முற்பாதி | | |

நரராசிகள் லக்கினங்களாகில் வலு. ஜலராசிகள் லக்கினத்துக்கு நான்காம் ராசிகளாகில் வலு. கீடராசி லக்கினத்து ஏழாம் ராசியாகில் வலு. பசுராசிகள் லக்கினத்து பத்தாம் ராசியாகவரின் வலு என்க.

33. நரராசிகள் பகற்பொழுதிலும், பசுராசிகள் இராப்பொழுதிலும், கீடராசியும் ஜலசரராசிகளும் சந்தியாகாலங்களிலும் பலமுடையன.

குறிப்பு:—29ம் அம்சத்தில் சொல்லியிருப்பதையும் இத்துடன் ஒப்பிட்டுக் கவனிக்க.

34. இராசிகளின் நிறங்களின் விவரம்:—1. மேஷம்-சிவப்பு, 2. ரிஷபம்-வெளுப்பு, 3. மிதுனம் - பச்சை, 4. கடகம்-சிவப்பு, 5. சிம்மம்-புகைநிறம், 6. கன்னி-பலவர்ணம், 7. துலாம் - கறுப்பு, 8. விருச்சிகம்-பொன்னிறம், 9. தனுசு - பொன்னிறம், 10. மகரம்-வெளுத்ததும் இருண்டதுமான மஞ்சள், 11. கும்பம் - இருண்ட வெளுப்பு, 12. மீனம்-துய்யவெள்ளை.

35. கிரகங்களின் செயல்களிற் பிறந்தோர்களின் லக்ஷணங்களும் நிறமுதலியவைகளும்:— கோபம், நிதானமான சரீர அமைப்பு, தேன்நிறம் போன்ற கண்கள், இருண்ட சிவப்பு வர்ணம், பித்த குணம், உஷ்ணம், தேகசௌக்கியம், குட்டை ரோமம், நிதானமான உயரம் ஆகிய இவைகள் சூரியனுக்கும்,

2. பொது நிறம், நிதானமான உயரம், ரம்மியமும் பொருத்தமுமான வாக்கு, மெலிந்து உருண்ட சரீரம், ஜலுப்பு, வாயு முதலியவைகளைச் சந்திரனுக்கும்,

3. இரத்தம் பரந்த கண்கள், கோபம், வெளுத்தும் சிவந்துமுள்ள நிறம், பித்த குணம், சஞ்சல மனம், தேக ஆகிருதி, புத்திக் கூர்மை, வீரம், யுத்தப்பிரியம், காம இச்சை முதலியவைகளைச் செவ்வாய்க்கும்,

4. பசுமை நிறம், பெருங்கல்வி, பிறர்க்கு நற்புத்தி புகட்டலில் சாமர்த்தியம், வேடிக்கையும் விநோதமும் ஆழ்ந்த கருத்தும் அடங்கிய சொல்வன்மை. உற்சாகம், பிறர்க்கு இணங்கல், கெட்ட ஸ்திரிகளின்மேல் இச்சைகொள்ளலாகிய இவைகளைப் புதனுக்கும்,

5. தடித்ததும் அழகுள்ளதுமான சரீரம், மஞ்சள் நிறத்தோடு சேர்ந்த சொர்ன காந்தி, நன்மார்க்கம், சிலேஷ்ம திரேகம், பொன் நிறம் போன்ற கண்கள், ரோமங்கள், சகல சாஸ்திர பாண்டித்தியம், வாக்கு வல்லமை முதலியவைகளை வியாழனுக்கும்,

6. பலிஷ்டத்துவம், அழகுள்ள சரீரம், வர்ணகாந்தி, ஆண் மக்களையும் பெண்மக்களையும் கவரும்படியான அழகு, சிறுத்த ஆகாரம், நூதன சாமான்களில் பிரியம், இருண்டு சுருண்டதுமான ரோமங்கள், அழகானகண்கள், மேலான குணங்கள், சந்தோஷகரம் ஆகிய இவைகளைச் சுக்கிரனுக்கும்,

7. சோம்பல், மெலிந்து உயர்ந்த சரீரம், கறுப்பு நிறம், மஞ்சள் கண், தடித்தரோமம், கொடுமை, ஹடம், பாபக்கிருத்தியம், அவலக்ஷணமான நீண்ட பற்கள், வாயுரோகம், கடுமையானவார்த்தை, அடிமைத்தனம், தாழ்மை ஆகிய இவைகள் சனிக்குமாம்.

36. கிரகங்களின் முக்குண லக்ஷணங்கள்.

| | | |
|---|---|---|
| 1. | இராஜஸ குணம் | புதன், சுக்கிரன். |
| 2. | சத்துவ குணம் | சூரியன், சந்திரன் வியாழன். |
| 3. | தமோ குணம் | செவ்வாய், சனி. |

37. கிரகங்களின் காரகங்கள்.

1. சூரியன்:—பிதிர், பிராபவம், ஆத்மா, மங்களகரம், இராஜ்யாதிகாரம்.
2. சந்திரன்:—மாதுர், மனசு, இராஜானுக்கிரகம்.
3. செவ்வாய்:—பூமி, சகோதரம், ஞாதி, பலம், வீரம், தைரியம், ரோகம்.
4. புதன்:—கல்வி, விவேகம், அம்மான், சிநேகிதன், கணிதம், சிற்பம்.
5. வியாழன்:—அறிவு, தனம், சரீரபுஷ்டி, புத்திரன், பந்து, ஞானம்.
6. சுக்கிரன்:—வாகனம், கிரகம், களத்திரம், ஆபரணம், உடை, வாசனை வஸ்துக்கள், காமம்.
7. சனி:—அடிமை, விபத்து, ஜீவனுமுயற்சி, ஆயுள்.

(குறிப்பு) இராகு தகப்பனைப்பெற்ற பாட்டனுக்கும், கேது தாயைப்பெற்ற பாட்டனுக்கும் காரகர்களாம்.

38. கிரகங்களுக் குரித்தான சுவைகள் (ருசி).

சூரியனுக்கு உரைப்பு, சந்திரனுக்கு உப்பு, செவ்வாய்க்கு கசப்பு, புதனுக்கு அறுவகையிலும், வியாழனுக்கு இனிப்பு, சுக்கிரனுக்கு புளிப்பு, சனிக்கு துவர்ப்பு.

39. தாது மூல ஜீவ கிரகங்கள்.

| தாது | மூலம் | ஜீவன் |
|---|---|---|
| இராகு | சுக்கிரன் | குரு |
| சந்திரன் | சூரியன் | புதன் |
| செவ்வாய் | | |
| சனி | | |

40. கிரகங்களின் ஜாதி வர்ணவகை.

1. வியாழனும், சுக்கிரனும் பிராமண ஜாதி.
2. சூரியனும், செவ்வாயும் க்ஷத்திரிய ஜாதி.

3. சந்திரனும், புதனும் வைசிய ஜாதி.

4. சனி சூத்திர ஜாதி.

(குறிப்பு) இராகுவைப் பறைய ஜாதி யென்றும், துருக்கர் முதலிய மறு சமயத்தினரின் ஜாதி யென்றும் கூறுவார் சிலர். இந்த நான்கு வர்ணங்களுமில்லாத ஐரோப்பா அமெரிக்கா முதலிய கண்டங்களிலுள்ளவர்களுக்கு இது எவ்விதம் பொருந்தும் என்பார்க்கு விடையை 3-ம் புஸ்தகத்தில் குறிப்பிடப்படும். இப்போது ஜோதிஷ சாஸ்திரம் கற்பவர்களுக்கு வேண்டிய விதியை மட்டும் கூறுவதால் அவைகளை இங்கு சொல்லாது விடுத்தோம்.

41. கிரகங்களுக்குரிய தேவர்கள்.

(1) சூரியன் அக்கினிக்கும், (2) சந்திரன் வர்ணனுக்கும், (3) செவ்வாய் சுப்பிரமணியருக்கும், (4) புதன் விஷ்ணுவுக்கும், (5) வியாழன் இந்திரனுக்கும், (6) சுக்கிரன் சசிதேவிக்கும், (7) சனி பிரமாவுக்கும் உரியவைகள்.

42. கிரகங்களும், திசைகள் (திக்குகள்) எட்டும்.

(1) சூரியன் கீழ் திசைக்கும், (2) சுக்கிரன் தென்கிழக்குத் திசைக்கும், (3) செவ்வாய் தென்திசைக்கும், (4) புதன் வடதிசைக்கும், (5) வியாழன் வடகிழக்குத்திசைக்கும், (6) சனி மேல்திசைக்கும், (7) சந்திரன் வடமேற்குத் திசைக்கும், (8) இராகு தென்மேற்குத் திசைக்கும் அதிபர்களாவர்கள்.

43. இராசிகளும் திசைகளும்.

1. மேஷம் சிம்மம் தனுசு—கீழ்த்திசை
2. ரிஷபம் கன்னி மகரம்—தெற்குத்திசை
3. மிதுனம் துலாம் கும்பம்—மேல்திசை
4. கடகம் விருச்சிகம் மீனம்—வடதிசை

} யைக்குறிக்கும்.

44. கிரகங்களுக்குரிய வாசஸ்தலங்கள்.

(1) சூரியன்-கோவில் முதலிய இடங்களிலும், (2) சந்திரன்-ஸ்நான கட்டமுதலிய இடங்களிலும், (3) செவ்வாய்-அக்கினி சம்

பத்தமான இடங்களிலும், (4) புதன்-ஸ்திரிசம்போகத்திற்குரிய இடங்களிலும், (5) வியாழன்-பணம் சேமித்து வைக்கப்பட்ட இடங்களிலும், (6) சுக்கிரன்-படுக்கையறை (சயனக்கிரகம்) முதலியவைகளிலும், (7) சனி-நோயாளிகளிடத்தும், ஔஷததசாலைகளிலும், அசுத்தமான இடங்களிலும், (8) இராகு-பாம்புப் புற்றுப்போன்ற விஷஜந்துக்களின் வளை முதலியவைகளிலும், (9) மாந்தி-பிரேதங்களை வைக்குமிடங்களிலும், கொலைக்களங்களிலும் வாசஸ்தலமாகக் கொண்டிருக்கின்றனர்.

45. கிரகங்களுக்கு உரிய ஆடைகள்.

(1) சூரியனுக்கு - முரட்டாடையும், (2) சந்திரனுக்கு - வெளுப்பான புது ஆடையும், (3) செவ்வாய்க்கு - தீக்கங்குபட்டு எரிந்து சிவப்புவர்ணமான ஆடையும், (4) புதனுக்கு-கிழிந்ததும் நனைந்ததுமான ஆடையும், (5) வியாழனுக்கு-புதிதும் பழையது மில்லாத (Neither new nor old) ஆடையும், (6) சுக்கிரனுக்கு - பலமான ஆடையும், (Strong and durable but not rough) (7) சனிக்கு-கந்தலும், பெரும் ஒட்டையானதுமான ஆடையும், (8) இராகுவுக்கு - பலநிறமுள்ள வஸ்திரங்களின் துண்டுகளைப் போட்டுத் தைக்கப்பட்ட ஆடையும், (9) கேதுவுக்கு-அநேக வர்ண நூல்களால் செய்யப்பட்ட ஆடையும், (10) மாந்திக்கு-அழுக்குப்படிந்துள்ள ஆடையும் என்க.

46. கிரகங்களும், பஞ்சலோகம், நவரத்னமாதியவைகளும்.

(1) சூரியன்-செம்புக்கும், (2) சந்திரன்-ரத்தினங்களுக்கும், (3) செவ்வாய்-தங்கத்துக்கும், (4) புதன்-பித்தளை வெண்கலம் முதலியவைகளுக்கும், (5) வியாழன்-வெள்ளிக்கும், (6) சுக்கிரன்-முத்துக்கும், (7) சனி-இரும்புக்கும், (8) இராகு-ஈயத்துக்கும், (9) கேது-இரும்பு ஒழிந்த கருப்புநிறம் போன்ற மற்ற உலோகங்கள் நிலக்கரி முதலியனவுக்கும், (10) மாந்தி - கனிகளில் வெட்டியெடுக்கப்படும் கறுத்தநிற வஸ்துகளுக்கும் என்பார். இதன் விரிவையும் தானியாதிகளின் கிரகங்களையும் பின் சொல்லப்படும்.

47. கிரகங்களின் மற்றத் தன்மைகள்.

(1) செவ்வாயும் சூரியனும்-ஊர்த்துவ (மேல்நோக்கும்) கிரகங்கள். (2) சுக்கிரனும் புதனும்-கடைக்கண் பார்வையுள்ள கிரகங்கள்.

(3) வியாழனும் சந்திரனும்-சமநோக்குள்ள கிரகங்கள். இராகுவும் சனியும் பாதி நோக்குடைய கிரகங்களாம்.

48. கிரகங்களின் பார்வையின் பொதுவிதி.

சூரியன் முதல் சனியீறாகவுள்ள கிரகங்களுக்கெல்லாம் 7-ம் பார்வை. அதாவது தானிருக்கும் இடத்துக்கு 7மிடத்தைப் பார்க்கும் பலம். இதற்குப்புறநடை.

49. (1) சனிக்குள்ள 7ம் பார்வையோடு 3-10ம் பார்வைகளும், (2) செவ்வாய்க்குள்ள 7-ம் பார்வையோடு 4-8ம் பார்வைகளும், (3) வியாழனுக்கு ஏற்பட்ட 7-ம் பார்வையோடு 5-9ம் பார்வைகளும் விசேஷமென்ப. ஆயினும் இந்த விதிக்கும் மற்றோர் 2ம் புறநடை விதியும் உண்டு. அதனைப் பின்னர் குறிப்பிடுவோம்.

50. கிரகங்களின் மித்துருசத்துரு பாவங்களின் விவரம்.

1. சூரியனுக்கு-சந்திரன் செவ்வாய் வியாழன் நேசம்.
2. புதன் சமம்.
3. சுக்கிரனும் சனியும் பகை.

51. 1. சந்திரனுக்கு-சூரியனும் புதனும் நேசம்.
2. செவ்வாய் வியாழன் சுக்கிரன் சனி சமம்.

52. 1. செவ்வாய்க்கு-சூரியன் சந்திரன் வியாழன் நேசம்.
2. சுக்கிரனும் சனியும் சமம்.
3. புதன் பகை.

53. 1. புதனுக்கு-சூரியனும் சுக்கிரனும் நேசம்.
2. செவ்வாய் வியாழன் சனி சமம்.
3. சந்திரன் பகை.

54. 1. வியாழனுக்கு-சூரியன் சந்திரன் செவ்வாய் நேசம்.
2. சனி சமம்.
3. புதனும் சுக்கிரனும் பகை.

55. 1. சுக்கிரனுக்கு-புதனும், சனியும் நேசம்.
2. செவ்வாயும், வியாழனும் சமம்.
3. சூரியனும் சந்திரனும் பகை.

56. 1. சனிக்கு-புதனும், சுக்கிரனும் நேசம்,
2. வியாழன் சமம்,
3. சூரியன் சந்திரன் செவ்வாய் பகை.

57. இராகுவுக்கு வியாழன் சுக்கிரன் சனி நேசம்.

58. கேதுவுக்கு வியாழன் சுக்கிரன் சனி நேசம்.

59. கிரகங்களை சுபர்கள் என்றும், பாபர்கள் என்றும் இரு வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அவைகளில்

1. சுபகிரகங்களாவன:—வியாழன் சுக்கிரன் வளர்பிறைச் சந்திரன் சுபர்களுடன் சேர்ந்த புதன் ஆகியவைகள்.
2. பாபர்கள்:-சூரியன் செவ்வாய் சனி தேய்பிறைச் சந்திரன் பாபர்களுடன் சேர்ந்த புதன் ஆகியவைகளுடன் ராகு கேது மாந்தியும் சேர்த்துக்கொள்ள.

60. 1. இராஜத்துவமுடைய கிரகங்கள் — சூரியனும் சந்திரனும்.
2. சேனாதிபதித்துவமுடைய கிரகம்—செவ்வாய்.
3. யுவராஜத்துவமுடைய கிரகம்—புதன்.
4. மந்திரத்துவமுடைய கிரகங்கள்—வியாழனும், சுக்கிரனும்.
5. குற்றேவல் புரியுந் தன்மையுடைய கிரகம்—சனி.

61. கிரகங்களுக்குள்ள கால பலங்கள்.

1. சனி சந்திரன் செவ்வாய் இராக்காலங்களிலும்,
2. சூரியன் வியாழன் சுக்கிரன் பகற்காலங்களிலும்,
3. புதன் பகலிலும் இரவிலும் பலமுடையதென்றறிக.

62. சுபகிரகங்களுக்கு வளர்பிறையிலும், பாபகிரகங்களுக்கு தேய் பிறையிலும் பலமுடையதென்பதையறிக.

63. கிரகங்களுக்குள்ள பலாபலன்களின் தன்மையும் கிரக யுத்தங்களும்.

1. சூரியனுக்கு உத்தராயனத்திலும், சந்திரனுக்கு தெக்ஷுணாயனத்திலும் பல மதிசரிக்கும். செவ்வாய் முதலிய மற்றக் கிரகங்கள் வக்கிரமாகும்போது பலமுடையனவாகும். செவ்வாய் புதன் வியாழன் சுக்கிரன் சனி முதலியவைகளிலேதேனும் ஒன்று மற்றொன்றுடன் ககோளசக்கரத்தின் வடபாதியில் நகர்ந்துசெல்லுங் காலங்களில் கிரகயுத்தம் நடப்பதாகும்.

64. கேந்திரம் என்பது 1 லக்கினம். லக்கினத்துக்கு 4, 7, 10 ஆகிய 4 ராசிகளாம். அதாவது 1, 4, 7, 10 ராசிகள்.

65. திரிகோணம் என்பது 1 லக்கினம். லக்கினத்துக்கு 5, 9-ம் ராசிகள் ஆகிய 3 ராசிகள் 1, 5, 9-ம் ராசிகள்.

66. பனபரம் என்பது இலக்கினத்துக்கு 2, 5, 8, 11ஆுள்ள ராசிகள்.

67. ஆபோக்லிமம் இலக்கினத்துக்கு 3, 6, 9, 12ஆுள்ள ராசிகள்.

68. முன்னம் 40-ம் அம்சத்தில் கிரகங்களின் ஜாதி பேதங்களைக் கூறினோம். இங்கு இராசிகளின் ஜாதி பேதங்களைக் காட்டுவோம்.

| | பிராமணர். | க்ஷத்திரியர். | வைசியர். | சூத்திரர். |
|---|---|---|---|---|
| 1. | மீனம் | மேஷம் | ரிஷபம் | மிதுனம் |
| 2. | கடகம் | சிம்மம் | கன்னி | துலாம் |
| 3. | விருச்சிகம் | தனுசு | மகரம் | கும்பம் |

(குறிப்பு) மீன முதல் கும்பமீறாக தலை கீழாக வரிசையிற் சொல்லப்பட்டிருக்கிறதையும் அவைகள் ஒவ்வொரு வகுப்பைச் சார்ந்த திரிகோண ராசிகளாக இருப்பதையுங் கவனிக்க.

69. பலிஷ்டத்துவத்தில் கிரகங்களின் வரிசை.

சனிக்குச் செவ்வாய் வலுத்தும், செவ்வாய்க்கு புதன் வலுத்தும், புதனுக்கு வியாழன் வலுத்தும், வியாழனுக்கு சுக்கிரன் வலுத்தும், சுக்கிரனுக்கு சந்திரன் வலுத்தும், சந்திரனுக்கு சூரியன் வலுத்து மிருக்கிறார்கள்.

70. ஆறு வகையான பலங்கள்.

(1) ஸ்தானபலம், (2) திக்குபலம், (3) காலபலம், (4) திருக் (பார்வை)பலம், (5) சேஷ்டாபலம், (6) நைஸர்கிகபலம் என்பனவாம்.

71. சுபகிரகங்களின் பார்வையினால் நல்ல பலனும் பாபகிரகங்களின் பார்வையினால் கெட்ட பலனும் உண்டாகும் என்க.

72. கிரகங்களை பாசகன் போதகன் காரகன் வேதகன் என்றும் சொல்லப்படும். இத்தன்மைகளை யடையுங் கிரகங்களை கவனித்து ஜாதகத்துக்கு பலன் சொல்ல வேண்டிய தவசியமாகையால் அவைகளையும் இங்குகுறிப்பிடல் அவசியம். இன்ன இன்ன கிரகம், இன்ன இன்ன கிரகத்துக்கு இத்தனாவது ஸ்தானங்களிலிருந்தால் அது இன்ன இன்ன தன்மையை யடைந்து மித்துருத்துவத்தில் மிருந்தோ அல்லது இளைத்தோ அல்லது சத்துருத்துவமடைந்தோ அல்லது சமபாவமடைந்தோ பலத்தைக் கொடுக்கும் தன்மையை யடையும்.

| | பாசகன். | போதகன். | காரகன். | வேதகன். |
|---|---|---|---|---|
| 1. சூரியனுக்கு | 6ல் சனி | 7 செவ்வாய் | 9ல் வியாழன் | 11ல் சுக்கிரன் |
| 2. சந்திரனுக்கு | 5ல் சுக்கிரன் | 9ல் செவ்வாய் | 11ல் சனி | 3ல் சூரியன் |
| 3. செவ்வாய்க்கு | 2ல் சூரியன் | 6ல் சந்திரன் | 11ல் சனி | 12ல் புதன் |
| 4. புதனுக்கு | 2ல் சந்திரன் | 4ல் வியாழன் | 5ல் சுக்கிரன் | 5ல் செவ்வாய் |
| 5. வியாழனுக்கு | 6ல் சனி | 8ல் செவ்வாய் | 7ல் சந்திரன் | 12ல் சூரியன் |

| | | | | |
|---|---|---|---|---|
| 6. சுக்கிரனுக்கு | 2ல் புதன் | 6ல் சூரியன் | 12ல் வியாமூன் | 4ல் சனி |
| 7. சனிக்கு | 3ல் சுக்கிரன் | 11ல் சந்திரன் | 6ல் வியாமூன் | 7ல் செவ்வாய் |

(குறிப்பு) முன்னம் 50 முதல் 58 முடிய சொல்லப்பட்டிருக்கும் கிரகங்களின் மித்துரு சத்துரு சமபாவங்களுடன் இதனையும் ஒப்பிட்டுக்கொள்க. இதில் எஞ்சிய சிறப்பு விதிகளை பின்னர் 2-வது புஸ்தகத்திலேனும் 3-வது புஸ்தகத்திலேனும் வெளியிடப்படும். இங்கு இவைகள் போதுமான தெனத் தோன்றலாலும் அப்பியசிப்பவர்களுக்கு அவைகளையும் எடுத்துக்கூறுமிடத்து சிறிது குழப்பத்தை யுண்டாக்கும் எனக் கருதியும் அதனை இங்கு நிறுத்திக்கொண்டதென்க.

73. சூரியனுக்கு 6ல் உள்ள சனியும், சந்திரனுக்கு 5ல் உள்ள சுக்கிரனும், செவ்வாய்க்கு 12ல் உள்ள புதனும், புதனுக்கு 4ல் உள்ள வியாழனும், வியாழனுக்கு 6ல் உள்ள சனியும், 12ல் உள்ள சூரியனும், சுக்கிரனுக்கு 12ல் உள்ள வியாழனும், 4ல் உள்ள சனியும், சனிக்கு 6-ல் உள்ள வியாழனும் பகையென்க. ஜாதகபலனைக் கூறுமிடத்து இதனையும் முக்கியமாகக் கவனிக்க. இதின் முழு விவரங்களை மூன்றும் புஸ்தகத்தில் கூறுவோம்.

74. பலாபலன்களைக் கூறுமிடத்து சந்திகளையும் கவனிக்க வேண்டியது அவசியமானதால் அத்தகைய சந்திகளையும் கற்பவர்களுக்கு இந்துவேண்டிய அளவு எடுத்துச்சொல்லல்அவசியமாகையால் அவைகளையும் விளக்கலாயிற்று. 1. லக்கின சந்தி. 2. நக்ஷத்திர சந்தி. 3. திதிசந்தி என்று மூன்று விதங்களாம். அவைகளின் முழு விவரங்களைப் பின்னுற் சொல்லப்படும்.

75. விசேஷ குறிப்பு—இப்புத்தகத்தின் ஆரம்பமுதலிதுவரை ஜோதிஷ சாஸ்திரம் கற்க விரும்புவோர்க்கு எளிதில் விளங்கும்படியானதாகும் சாதாரண உலகவழக்கிலிருப்பதாயுமான வசன நடையில் ககோளம் இன்னதென்பதையும், அதற்கு இத்தனை பாகைகள் என்றும், இவ்வளவு பாகைகொண்டது ஒரு ராசி மண்டலம் என்றும், மொத்தம் ககோள சக்கரத்திலடங்கிய இராசி மண்டலங்கள் 12

என்றும், அவைகளை இன்ன ராசி முதல் இன்ன ராசியிருக எண்ண வேண்டியது விதியென்றும், அவைகளுக்குள்ள அதிபர்கள் இன்ன இன்ன கிரகங்கள் என்றும், இன்ன இன்ன ராசிகளில் இன்ன இன்ன நக்ஷத்திரங்க ளிருக்கிறதென்றும், ஒவ்வொரு நக்ஷத்திரத்துக்கும் இத்தனை பாதங்கள் என்றும், நக்ஷத்திரம் மொத்த எண்ணம் 27 என்றும், அவைகளின் மொத்தம் பாதம் 108 என்றும், இராசிகளின் தோற்றம் இம்மாதிரியென்றும், மொத்தம் கிரகங்கள் ஒன்பதென்றும், அவைகளின் நிறம், குணம், ஜாதி அவைகளுக்குள்ள தெய்வங்கள், கால புருஷனின் லக்ஷணம் இன்ன இன்ன இராசிகளில் இன்ன இன்ன கிரகங்கள் உச்சம் நீசம் மூலதிரிகோணம் சுக்ஷேத்திர முதலியவைகளை அடைந்திருக்கிறதென்றும், இராசிகளின் நிறம், ஜாதி, உருவ முதலிய வைகளையும் இன்ன இன்ன காலங்களில் இன்ன இன்ன இராசி களுக்கும் இன்ன இன்ன கிரகங்களுக்கும் இன்ன இன்ன விதமான பலாபலன்களை யடைகிறதென்றும், பிரிஷ்டோதய, சிர பிரிஷ்டோதய சிரோதயராசிகளின் விவரங்களைப்பற்றியும், ஓஜை, உக்மம், சரம், திரம், உபயராசிகளின் விவரங்களைப் பற்றியும், ஜலராசி நரராசியாதியவை களின் விவரங்களையும் கிரகங்களின் உருவம் லக்ஷணாதிகளின் விவரங் களையும், அவைகளின் காரகத்தைக் குறித்தும், அவைகளுக்கும் தாது மூல ஜீவாதிகளுக்குமுள்ள சம்பந்தம் இன்னதென்றும், அஷ்டதிக்கு களுக்கும் அதிபதிகளான கிரகங்களைக்குறித்தும், ஆடவரும் பெண்டி ரும்உடுக்கும் உடையாதியவைகளின் தன்மைகளைக்குறித்துள்ள கிரகங் களின் தன்மையைப்பற்றியும், லோகம் ரத்னாதிகளுக்குள்ள கிரகங் களைப்பற்றியும், ஊர்த்துவமுகமாதிய பார்வைகளுக்குள்ள கிரகங்களைப் பற்றியும், கிரகங்களின் பார்வையைக் குறித்தும், அவைகளின் மித்துரு சத்துரு சமாதிகளைக் குறித்தும், சுபாள் அசுபாள் இவர்கள் என்றும், கேந்திரம் திரிகோணம் பணபரம் ஆபோகிலிமம் ஆகிய இவைகளின் விளக்கங்களைக் குறித்தும், ஷட் (ஆறு) பல விவரங்களைப் பற்றியும், ஆண், பெண், அலி கிரகங்கள் இவையென்றும் இந்த பிரத மைச் சுவடியில் சொல்லிவிட்டோம். இவைகளெல்லாம் நன்ருக மனதிற் படிந்த பின்னரே முதற்புத்தகம் படிக்கத்தகும்.

பிரதமாப்பியாசம் முற்றிற்று.

---

# ஜோதிஷ தரங்கிணி.

## முதற் புத்தகம்.

1. சுபகிரகங்கள் கேந்திராதிபதிகளானால் கெட்டுவிடுகிறார்கள். ஆனால் இவ்விதங் கெட்டுவிட்ட தன்மையைக்கொண்டு அவைகளை அசுபர்கள் என்று சொல்வது தவறு. அசுபர்கள் கேந்திராதிபத்தியம் பெறுவது நல்லது என்றதால் அவைகளை சுபர்கள் என்று சொல்வதுந் தவறு. அசுபர்கள் கேந்திராதிபத்தியத்தில் நன்மை செய்வதில் வலுவுள்ளவர்களாகிறார்கள். முதலாவது லக்கின கேந்திரத்திலும் நான்காம் கேந்திரம் வலு, நான்காம் கேந்திரத்திலும் ஏழாங் கேந்திரம் வலு, ஏழாங் கேந்திரத்திலும் பத்தாங் கேந்திரம் வலு. ஐந்தாந் திரிகோணத்திலும் ஒன்பதாந் திரிகோணம் வலுவுள்ளது. கெட்ட கிரகங்களைப்பற்றி வலுவென்று சொல்வதில் நன்மையில் கெட்டும், தீமையில் வலுத்துமென்பது பொருள் எனக்கொள்க. 3, 6, 8, 11, 12 ஸ்தானங்களை ஆதிபத்தியங்களாகக்கொள்ளுங் கிரகங்களும், அந்த பாவங்களுக்குந் தோஷமுள்ளன. இந்த ஸ்தானங்கள் உபசய ஸ்தானங்களாவதால் கெட்ட தன்மை சிறுகச்சிறுக நன்மையாக நாளடைவில் அதிகரித்து மாறுஞ் சுபாவமிருத்தல் பற்றி உபசய ஸ்தானங்களைச் சில சமயங்களில் சந்தர்ப்பங் கருதி நல்லதெனவுஞ் சொல்லுவ துண்டென்பதுங் கவனிக்கவேண்டிய தவசியமாகும். உதாரணமாக இந்த ஜாதகத்தில் மீனலக்கினமாக இருக்கிறதையும் அதன் அதிபதியான வியாழன் சுபகிரகங்களிலொன்றாவதாலும் அதே வியாழன் பத்தாம் பாவமான தனுசுக்கு அதிபதியாவதாலும் இங்கு வியாழன் 1, 10-க்குள்ள கேந்திராதிபத்தியத்தினால் கெட்டுவிடுகிறான். அதுபோலவே புதன் 4, 7-ம் பாவங்களான மிதுன கன்னியாதிபதியாவதில் கேந்திராதிபத்தியத்தால் கெட்டுவிடுகிறான். ஆனால் புதனை சுபனென்றாவது அசுபனென்றாவது தீர்மானிக்கவேண்டியது. புதனின் சேர்க்கைபற்றி யாவதால் (பிரதமாப்பியாசத்தைப் பார்க்க) இங்கு பிரஸ்தாபத்திலுள்ள புதன் பாபர்களிலொருவனான கேதுவுட

னும், சுபர்களிலொருவரான சுக்கிரனுடனும் சேர்ந்திருப்பதாலும் சுக்கிரன் 3, 8-க்குடையவனுவதால் இங்கு புதனை மிகுத்துக் கெட்டவன் என்றும், சிறிது நல்லவன் என்றும் சொல்லல்நியாயமாகும். ஆனுல் சுபகிரகமான வியாழனை இது கொண்டு (மேலே சொல்லிய கேந்திராதிபத்திய தோஷங்கொண்டு) கெட்டவன் என்கலாமே யன்றி அசுபன் என்று சொல்லல் கூடாது. சுக்கிரன் சுபனுக இருக்க இங்கு 3, 6-க்குடைய பாவாதிபத்தியத்தால் கெட்டுவிட்டாலும் அசுபன் எனலாகாது. மேலே காட்டியுள்ள ஜாதகி (ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் பொதுப் பெயர்) ஐந்தாம் ஜார்ஜு சக்கரவர்த்தியாவர். இங்கிலாந்து தேசத்தின் இராஜதானி நகரமான லண்டன்மாநகரத்தில் குரோதன வருஷம் வைகாசி மாதம் 22ம் தேதிக்குச் சரியான (3—6—1865) பக்கிங்காம் அரண்மனையில் உத்திராட நக்ஷத்திரத்தில் உதயாதி நாழிகை 5`-20க்கு ஜனனமானபோது சூரியமகாதசையில் செல்லு நீக்கி இருப்பு வருஷம் 1½ ஆகும். இந்த ஜாதகத்தில் காட்டியுள்ளபடிக்கு வியாழன் கேந்திரதோஷத்தால் கெட்டுவிட்டான் என்ற நியாயங் காரணமாக இராகுதசை விட்டு வியாழதசை ஆரம்பம் இவரது பாட்டியார் கனம் விக்டோரியா மகாராணி அம்மையார் அவர்கள் தெய்விகமடைந்தமையும் வியாழன் 10ம் கேந்திரஸ்தானமான கர்ம (தொழில்) ஸ்தானத்திலிருப்பதால் ஒருவாறு நன்மையென்ற கொள்கைக்கிணங்க 3, 6, 2, 7-க்குள்ள புதன் சுக்கிரன் கேது சம்பந்தமும், சனியினுல் அவைகள் பார்க்கப்படலும் அந்த சனி வியாழனைப் பார்ப்பதுமாகிய காரணங்களால் குருதசையின் சுக்கிரபுக்தியில் பிதா அவர்களான கனம் ஏழாவது எட்வர்டு சக்காவர்த்தியவர்கள் காலம் செல்ல அதன் பலனுக ஜார்ஜு சக்கரவர்த்தியவர்கள் மகுடாபிஷேகமாகி சக்கரவர்த்தியானதும் குறிப்பிடுவதில் இந்த ஜாதகிக்கு மேலே காட்டியுள்ள காலங்களில் உயிர் நஷ்டங்களும், பொருள் லாபங்களும் கலந்து வந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். வியாழ தசையில் செவ்வாய் புக்தியில் ஜெர்மனிச் சண்டை நடந்ததும் குறிப்பிடலாகும். குருதசையில் ராகு புக்தியில் ஜார்ஜு சக்ரவர்த்திக்கும் ஜெர்மனிக்கும் நிகழ்ந்த போரின் கடுமையும், சக்கரவர்த்தியார் தன் சைனியங்களின் நிதானத்தைக் கண்டறிய பிரான்சு தேசத்துக்குச் சென்றிருந்த பொழுது குதிரையி

லிருந்து விழுந்து உயிர் பிழைத்தமையும் நம்மவர் பலரும் அறிவார். சனிதசையில் சூரிய புக்திவிட்டு சந்திரபுக்தி யேற்குங்காலம் பீடா காலமுமாகும். சக்கரம் 3ம் புத்தகத்தில் வெளிப்படும்.

2. அசுபக் கிரகங்களை குறித்துள்ளவைகளை இதன் கீழே எடுத்துக் காட்டுகிறோம். 4-6-1884ம் வருஷம் புதன்கிழமை சித்திரை நக்ஷத்திரத்தில் ஜெனனம். செவ்வாய் தசையிலிருப்பு 3, 3, 6 இது கடகலக்கினமானதால் செவ்வாயும் சனியும் முறையே 5, 10, 7, 8க்குடைய ஆதிபத்தியத்தால் 10ம், 7ம் கேந்திரமானதால் செவ்வாயும் சனியும் பாபிகளானதால் நல்லவர்களே ஆனால் அவர்களை சுபர்கள் என்று சொல்லல் கூடாது. கடகலக்கினத்துக்கு ராஜயோக காரகனான செவ்வாய் தனஸ்தானத்திலிருப்பதால் லக்கினத்தில் வியாழனும் சுக்கிரனும் இருப்பதும் ஜாதகிக்குப் பெரும் வாழ்வைக்கொடுப்பதில் தங்களுடைய 6, 4-க்குடைய ஆதிபத்தியத்தால் சிற்சில சமயங்களில் இடையூறுகள் நேர்வதும் சனியும் சூரியனுடைய 11ம் பாவத்திலிருப்பதினால் முயற்சியில் சிற்சில சமயங்களில் தடைகளிருப்பினும் பொதுவாக லாபகரமானவைகளே இந்த ஜாதகியினது ஆளுகையின் கீழ் எதிர் பார்க்கப்படுமென்றாலும், ஊக்கம், விடாமுயற்சிகளில் மனமிருப்பது சாதாரணமானதாகும். புத்திரஸ்தானத்தை அலி கிரகங்களான சனியும் புதனும் பார்ப்பதும், பகைவனான சூரியனுடன் சனி லக்கினத்தைப் பார்ப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். மேலே காட்டியுள்ள இரண்டு ஜாதகங்களாலும், சுபர்கள் கேந்திராதிபத்திய தோஷத்தால் அசுபர்களாகமாட்டார்களென்றும் அசுபர்கள் கேந்திராதி பத்திய நலத்தால் சுபர்களாகமாட்டார்களென்றும், முன்னம் ஆங்காங்கு கேந்திரம் திரிகோணம் முதலியவைகளின் சாராம்சத்தை ஒருவாறு சிறுத்துச் சொல்லியிருக்கிறோம். இனிமேல் சக்கரம் 3ம் புத்தகத்தில் வெளிவரும்.

3. சுபக்கிரகங்களும் அசுபக்கிரகங்களும் ஜாதகங்களில் கேந்திர திரிகோணங்களில் ஏறி நிற்கும் விஷயத்தைக் குறித்துள்ள சில அம்சங்களின் விவரங்கள்.

1. சுபக்கிரகங்கள் கேந்திரங்களிலிருப்பது நல்லது.

2. சுபக்கிரகங்கள் திரிகோணங்களிலிருப்பது நல்லது.

3. அசுபக்கிரகங்கள் உச்சமடைந்த கேந்திரங்களிலாவது அல்லது 10ம் கேந்திரங்களிலாவது இருப்பது தான் நன்மை. மற்ற கேந்திரங்களிலிருப்பது பெரும்பாலும் நன்மையாகமாட்டாது.

4. அசுபக்கிரகங்கள் உச்சமடைந்த திரிகோணங்களிலேனும் மற்றும் அது நீங்கலான திரிகோணங்களிலிருப்பதும் கெடுதியே. ஆனல் பாபக்கிரகங்கள் திரிகோணுதிபத்திய மடைந்திருப்பதுநலமே.

4. 12 லக்கினங்களும், அவைகளுக்குள்ள பொது லக்ஷணங் களின் விவரங்களும்.

1. மேஷ லக்கினம்: இதன் அதிபதி செவ்வாய். இவனே 8ம் பாவமான விருச்சிகத்துக்கும் அதிபன் என்றதால் மேஷ லக்கினத் துக்கு செவ்வாய். 1, 8-க்குள்ள ஆதிபத்யத்தால் அஷ்டம தோஷம் பெற்றும் இங்கு செவ்வாய்க்கு அஷ்டமதோஷம் இல்லை. செவ்வாய் நல்லவனே.

2. இரண்டாம் (ரிஷபாதிபதி) பாவாதிபதியான சுக்கிரன் 7ம் பாவாதி (துலாதிபதி) பதி ஆவதாலும் 7ம் பாவம் கேந்திரமாவ தால் சுக்கிரன் சுபன் என்பதால் கேந்திர தோஷம் பெற்றும் மேஷ லக்கினுதிபதியான செவ்வாய்க்கு சத்துருவாதலாலும் சுக்கிரனுக் குள்ள 2, 7-ம் பாவங்கள் மாரக பாவங்களாவதாலும் மேஷ லக்கினத் துக்கு சுக்கிரன் கெட்டவனே.

3. மேஷ லக்கினத்துக்கு 3, 6-ம் பாவாதி (மிதுன கன்னி யாதிபதி) பதி புதன் என்றதில் 3-6 ஸ்தானங்கள் துஷ் (கெட்ட) ஸ்தானங்களாவதாலும் லக்கினுதிபதியான செவ்வாய்க்கு புதன் சத்துருவானதாலும் மேஷ லக்கினத்துக்குப் புதன் கெட்டவனே.

4. மேஷ லக்கினத்து 4ம் பாவாதி (கடகாதிபதி) பதி சந்திர னுவதால் சந்திரனை சுபன் அசுபன்என்று நிதானித்தல் அவனுக்குள்ள பக்ஷங்களைப் பொருத்ததாயுமிருப்பதாலும் கிருஷ்ண சந்திரனுனல் பாபன் என்கிற நியாயத்தாலும் பூர்வபக்ஷத்து சந்திரன் என்றால் சுபன் என்ற காரணத்திஞல் கேந்திரதோஷ நியாயத்தாலும் சுபன் அசுபன் என்று தீர்மானித்தும் மேஷலக்கினுதிபதியான செவ்வாய்க்கு சந்திரன் நட்பென்ற நியாயங்கொண்டு பூரண சந்திர கேந்திர

தோஷத்தையும் கொள்ளாது—மேஷ லக்கினத்துக்கு சந்திரனைப் பெரும்பாலும் நல்லவன் என்றே சொல்லவேண்டும். சந்திரனை மேஷ லக்கினத்துக்கு கெட்டவன் என்ற கூற்று வெறுங்கூற்றே.

5. மேஷ லக்கினத்துக்கு 5ம் பாவாதி (சிம்மாதிபதி) பதி சூரியனாவதாலும் செவ்வாய்க்கு சூரியன் நட்பாவதாலும் பாவகிரகம் திரிகோணாதி பத்திய மடைந்திருப்பது பலம் என்ற நியாயத்தாலும் மேஷ லக்கினத்துக்கு சூரியன் நல்லவன்.

6. மேஷ லக்கினத்துக்கு அஷ்டமாதி (விருச்சிகாதிபதி) பதி செவ்வாயாவதாலும் செவ்வாய்க்கு அதுபற்றி அஷ்டம தோஷம் மேஷலக்கின சம்பந்தப் பட்டமட்டிலும் கிடையாததாலும் அவனே லக்கினாதிபதியாவதாலும் மேஷ லக்கினத்துக்குச் செவ்வாய் விருச்சிகராசி யதிபன் செவ்வாய் என்றது நல்லதே.

7. மேஷ லக்கினத்துக்கு ஒன்பதாம் பாவாதி (தனுஸாதி பதி) பதி வியாழனாவதாலும் அதே ஸ்தானம் திரிகோண மாவதாலும் வியாழன் மேஷ லக்கினாதிபதியான செவ்வாய்க்கு நண்பனாவதாலும் அதே வியாழன் 12ம் பாவாதி (மீனாதிபதி) பதியாவதில் நன்மையில் கெட்டாலும் மேஷ லக்கினத்துக்கு வியாழன் நல்லவனே.

8. மேஷ லக்கினத்துக்கு 10, 11ம் பாவாதி (மகர கும்பாதி பதி) பதியான சனி தனக்குள்ள 10ம் கேந்திராதிபத்தியத்தில் சனி பாவி என்ற நியாயத்தால் பலமடைந்தும் 11ம் பாவாதிபத்தியத்தால் கெட்டும் விடுகிறான். ஆகவே, சனியின் தன்மை இங்கு சமமாக இருப்பினும் மேஷ லக்கினாதிபதியான செவ்வாய்க்கு சத்துருவென்ற காரணத்தால் மேஷலக்கினத்துக்குச் சனி கெட்டவன் என்பது பொது விதி. இதற்கு வேறு சிறப்புவிதி ஒன்றுளது. அதனை இங்கு சொல்லல் அவசியமெனத் தோற்றாததால் நிறுத்திக்கொள்ளப்பட்டது.

5. ரிஷபலக்கினம், 1. இதற்கு அதிபன் சுக்கிரன். இவனே துலாராசியான ஆறும் ராசிக்கும் அதிபனாகிறான். இவன் லக்கினத்துக்கும் ஆறும் பாவமுமான துலாத்துக்கும் அதிபன் என்ற நியாயத்தாலும், சுக்கிரனுக்கு லக்கினாதிபத்தியத்தால் முதல் கேந்திராதிபத்தியம் சுபனான சுக்கிரனடைவதாலும் அவனே துஷ்ஸ்தானமான ஆறும்

பாவத்துக்கும் அதிபனுவதாலும் சுக்கிரன் தனக்குள்ள சுக்ஷேத்திர (விரஷபாரசியான) ரிஷபலக்கினத்துக்குக் கெட்டவனுகிருன். இலக்கினுதிபதியே தன்னுடைய ஆதிபத்தியமுள்ள லக்கினத்துக்குக் கெட்டவனுனதை உற்று நோக்குக.

2. ரிஷபலக்கினத்துக்கு 2,5ம் பாவாதி (மிதுன கன்னியாதிபதி) பதியானபுதன் லக்கினுதிபதியான சுக்கிரனுக்கு நட்புக்கிரகமாவதாலும், 2, 5 தனபஞ்சம ஸ்தானங்களாவதாலும், அதன் அதிபனுன புதன் ரிஷபலக்கினத்துக்கு நல்லவன்.

3. ரிஷபலக்கினத்துக்கு 3ம் பாவாதிபதியானவன் சந்திரனுவதாலும், 3ம் ஸ்தானம் துஷ்பாவ ஸ்தானமாவதாலும், ரிஷப லக்கினுதிபதியான சுக்கிரனுக்கு சந்திரன் பகையானதாலும், ரிஷப லக்கினத்துக்கு சந்திரன் மாரகனுவதாலும் கெட்டவனே,

4. ரிஷபலக்கினத்துக்கு 4ம் பாவாதி (சிம்மாதிபதி) பதியான சூரியன் பாவன் என்ற நியாயத்தால் கேந்திராதிபத்திய பலமடைகிருன் என்ருலும், சுக்கிரனும் சூரியனும் தம்முள் ஒருவருக்கொருவர் பகைவராவதால் ரிஷப லக்கினத்துக்கு சூரியனே சமபலமுடையவன் எனலாமேயன்றி வேறு சில நூலோர் ரிஷபலக்கினத்துக்கு சூரியன் நல்லவனே என்று கருதுவது எமது சித்தாந்தத்திற்குப் பொருத்தமுடையதாகாது.

5. ரிஷபலக்கினத்துக்கு 7, 12ம் பாவாதி (விருச்சிக மேஷாதிபதி) பதியான செவ்வாய் பாபனுவதால் 7ம் கேந்திர ஸ்தானத்தின் ஆதிபத்தியம் பெற்றிருப்பது நலமே. ஆனுல் 12ம் பாவாதி பத்திய நன்மையாகாதென்ருலும் ரிஷபலக்கினத்துக்கு செவ்வாயை மிகுத்து நல்லவன் என்றும், சிறுத்துக் கெட்டவன் என்றும் சொல்லவே எமது துணிவாகும். மேலும் சுக்கிரனுக்கு செவ்வாய் சமநட்புடையவன் என்பதையும் கவனிக்க. மாரக முதலியவைகளில் ரிஷப லக்கினத்துக்கு செவ்வாய் வலுப்பதும் சாஸ்திரோக்தமே.

6. ரிஷப லக்கினத்துக்கு 8, 11ம் பாவாதி (தனுசு மீனுதிபதி) பதியான வியாழன் தனக்குள்ள துஷ்ஸ்தானுதிபத்தியங்களான 8, 11ம் ஆதிபத்தியத்தால் கெட்டும், ரிஷபலக்கினுதிபதியான சுக்கிர

னுக்கு வியாழன் பகைவனுவதாலும் ரிஷபலக்கினத்துக்கு ஒருவாறு மாரகத்தில் வலுவுடையவனுவதாலும் ரிஷபலக்கினத்துக்கு வியாழன் கெட்டவன் என்றறிக.

(7) ரிஷப லக்கினத்துக்கு 9, 10ம் பாவாதி (மகர கும்பாதி பதி) பதியான சனி பாவக்கிரகங்களில் ஒன்றுவதால் ஒன்பதுக்குள்ள திரிகோணுதிபத்தியமும் 10க்குள்ள கேந்திராதிபத்தியமும் பெற்று வலுவடைவதுடன் 9, 10 அதாவது தர்மகர்மாதிபத்தியமும் அந்தச் சனி ஒன்றுக்கே ரிஷபலக்கின ஜாதகிக்கு ஏற்படும் நியாயம் பற்றியும் அவனே ரிஷபலக்கினத்துக்கு ராஜயோக காரகனுவதாலும் சுக்கிர னுக்கு மித்துருவானதாலும் ரிஷபலக்கினத்துக்கு மிகுத்து சனி நல்லவன் என்க.

குறிப்பு:—ரிஷப லக்கின விவரங்களைக் கூறுமிடத்து பெரும் ஜோதிஷ நூலாசிரியரில் சிலர் புதனையும் செவ்வாயையும் குறித்து ஏதுவுமே சொல்லாது விடுகின்றனர். அதன் காரணம் இனி வெளி யாகும் நமது புஸ்தகத்தில் பரக்கக்காணலாம்.

6. மிதுனலக்கினம்—(1) லக்கினுதிபதியும், நான்காம் பாவாதி பதியுமான புதனை சேர்க்கை பற்றி முதலில் சுபனு அல்லது அசுபனு என்று தீர்மானித்துக்கொண்ட பின்னர் சுபனுனல் 1, 4ம் பாவாதி (மிதுன கன்னியாதிபதி) பத்தியத்தால் கேந்திரதோஷ முடையவ னென்றும், அசுபனுனல் தோஷமற்றவனென்றும் தீர்மானித்து புதனை ஒருவாறு சோதனை செய்துகொள்ளவும். புதன் பொதுவாக லக்கினுதிபதியாயினும் கெட்டவனே என்பது பல்லோர் துணிபு.

(2) மிதுன லக்கினத்துக்கு இரண்டாம் பாவாதிபதியான சந்திரன் புதனுக்குப் பகைவனுவதாலும் 2ம் பாவம் மாரகஸ்தான மாவதாலும் சந்திரனை சுபன், அசுபன் என்று நிச்சயித்துக்கொள்ள வேண்டியது வளர்பிறை தேய்பிறைகளைக் குறித்து இருப்பதால் அப்படி நிதானித்துக்கொண்டதில் சந்திரன், சுபன் ஆனுலும் சரியே, அசுபனுனுலும் சரியே. மிதுன லக்கினத்துக்கு சந்திரனை கடக ராசியின் சுக்ஷேத்திர பலத்தைக்கொண்டும், ரிஷபராசியின் மூல திரி கோண பலத்தைக்கொண்டும் சோதித்துப் பார்க்குமிடத்து மிதுன லக்கினத்துக்கு சந்திரன் முறையே கடக ராசியின் சுக்ஷேத்திர பலத்

தால் 2-ம் பாவாதிபதியும் சந்திரனுக்கு ரிஷபராசி மூல திரிகோண பலத்தால் மிதுன லக்கினத்துக்கு 12ம் பாவாதிபதியுமாகிறுன். ஆகவே உயிர் நஷ்டம் பொருள் நஷ்டங்களில் சந்திரன் வலுக்கிறுன் என்பது நியாயமேயாயினும் சிற்சில சமயங்களில் நல்லவனுமாகிறுன் என்பதை அடுத்த புஸ்தகத்தில் குறிப்பிடுவோம். எவ்விதமும் மிதுன லக்கினத்துக்கு சந்திரன் கெட்டவனே.

(3) மிதுன லக்கினத்துக்கு மூன்றும் பாவாதி (சிம்மாதிபதி) பதியான சூரியன் தனக்குள்ள மூன்றுமாதிபத்தியத்தால் கெட்டு விடுகிறுன். லக்கினுதிபதிக்கு சூரியன் நண்பனே என்றுலும் 4-ம் பாவாதி பத்தியமுடைய புதனின் மூலதிரிகோணராசியான கன்னிக்கு சிம்மம் 12ம் பாவமாவதால் மிதுன லக்கினத்துக்கு சூரியன் பொதுப் படக் கெட்டவனே. மாரகனுமாவன்.

(4) மிதுன லக்கினத்துக்கு 5,12ம் பாவாதி (துலா ரிஷபாதி பதி) பதியான சுக்கிரன் 5-ம் திரிகோணத்தின் வலுவால் நன்மையில் மிகுத்தும் 12ம் பாவாதி பத்தியத்தால் கெட்டுமிருப்பினும் புதனுக்கு சுக்கிரன் மித்துருவாவதாலும் சுக்கிரனும் புதனும் மிதுன லக்கினத் துக்கு யோககாரகர்களாவதாலும், சுக்கிரன் மிதுன லக்கினத்துக்கு நல்லவன்.

(5) மிதுன லக்கினத்துக்கு 6—11ம் பாவாதி (விருச்சிக மேஷாதிபதி) பதியான செவ்வாய் துஷ்ஸ்தான பத்தியத்தால் முழு துங்கெட்டு விட்டதால் புதனுக்கு செவ்வாய் சமநட்பு உடையவனுக இருந்தும் மிதுன லக்கினத்துக்கு செவ்வாய் மாரகவலுப் பெறலாலுங் கெட்டவனே எனினும் இதர ஞாதிகள் சம்பந்தமாகப் பலாபலன் களைக் கூறும்போது சமயம் நேரிடின் விவரிப்போம்.

(6) மிதுன லக்கினத்துக்கு 7, 10ம் பாவாதி (தனுசு மீனுதி பதி) பதியான வியாழன் சுபன் என்ற காரணத்தால் கேந்திரதோஷ மடைந்து முழுதும் கெட்டுவிட்டதால் புதனுக்கு வியாழன் சமமான நட்புடையவனுக இருந்தும் மாரக வலுவினுல் மிதுன லக்கினத்துக்கு வியாழன் கெட்டவனே.

(7) மிதுன லக்கினத்துக்கு 8,9ம் பாவாதி(மகரகும்பாதிபதி) பதியான சனி 8ம் பாவாதி பத்தியத்தால் கெட்டும் 9ம் பாவாதி பத்தி

யத்தால் வலுத்தும் புதனுக்கு சமன் என்ற நியாயம் ஒருவாறிருக்க மிதுன லக்கினத்துக்கு சனியைக் கெட்டவன் என்பது சில நூலோர்களின் கருத்தென்றாலும் நமது கொள்கைப்படிக்கு சனி சமபலமுடையவனே. ஏனெனில், மிதுனலக்கினத்துக்கு சனி ஆயுள் ஸ்தானுதிபதியாயிருப்பதுடன் அந்த சனி ஆயுஷ்காரகனுமவு மிருக்கிறான் என்றதால் மிதுன லக்கின ஜாதகியை சனி கொல்லாமைபற்றி என்பது பல காரணங்களில் ஒன்று என்றாலும், இதன் விவரங்களையும் மேஷலக்கினத்துக்கும் மிதுன லக்கினத்துக்கும் பொதுவாக வியாழன் சனியாகிய இருவர்களான தர்மகர்மாதிபத்திய சேர்க்கையிருந்தும் ராஜயோகம் கிடைக்கமாட்டாதென்ற விவரங்களையும் போதுமான ஆதாரங்களோடு அடுத்த புஸ்தகத்தில் காட்டுவோம்.

7. கடகலக்கினம் — (1) லக்கினதிபதியான சந்திரன் வளர்பிறையாயினும் சரியே. தேய்பிறையாயினும் சரியே. அதாவது, சுபனானாலும் சரியே, அசுபனானாலும் சரியே. சந்திரனுக்கு சுபன் என்ற நியாயத்தால் இந்தப் பிரஸ்தாப லக்கினத்துக்குக் கேந்திர தோஷம் உண்டென்பார் கக்ஷி நியாயமாகத் தோற்றப்படினும் உண்மையில் நாமறிந்தமட்டும் அவ்விதங் கொள்ளல் தவறுடைத்தே. சந்திரன் ஆனது பற்றி கடகலக்கினத்துக்கு நல்லவன் என்பாம்.

(2) கடகலக்கினத்துக்கு 2ம் பாவாதி (சிம்மாதிபதி) பதியான சூரியன் சந்திரனுக்கு நட்பாவதாலும் இரண்டாம் பாவாதிபத்தியத்தால் கடகலக்கின ஜாதகிக்கு சூரியன் மாரகனாவான் என்ற கக்ஷியே நியாயப்பொருத்த முடையதாயினும் கடகலக்கினத்துக்கு சூரியன் நல்லவன் எனத் தெளிக.

(3) கடகலக்கினத்துக்கு 3, 12ம் பாவாதி (கன்னி மிதுனாதிபதி) பதியான புதன் துஷ் ஸ்தானுதிபதியாவதாலும், ஆயுள் அழிவு ஸ்தானுதிபதியாயும், இயற்கையில் சந்திரனுக்கு புதன் நேசத்தன்மையை வகித்திருந்தும் கடகலக்கினத்துக்கு புதன் கெட்டவனும் மாரகனும் என்க.

(4) கடக லக்கினத்துக்கு 4, 11ம் பாவாதி (துலா ரிஷபாதிபதி) பதியான சுக்கிரன் சுபன் என்ற நியாயத்தால் கேந்திரதோஷம் பெற்றும், 11ம் ஆதிபத்தியத்தால் தோஷமடைந்தும், மிகுந்து

கெட்டுவிட்டதால் சந்திரனுக்குச் சுக்கிரன் சமநேசப்பான்மையைப் பெற்றிருந்தும் கடகலக்கினத்துக்குச் சுக்கிரன் கெட்டவனே.

(5) கடகலக்கினத்துக்கு 5, 10ம் பாவாதி (விருச்சிக மேஷாதிபதி) பதியான செவ்வாய் சந்திரனுக்கு நட்பாவதாலும், பாவ கிரகங்கள் கேந்திராதிபத்தியமும் திரிகோணாதிபத்தியமும் அடைதல் நல்லதென்ற விதிப்படிக்கு செவ்வாய்க்கு அவ்விரு தன்மைகளுமிருக்க இராஜயோக காரகனாதல்பற்றி அதனைச் சில நூலோர் கடகலக்கினத்துக்குக் கெட்டவன் என்கிறார்கள். அவர்கள் அவ்விதம் சொல்லும் நியாயம் எதுபற்றி யென்றால், செவ்வாய் கடகத்தில் நீசனாகும் ஒரு காரணத்தை ஆதாரமாகக்கொண்டேயாம். வேறு காரணம் எதுவுமே யிருப்பதாகத் தெரிந்திலது. இது சம்பந்தத்தை நம்முடைய பல பாவபுஸ்தகத்தில் சொல்லுவோம் எனினும், இங்கு ஒரு விஷயத்தைக் குறிப்பிடல் அவசியமாம். ஜாதக சந்திரிகையின் ஆசிரியர் ஒருவரின் கருத்தே இவ்விதம் பலருக்கும் பல நூலாசிரியருக்கும் சந்தேகத்தை ஆதியில் உண்டுபண்ணிவிட்டதாம். அவை களை சம்ஸ்கிரதம் நன்கு தேர்ந்தார்மாட்டுக் கேட்டுத் தெளிந்ததில் சுலோகத்திலுள்ள சீரைக் கவனிக்காது ஏற்பட்ட காரணமே யன்றி சுலோகம் சரியென்கிறார். உரையாசிரியர்களால் ஏற்பட்ட விபரீதமிதுபோலும். .செவ்வாய் கடகலக்கினத்துக்கு நல்லவன். கேந்திர திரிகோணாதிபதித்துவம் கடகலக்கினத்துக்கு செவ்வாய்க்கு ஏற்படுகிறதால் செவ்வாய் நல்லது என்பது எமது சித்தாந்தம்.

(6) கடகலக்கினத்துக்கு 6, 9ம் பாவாதி (தனுசு மீனாதிபதி) பதியான வியாழன் ஆறும் பாவாதிபத்தியத்தால் கெட்டும், ஒன்பதாம் பாவாதிபத்தியத்தால் வலுவடைந்து மிருப்பதால், வியாழன் நன்மையுந் தீமையும் கலந்துள்ளவனாக இருக்கிறான் எனினும் கேந்திராதிபத்தியத்தால் நல்ல தன்மையில் வலுத்தும் 6ம் பாவத்தால் கெட்ட தன்மையில் சிறுத்துமிருக்கிறான். ஏகதேச நியாயங்கொண்டு வியாழன் நல்லவனே.

(7) கடக லக்கினத்துக்கு 7,8ம் பாவாதி (மகர கும்பாதிபதி) பதியான சனி பாபன் என்ற நியாயத்தால் கேந்திராதிபத்திய நியாயத்தால் நலமடைந்தும், அஷ்டமாதி பத்தியத்தால் கெட்டும் மாறக்

ஸ்தானாதிபதியாயும் ஆயுஷ்காரகனாவது மாதலால் சமநட்புடையவனாக இருந்தும் மாரகத்தில் வலுப்பான்.

(குறிப்பு) முன்னுள்ள விவகாரங்களில் மிதுனலக்கினாதிபதியான புதனுக்குச் சந்திரன் பகையென்றோம். இங்கு சந்திரனுக்குப் புதன் நேசம் என்றோம். இச்சொல் சிலருக்கு மயக்கத்தை ஊட்டுவிக்கும். இதற்கு விவரமாதிய அனைத்தையும் இனிப் பிரசுரம் செய்யப்படும் புஸ்தகத்தில் விரிப்போம். மேஷ லக்கினத்துக்கும் மிதுன லக்கினத் துக்கும் வியாழன் சனி இருவர்களின் சேர்க்கையால் மேஷ லக்கினத் துக்கு வியாழன் ஒன்பதுக்குள்ள தனுசின் ஆதிபத்தியத்தாலும் சனி பத்துக்குள்ள மகராதி பத்தியத்தாலும் கேந்திர திரிகோணாதிபதி களின் சேர்க்கை இருந்தும் இராஜயோகங் கிடையாதென்றோம். அது போல கடக லக்கினத்துக்கு வியாழன் மீனராசியின் ஒன்பதாம் திரிகோணாதி பத்தியத்தாலும், செவ்வாய் பத்துக்குள்ள கேந்திராதி பதித்துவமுமாதலால் தர்மகர்மாதிபதிகளின் சேர்க்கையுண்டாகிறது. இதுவே ராஜயோக காரக கிரகங்களாம். ஆகையால் இவர்கள் சேர்க் கை இராஜயோக முண்டாவென்பார் கேள்விக்கு விவரம் பின்னால் விவரிப்போம்.

8. சிம்மலக்கினம்—(1) லக்னாதிபதியான சூரியன் சந்திரனைப் போல ஒரே ராசிக்கு அதிபதியாக இருப்பதாலும் அவன் பாவனா வதில் லக்கினகேந்திர தோஷ மற்றுவிட்டதாலும் சூரியன் நல்லவன்.

(2) சிம்ம லக்கினத்துக்கு 2, 11ம் பாவாதி (கன்னி மிதுனாதி பதி) பதியான புதன் சூரியனுக்கு சமநட்புடையவனாயினும் 2ம் பாவம் தனம் வாக்கு முதலியவைகளைக் குறிப்பிடுவதால் நல்லதென் பது ஒருபுறமிருக்க மாரகஸ்தானமாவதாலும் 11ம் ஆதிபத்தியம் புதனைக்கெடுத்துவிடுதலாலும் புதனை இங்கு சமம் என்று சொல்வதே நியாயமெனக் கூறுபவர்களின் விவகாரம் ஒருவாறு சரியேயென ஒப்பினும் சிம்ம லக்கினத்துக்கு புதன் கெட்டவன் என்பதே நூலா சிரியர்களிற் பலர் கருத்தாகும். அதுவே எமது சம்மதமுமாகும் என்றதால் சிம்ம லக்கினத்துக்கு புதன் கெட்டவனே.

(3) சிம்ம லக்கினத்துக்கு 3, 10ம் பாவாதி (துலா ரிஷபாதி பதி) பதியான சுக்கிரன் சூரியனுக்குப் பகையென்பதுடன் 3, 10க்

குடைய ஆதிபத்தியத்தால் கெட்ட ஸ்தானமான மூன்றும் பாவாதி பத்தியத்தாலும் 10ம் கேந்திராதி பத்தியத்தாலும் சுக்கிரன் கெட்டு விடுகிறான். ஆதலால் சிம்ம லக்கினத்துக்கு சுக்கிரன் கெட்டவனுவ துடன் சிற்சில சமயங்களில் மாரகத்திலும் வனுப்பன்.

(4) சிம்மலக்கினத்துக்கு 4, 9-ம் பாவாதி (விருச்சிக மேஷா திபதி) பதியான செவ்வாய் 4ம் ஆதிபத்திய கேந்திரமானதையும் ஒன் பதாம் திரிகோணுதிபத்திய மடைந்துள்ளதற்கும் ஆதிபத்தியம் பெற லால் செவ்வாய் சிம்மலக்கினத்துக்குக் கேந்திர திரிகோண பல மடைவதால் செவ்வாயே இதற்கு யோககிரகமாகிறான். சிம்ம லக்கி னத்துக்குச் செவ்வாய் நல்லவன். (குறிப்பு) செவ்வாயும் சுக்கிரனும் தங்களுக்குள்ள தனித்தனி 4-9, 3-10க்குள்ள பாவாதிபத்தியத்தில் 3 கெட்டுவிட்டாலும்,4-9-10க்குள்ள தன்மையில் 9-10 இருப்பதுடன் 4ம் சேர்வதால் செவ்வாய் சுக்கிரனுகிய இருவர்களின் சேர்க்கையால் இராஜயோகம் சிம்மலக்கினத்திற்குண்டா? என்ற வினுவைக் குறித். துப் பின்பு மூன்றும் புஸ்தகத்தில் ஜாதகபலன்களைக் கூறும் பகுதி யில் வெளியிடுவோம்.

(5) சிம்மலக்கினத்திற்கு 5, 8ம் பாவாதி (தனுசு மீனுதிபதி) பதியான வியாழன் லக்கினுதிபதிக்கு மித்துருவாகியும் 5ம் திரிகோண பலம் பொருந்தியதாயும், எட்டாம் பாவாதிபத்தியத்தின் தோஷ வியாபகாப்தியும் பெற்றிருப்பதில் வியாழனுக்கு தோஷம் சிறிது உண்டென்றாலும் சிம்ம லக்கினத்துக்கு வியாழன் நல்லவனே. செவ் வாயும் வியாழனும் சிம்மலக்கினத்துக்கு ஒன்று சேரின் செவ்வாய்க் குள்ள 4-9ம் வியாழனுக்குள்ள5, 8ம் ஆவதில் கேந்திர திரிகோணங் களின் அதிபர்களாவதில் இராஜயோக முண்டா என்பதின் விவரங்க ளையும் அடுத்த புஸ்தகத்தில் விரிப்போம்.

(6) சிம்மலக்கினத்திற்கு 6, 7ம் பாவாதி (மகர கும்பாதிபதி) பதியான சனி 6ன் தன்மையில் கெட்டுவிட்டான் ஆனுல் 7ம் பாவாதி பத்தியத்தால் கேந்திரபலம் சனிக்குண்டென்பது சாஸ்திரோக்தம் என்றாலும் சூரியனுக்கு சனி கரும பகைவன் என்ற காரணங் கொண்டு சிம்மலக்கினத்துக்கு சனி கெட்டவனே.

(7) சிம்மலக்கினத்துக்கு 12ம் பாவாதிபதியான சந்திரன் லக்கினுதிபதியான சூரியனுக்கு நேசன் என்ற காரணங்கொண்டு சிம்மலக்கினத்தின் பாவ பலனைக் கூறும்போது சந்திரன் எத்தன்மை யுடையவனுகிருன் என்பதையே சொல்லாது விடுகிருர்கள். சந்திரன் 12ம் பாவாதிபதியாக இருப்பதாலும் சந்திரனின் தன்மையை சிம்ம லக்கினத்துக்கு நிச்சயித்தல் சிறிது சிரமமானதாலும் சந்திரன் கெட்டுவிட்டால் உயிர் நஷ்டமும், பொருள் நஷ்டமும் கொடுப்பான் என்பதும் சந்திரன் கெடாதிருந்தால் தர்மம் தடாகம் முதலியவை களை நிர்மாணம் செய்வதிலும் பொருள் விரையமாகும் என்பது எமது சித்தாந்தமாகும். ஆகவே சிம்மலக்கினத்திற்கு சந்திரனை அறு வகைப் பலன்களைக்கொண்டும் மற்றுமுள்ள இதர வழிகளாலும் நிச்ச யித்தலே மரபாவதுபற்றி சிம்மலக்கினத்திற்குச் சந்திரன் மிகுத்து நலமடைந்தும் சிறிது கெட்டு மிருக்குமென்க.

9. கன்னியாலக்கினம் — (1) கன்னியா லக்கினுதிபதியான புதன் பத்தாம் பாவாதிபத்தியங்கொண்டு மிதுனுதிபதியாவதாலும் புதன் சுபனே அசுபனே என்பதை அவனுடைய சேர்க்கையினு லறியவேண்டியதென்று நாம் முன்னம் சொல்லிய விதிகளுக்குத் தக்கபடிக்குத் தீர்மானித்துக் கொண்டதில் அசுபனுனல் கேந்திர தோஷம் புதனுக்கு உண்டென்றும் தெரிந்து கன்னியா லக்கினத் துக்கு புதனை நல்லவன் தியவன் என்று நிச்சயிக்க.

(2) கன்னியாலக்கினத்துக்கு 2, 9ம் பாவாதி (துலா ரிஷ பாதிபதி) பதியான சுக்கிரன் தனம் பாக்கியமாகிய பாவங்களுக்கு ஆதிபத்தியம் பெற்றுலும், சுக்கிரனும் புதனும் ஒருவருக்கொருவர் நட்புடையவர்களாவதாலும் கன்னியா லக்கினத்துக்கு சுக்கிரன் நல்லவனே.

(3) கன்னியாலக்கினத்துக்கு 3, 8ம் பாவர்தி (விருச்சிக மேஷாதிபதி) பதியான செவ்வாய் தனக்குள்ள துஷ்ஸ்தான ஆதி பத்தியத்தால் (3, 8) கெட்டுவிட்டதுடன் புதனுக்குச் செவ்வாய் சாதாரண சமபாவமுடைமையாலும் கன்னியர் லக்கினத்துக்குச்செவ் வாய் கெட்டவன் என்பது தெரிக.

(4) கன்னியாலக்கினத்துக்கு 4, 7ம் பாவாதி (தனுசு மீனாதிபதி) பதியான வியாழன் சுபகிரகமாவதால் கேந்திரதோஷமடைந்து கெட்டுவிடுகிறான். அதுவுமின்றி லக்கினாதிபதியான புதனுக்கு வியாழன் சமபாவம் உடையவனேயன்றி வேறல்ல என்பதாலும் கன்னியா லக்கினத்துக்கு வியாழன் கெட்டவனே.

(5) கன்னியா லக்கினத்துக்கு 5, 6ம் பாவாதி (மகரகும்பாதிபதி) பதியான சனி பாவனானதுபற்றி திரிகோணாதி பத்தியத்தால் கெட்டுவிடவில்லையென்றாலும் அதனால் வலுவற்றிருக்கிறான் என்பதே சாஸ்திரோக்தமென்பதையும் ஆறாம்பாவ தோஷம் சனிக்குண்டென்றும் இவைகளை எல்லாம் சித்த சமாதானத்துடன் சிறிது நன்றாக யோசித்து இராசியாதிய சக்கரங்களில் மிதுனலக்கின ஜாதகனுக்கு சனி எப்படி இருக்கிறான் என்பதை நிச்சயித்துச் சொல்லல் முறையேயாதலால் அதனை நம் புத்தகம் படிப்பவருக்கே தீர்மானித்துக்கொள்ளும்படிக்கு விடுத்தோம். பலா பலன்களைக் கூறும் பகுதியில் அடுத்த புத்தகத்தில் இவைகளையெல்லாம் சரியான ஜாதகங்கள் மூலமாக விளக்குவோம். சனியை நல்லவன் என்று சொல்வோர் பலர். எமது சம்மதம் இன்னதென்பதைப் பின்னரே தெரிவிப்போம்.

(6) கன்னியாலக்கினத்துக்கு 11ம் பாவாதிபதியான சந்திரன் வளர்பிறையோனாயினும்சரியே, தேய்பிறையோனாயினும் சரியே. 11ம் பாவாதி பத்தியத்தினால் கெட்டு விடுகிறான் என்பதே விதி. அவ்விதிக்குப் புறனடை யேதுமிருப்பதாக நமக்குத் தெரியவுமில்லை. ஆதலால் கன்னியா லக்கினத்துக்கு சந்திரன் மாரகத் தன்மையையு மடைந்து கெட்டுவிடுகிறான்.

(7) கன்னியாலக்கினத்துக்கு 12ம் பாவாதிபதியான சூரியன் லக்கினாதிபதியான புதனுக்கு நேசன் என்றாலும் 12ம் பாவாதிபதியின் நன்மை தீமையானவைகளைச் சமயங்கண்டு அறிந்து நிச்சயித்தல் தகுதியாதலால் அவைகளையெல்லாம் ஒன்றுக்கொன்று சீர்தூக்கி ஆராய்ந்து சொல்லலே முறையாகும் என்றதால் கன்னியா லக்கி[illegible]க்கு சூரியனை நல்லவன் கெட்டவனென்று நிச்சயித்துக்கொ[illegible] விதிப்படி தீர்மானம் செய்துகொள்க.

குறிப்பு:—இராஜயோகம் 9, 10க்கு உடைய கிரகங்களின் சேர்க்கையினாலேனும், அல்லது மற்ற திரிகோண கேந்திராதிபர்களின் சேர்க்கையினாலேனுமே கிடைக்கவேண்டிய தென்பது விதியாக இருக்க சில நூலோர் எக்காரணம் பற்றியோ கன்னியா லக்கினத்துக்கு சுக்கிரனைக் கெட்டவன் என்கிறார்கள். இவர்களது சம்பிரதாயம் இவர்களுக்கும் இவர்களைச் சார்ந்தவர்களுக்குமே வெளிச்சமாகக்கடவது. லக்கினாதிபதி புதனும் சுக்கிரனும் சேர்க்கைபெற்றுவிட்டால் கன்னியாலக்கின ஜாதகனுக்கு இராஜயோக மென்பதே எமது சித்தாந்தமென்பதை இங்கு எடுத்துக்காட்டிக் கொண்டதுடன் கன்னியா லக்கின ஜாதிக்கு மாரகர்கள் செவ்வாய் வியாழன் சந்திரனாகிய இவர்கள் ஆகிறார்கள் என்பதையும் மனத்திற்கொள்க. வியாழன் சுக்கிரன் ஆகிய இருவர்களும் 4-7, 2-9க்குடையவர்களாவதால் கேந்திர திரிகோணாதிபர்களாகிறார்கள். அதுபோலவே சனி புதனாகிய இருவர்களும் 5-6, 1-10க்குடைய ஆதிபத்தியம் பெறலால் திரிகோண கேந்திராதிபதி $(5+10)=(1+1)$யாகிறார்கள். ஆனது பற்றி வியாழன், சுக்கிரனாகிய இருவர்களின் சேர்க்கையினாலும் கன்னியாலக்கின ஜாதகனுக்கு இராஜயோகமுண்டா? என்ற விவகாரத்தை எடுத்துப் பின்னர் அடுத்த புஸ்தகத்தில் கூறுவோம்.

10. துலா லக்கினம். (1) லக்கினாதிபதியான சுக்கிரன் சுபன் என்ற காரணங்கொண்டு லக்கின கேந்திர தோஷ முண்டெனலாம். ஆனால் நாம் மேஷலக்கினத்துக்குடைய செவ்வாய்க்கு விருச்சிகத்துடைய சுதந்தரத்தால் எவ்விதமாக அஷ்டமதோஷங் கிடையாதென்றோமோ அதுபோலவே துலாத்துக்கு 8ம் பாவமான ரிஷபம் சுக்கிரனின் சுக்ஷேத்திர மாவதான காரணமாகச் சுக்கிரனுக்கும் அஷ்டமதோஷங் கிடையாதென்பதையு மறிக. ஆயினும் லக்கினாதிபன் எவனோ அவனே ஜாதகிங்கு தன் தசாபுக்தி காலங்களில் நன்மை செய்வானா என்ற விஷயங்களைக் குறித்து ஜோதிஷ நூலோர்களிற் சிலர் எதுவுமே பிரஸ்தாபிக்காமலே தப்பித்துக்கொள்ளுகிறார்கள். சில ஜோதிஷ நூலோர் லக்கினாதிபதி, மேலே கூறியுள்ள காலங்களில் தீமையைக் கொடுப்பானென்கிறார்கள். இவைகளின் தாரதம்மியங்களைக் குறித்துச் சவிஸ்தாரமாகப் பின்னால் சொல்வோம்.

(2) துலாலக்கினத்துக்கு 2, 7ம் பாவாதி (விருச்சிக மேஷாதி பதி) பதி செவ்வாய் இவனுக்குள்ள இரண்டாம், ஏழாம் பாவாதி பத்தியங்களால் தனஸப்தம பாவங்களுக்கு அதிபன் செவ்வாய் அதன் ஸ்தானாதிபதியா யிருத்தல் நலமே. அத்துடன் செவ்வாய் பாபன் என்ற நியாயத்தால் சப்தம ஸ்தானாதிபத்திய கேந்திர மாதலும் நலமே யென்றாலும் 2-7ம் மாரகஸ்தானங்களாவதாலும் செவ்வாய் மாரக முதலியவைகளில் வலுக்கலாமென்றது மட்டுமே பொருந்துவதாக இருக்கும். மற்றப்படிக்குச் செவ்வாயை துலா லக்கினத்துக்குக் கெட்ட வன் என்ற பொதுப்பட்ட சொல்லானது குற்றமாகு மென்றோம். ஆதலால் துலா லக்கினத்துக்குச் செவ்வாய் நல்லவனே.

(3) துலா லக்கினத்துக்கு 3-6ம் பாவாதி (தனுசு மீனாதிபதி) பதியான வியாழன் துலாலக்கினாதிபதியான சுக்கிரனுக்குச் சத்துரு வாவதும், மூன்று ஆறு பாவங்களை வகித்திருப்பதும் கெட்டதென் பது திண்ணம். ஆகவே, துலா லக்கினத்துக்கு வியாழன் மாரகத்தி லும் வலுப்பெற்றுக் கெட்டவனாகிறான்.

(4) துலா லக்கினத்துக்கு 4-5ம் பாவாதி (மகர கும்பாதி பதி) பதியான சனி லக்கினாதிபதியான சுக்கிரனுக்கு நேசகிரகமாவ துடன் தனக்குத் தானே நான்காம் கேந்திரபலத்தை சனி பாவன் என்ற நியாயத்தால் அடைந்ததால் பல முற்றும் ஐந்தாம் திரிகோண பலத்தைப்பெற்று மிருப்பதால் யோகங்கொடுக்கும் வல்லமையை துலாலக்கினத்திற் பிறந்தோற்குச் சனி யடைந்திருக்கிறான் என்பது சாஸ்திரத்தின் துணிபே. ஆதலால் துலாலக்கினத்துக்குச் சனி நல்லவ னென்று பெறலாயிற்று. இராஜ யோகம் போன்ற, யோகத்தைக் கொடுக்கும் வல்லமை சனிக்கு துலாலக்கின ஜாதகனுக்கு ஒருக்கால் ஏற்படலாமேயன்றி இந்த லக்கினத்துக்கு சனி இராஜயோக காரக னுமாட்டான். ரிஷப லக்கினத்துக்கு நாம் முன் சொல்லியுள்ளபடி சனி 9-10ம் பாவாதி பத்தியத்தால் தர்ம (9) கர்மாதி (10) பதியாவ தால் சனியை ரிஷப லக்கினத்துக்கு இராஜ யோக காரக கிரகமென் றோம். அதுபோலவே கடக லக்கினத்துக்குச் செவ்வாய் விருச்சிக லக்கினத்துக்கும் மேஷ லக்கினத்துக்கும் அதிபதியாவதால் செவ்வாய் தர்ம (9) கர்மாதி (10) பதியாவதால் செவ்வாயை கடகலக்கினத்துக்கு இராஜயோக காரகமென்றோம். ஆதலால் இராஜயோகம் போன்ற

ணைக் கொடுக்கும் கிரகத்துக்கும், இராஜயோக காரககிரகத்துக்குமுள்ள வித்திபாசத்தை ஞாபகப்படுத்திவைக்கவேண்டிய தவசியமாகும். இவைகளின் நுட்பங்களை யெல்லாம் சிறிது பொறுமையுடன் நிதானித்தல் அவசியமாகும்.

(5) துலாலக்கினத்துக்கு 9, 12ம் பாவாதி (மிதுன கன்னி யாதிபதி) பதியான புதன் லக்கினுதிபதிக்கு மித்துரு என்றதாலும், ஒன்பதாம் ஆதிபத்தியம் சிறப்புள்ளதாலும் 12ம் ஆதிபத்தியத்தின் தீமைபானவைகளைச் சாந்தப்படுத்தப்படலாலும் புதன் நல்லவன்.

(6) துலாலக்கினத்துக்கு 10ம் பாவாதிபதியான சந்திரன் நல்லவனுகிறுன். அவனுக்கு ஏற்பட்டுள்ள ராசியொன்றே யாதலால் சந்திரன் அசுபனுனுலும் சுபனுனுலும் கேந்திராதிபத்திய தோஷம் வலுர்க நியாயமில்லை யென்பது பற்றியும், புதனுடன் (9) சேரின் சந்திரனும் புதனும் இராஜயோக காரகத்துவத்தை தர்மகர்மாதிபர்களாவதால் கொடுக்க வலுவுள்ளவர்கள் என்பது நியாயமாக இருப்பினும் ஓர்வகையில் யோகத்தைக் கொடுக்கும் வலுவை மட்டும் அடைந்திருக்கிறுர்கள் என்று சொல்வதே நியாயமாகும் என்பது எமது துணிபு. இதுபோல சனியும் கேந்திரதிரிகோண பலம் பெறலால் சனியின் சேர்க்கையினுல் சந்திரன், புதன் ஆகிய இவர்களும் இராஜயோகங் கொடுக்குந் தன்மையை யடைந்திருக்கிறுர்களா என்பதைக் குறித்து எவருமே இதுவரை சொல்லியிருப்பதாக நமக்குத் தெரிந்திலது. விவரங்களை மூன்றும் புஸ்தகத்திற் குறிப்பிடுவோம்.

(7) துலாலக்கினத்திற்கு 11ம் அதிபதியான சூரியன் தனக்குள்ள ஆதிபத்தியத்தால் மாரகனுகி கெட்டுவிட்டான். அத்துடன் சுக்கிரனுக்கும் பகை கிரகம் என்ற நியாயங்கொண்டு துலா லக்கினத்துக்கு சூரியன் கெட்டவனே.

குறிப்பு:—துலா லக்கினத்திற் பிறந்தோரிற் பலர் பெருங் கீர்த்தியுடனும், செல்வத்துடனும் வாழ்வதைக் கண்ணுற்றிருக்கிறோம். நூறில் எழுபத்தைந்து பேர்களுக்கு புத்திரதோஷ முண்டென்றுந் தெரியவருகிறது. ஏன்? என்ற வினுவிற்கு பலனைக்குறிப்பிடும் அடுத்த புஸ்தகத்தில் வெளியிடுவோம்.

11. விருச்சிக லக்கினம்—(1) விருச்சிக லக்கினத்துக்கு லக்கினாதிபதியான செவ்வாய் மேஷத்துக்கு ஆறக்குள்ள ஆதிபத்தியத்தால் கெட்டுவிடுவதால் விருச்சிகலக்கினத்துக்குச் செவ்வாய் கெட்டவன் என்பார். கூற்று நியாயமெனத் தோன்றினும் அங்ஙனமன்று என்பதை பின்னுற் சொல்லப்படும்.

(2) விருச்சிகலக்கினத்துக்கு 2, 5ம் பாவாதி (தனுசு மீனாதிபதி) பதி வியாழன் சுபன் என்பதாலும், லக்கினாதிபதிக்கு மித்துருவானதாலும் தனபஞ்சமஸ்தானங்களுக்கு அதிபதியாவதாலும் விருச்சிகலக்கினத்துக்கு வியாழன் நல்லவனே.

(3) விருச்சிகலக்கினத்துக்கு 3, 4ம் பாவாதி (மகர கும்பாதிபதி) பதியான சனி பகைமை யென்றதாலும், 3ம் பாவத்தால் கெட்டும், 4ம் பாவத்தால் நலமடைந்திருப்பினும் வேறு மாரகர்களுடன் சனி சேரின் மாரகத்தில் வருத்தல் கூடுமாதலால் சனி கெட்டவன்.

(4) விருச்சிகலக்கினத்துக்கு 7, 12ம் பாவாதி (ரிஷப துலாதிபதி) பதி சுக்கிரன் சுபன் என்றதால் கேந்திர தோஷத்தாலும் 12ம் ஆதிபத்தியத்தால் இயற்கையிற் கெட்டுமிருப்பதின் காரணமும். மாரகமாதிய நஷ்டங்கள் முதலியவைகள் ஏற்படலாகு மென்றதால் சுக்கிரன் கெட்டவன்.

(5) விருச்சிகலக்கினத்துக்கு 8, 11ம் பாவாதி (மிதுன கன்னியாதி) பதியான புதன் தனக்குள்ள அஷ்டம ஏகாதச தோஷங்களைக் கொண்டிருப்பது பற்றியும் புதன் கெட்டவனே. மாரக முதலியவைகளிலும் வருப்பன்.

(6) விருச்சிகலக்கினத்துக்கு 9ம் பாவாதிபதியான சந்திரன் வளர்பிறையோனுயினும் சரியே, தேய்பிறையோனுயினும் சரியே, 9ம் திரிகோணம் நல்லதென்பதால் சந்திரன் நல்லவன்.

(7) விருச்சிக லக்கினத்துக்கு 10ம் பாவாதிபதியான சூரியன் அசுபனுயினும் கேந்திராதிபத்தியம் கொள்ளல் நல்லதே. மேலும் செவ்வாயின் நண்பனுகிறன் என்பதால் சூரியன் நல்லவன்.

(குறிப்பு)—விருக்ஷிக லக்கினத்துக்கு தர்ம (9) கர்மாதிபர் (10) களான சந்திரனும் சூரியனும் ஒன்றுசேரின் இராஜயோகம் என்பது சாஸ்திரோக்தமாகவேதா னிருக்கவேண்டியதென்பது முன்சொல்லி யுள்ள விதிகளைக்கொண்டு தெரியலாம். அவ்விதமே ஜோதிஷநூலோரும் விருக்ஷிக லக்கினத்துக்கு சந்திரனும் சூரியனும் சேரின் இராஜ யோகபலன் கிடைக்கும் என்பது தங்கள் தங்களது அனுபோக வாயிலாக அறிந்துள்ள விஷயமென்கிறார். அதுவே எமது சம்மதமுமாகும். இது சம்பந்தமாக ஒரு முக்கிய விஷயம் எடுத்துச் சொல்லல் அவசியமெனத் தோற்றலால் அதனையு மிங்கு சமயோஜிதங் கருதிச் சொல்வோம். சந்திரனும் சூரியனும் சேருங்காலம் முழு அமாவாசையாகவேனும், பிரதமையாகவேனும், அல்லது சதுர்த்தசியாக வேனு மிருத்தலே நியாயமாதல் எனச் சொல்லல் தவறுடையதாக மாட்டாதல்லவா? சாந்திரமானத்தின் கடைசி நாள்தான் அமாவாசையாகும். அந்நாளையில் சந்திரனைப் பார்த்தல் கூடாததேயாகும். அப்படிச் சந்திரன் கண்ணுக்குத் தோற்றப்படினும் ஓர் சிறிய வளைந்த ரேகையைப்போற் றோற்றப்படுமே யன்றி வேறல்ல. இங்ஙனம் காணப்படுவதை நம்மவரில் பலர் கண்கூடாகப் பார்த்திருக்கிறோமல்லவா? சாந்திரமான தினங்கள் திதிகளைப் பொறுத்துள்ளனவாக இருப்பதால் திதிகள் பதினைந்து கொண்டது ஒரு பக்ஷமாகும். பக்ஷங்கள் இரண்டு கொண்டது ஒரு மாதமடங்கிய ஏறக்குறைய முப்பது தினங்களாகும். கிருஷ்ணபக்ஷத்துக் கடைசிநாளை அமாவாசை யென்றும், சுக்கிலபக்ஷத்துக் கடைசிநாளை பௌர்ணிமை யென்றும் சொல்லுவோம். சூரியனும், சந்திரனும் ஒன்றுக்கொன்று சுமார் 180 பாகை விலகியிருக்குங் காலமே பௌர்ணிமையாகுமென்றதால் சூரியனிலிருந்து சந்திரன் ஏழாம் ராசியிலிருத்தல் வேண்டும். ஏழாம் ராசி மறைவு ராசியென்பதை எண்ணிக்கொண்டு சந்திரனை மறைவுள்ள அஸ்தமனராசியி லிருப்பதாகச் சொல்லுவது வழக்கமில்லை என்பதையுந் தெரிக. எந்த தினத்தில் அமாவாசையின் வியாபகமிருக்க அதில் சதுர்த்தசியின் வியாபகம் சிறிதேனுங் கலவாதிருக்குமானல் அந்த அமாவாசையை "நஷ்ட இந்து கலாகுஹூ" என்று சொல்வதுண்டு. இப்பேர்ப்பட்ட அமாவாசை தினங்களில் தான் சந்திரனைக் காணவே கூடாததாகும். சாஸ்திர ரீதியாக அன்

றிரவு சூரியனுடன் சேர்ந்த சந்திரனுக்கு ஒரு கலையிருப்பினும் அக்கலை நிஷ்பிரயோஜனமற்றதாகும் என்று தெரிக. எந்த தினத்தில் சதுர்த்தசியின் வியாபக மிருக்க, அதே தினத்தில் அவ்வியாபகத்தின் பின் அமாவாசை வருமாயின் அவ்வமாவாசையை 'சினிவாலி' என்றும் 'சாதிருஷ்டேந்தோ' என்றும் சொல்லுவது வழக்கம். இவ்விதம் நிகழும் அமாவாசைகள் உலகத்துக்கும், உலகில் தோன்றியுள்ள ஜீவராசிகளுக்கும் ஒவ்வொருவருக்குந் தனித்தனியாகவும் ஒவ்வொரு ராஜாங்கத்துக்கும் தனித்தனியாகவும் இவைகளின் வியாபகங்கள் எங்கெங்கு எவரெவருக்குப் பாதிக்குமோ அவரவர்க்கும் அந்தந்த தேயத்துக்கும் பீடை, பிணி, நஷ்ட முதலிய கேடுகளையுண்டாக்கும் அறிகுறிகளாகும். அமாவாசை பௌர்ணிமைகளில் சூரியகிரகணங்களும், சந்திரகிரகணங்களும் வருவனவல்லவா? அவைகளுர கெடுதியே. சூரிய கிரகணத்திலும் சந்திரகிரகணங் கொடியதாகாது. இதுபற்றியே எவனாவது கெட்ட செய்கைகளுக்கு ஈடுபட்டு துஷ்கிருத்தியங்களைச் செய்து இடைவிடாது சிறைச்சாலை முதலிய காவற்சாலைகளைத் தன் சொந்த கிரகங்களில் வசிப்பதற்கு ஒப்ப, சந்தோஷத்துடன் விருப்பவனை "அமாவாசையிற் பிறந்தவன் இவன்" என்போ மல்லவா? விஷகடிகை, அமிர்தகடிகை என்ற இரண்டினுள் விஷகடிகை அமாவாசை திங்குற்றது. அமிர்தகடிகை அமாவாசை அங்ஙனமுள்ளதுபோற் கொடியதல்ல. அமாவாசையிற் பிறந்தோரிற் பல்லோர் கெட்டலைவதை நாம் பார்த்திருக்கிறோம். எளிய குடும்பத்தில் அமாவாசையிற் பிறந்து நல்ல தன்மையையடைந்து மகா மன்னனாகிப் பெருங் கீர்த்தியுடன் விளங்கிய ஒருவரின் ஜாதகத்தையும், மகா மன்னனாக அமாவாசையில் ஜெனித்து பெருங்கேட்டில் மூழ்கித் தன்னுடைய ஏகாதிபத்தியம் அழிந்துவிடுமோவென்ற பெரும் அச்சத்தால் பீடிக்கப்பட்டு அதே விசனத்தில் மூழ்கி இறந்தவரும், உலகின் மகா யுத்தத்திற்குக் காரணபூதராயும் அதனால் ஜீவராசிகளடைந்த கடும் நஷ்டங்களும், அரூத் துயரங்களும், இராமஇராவண யுத்தங்களிலும், பாண்டவ யுத்தங்களிலும், சூரசங்கார காலங்களிலும் இது போன்ற யுத்தங்களிலிருந்திருப்பன வல்லவென்று சொல்லும்படியானவைகளை உலகிற் காட்டி நடத்தியதற்கு அஸ்திவாரமான மற்றோர் மன்னரின் ஜாதகத்தையும் ஆக இரண்டு

ஜாதகங்களையும் உதாரணமாக எடுத்துக் காட்டிவிடல் நலமென்பது பற்றி அவைகளைக் கீழே குறித்துளேம். 3ம் புஸ்தகத்தில் வெளிவரும் சக்கரம் எண்ணம் 11 பார்க்க. மைசூர் சமஸ்தானத்தில் ஓர் எளிய குடும்பத்தில் சார்வரிஸூ கார்த்திகைமீ கேட்டை நக்ஷத்திரத்தில் அமாவாசை யன்று துலாலக்கினத்தில் பிறந்து தம்முடைய 50ம் வயதில் இராஜாவாகி அக்காலத்தில் இராணுவ முறைபில் நிகரற்று விளங்கிய இங்கிலீஷ், பிரான்சு துரைத்தனத்தாரையும், மகாராஷ்ட்டிர அரசர்களையும், நைஜாம் அரசரையும், பாளையக்காரர்களையும் ஒருங்கே நிராகரித்துப் போர்புரிந்து அன்னோர்களை ஜெயித்துத் தம்முடைய அரசாக்ஷியை ஓங்கி வளர்ச்செய்து, கோதாவரி முதல் கன்னியாகுமரி வரையுமுள்ள நாடுகளைத் தம் புஜவலியால் ஜெயித்து ஒப்பற்ற மன்னரெனச் சகலராலுங் கொண்டாடப்பட்டு சுமார் முப்பது வருஷ காலம்வரை தர்ம சாஸ்திரத்துக்கு ஒப்ப அரசாண்டு 7-12-1782ல் அழிபாப்புக முடன் வீரசொர்க்கம் புகுந்தனர். இவர்தான் சுல்தான் ஹைதர் ஆலியாவர். இவர் பிறந்தது அமாவாசை. இறக்கும்போது வயது 82 ஆவது பற்றி இவருடைய ஆயுளின் திர்க்கத்தைப் பற்றியுங் கவனிக்கவேண்டியது முக்கியமானதாகும். இந்த ஜாதகத்தைக் குறித்துள்ள பலாபலன்களை யெல்லாம் தெளிவுற 1924ம் வருஷத்திய அக்டோபர் மாதத்திய சோதிடகலாநிதி சஞ்சிகையில் நாமெடுத்துக் கூறியுள்ளேம். அதனை உற்றுநோக்கி வாசித்தார்க்கே ஜோதிஷ சாஸ்திரப் பெருங்கடலின் ஆழத்துள் மறைந்து கிடக்கும் அரியதும், மனோரம்மியமுமான, விஷயங்கள் தெற்றென வெளியாகும்.

மகா மன்னராகப் பிறந்து கஷ்டமடைந்தவரின் மற்றோர் ஜாதகம் 3ம் புத்தகத்தில் வெளிப்படும் சக்கரம் 12ல் பார்க்க. 1830ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 18ம் தேதி புதன்கிழமை மகநக்ஷத்திரமும் அமாவாசையுங் கூடியபோது ஜனனம். இந்த ஜாதகத்தில் விரையபாவத்தில் கிரகங்கள் நிற்கும் நிலைமையையும் லக்கினாதிபதி கர்மாதிபதியாயிருந்து, அஸ்தங்கதோஷ சகிதம் விரையஸ்தானத்திலிருப்பதையுங் கவனிக்க. புத்திர ஸ்தானாதிபதி கெட்டுவிட்டதால் புத்திர நஷ்டமே யுண்டாயதென்பதையும் சிறிது மனதில் ஞாபகம் வைத்திருப்பது இதனை வாசிப்போருக்கு நன்மையாகும். இவரது சகோதரர் புத்திரரான ஓர் சிற்றரசனை சிராஜீவோவில் சுட்டுக் கொன்றதுபற்றி ஐரோப்

பிய மன்னருள் 1914ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் ஆரம்பமான பெரும்போரில் உலகம் பாதிக்கப்பட்டு அந்தகாரத்தில் மூழ்கிவிடுமோ என்ற ஏக்கத்தை பெரும் இராஜதந்திர நிபுணர்களுக்குள் ஏற்படுத்திக் கோடிக்கணக்கான ஜனங்களின் உயிர் நஷ்டங்களுக்குக் காரணமாகி நின்றது. தைரிய வீரிய ஸ்தானாதிபதி வலுவற்ற தன்மையின் பொருட்டு தமக்கு வயோதிகமாக இருந்தும் தாம் ஏற்பாடு செய்திருந்த நல்ல மாதிரியை அவருடைய சைனியங்கள் கைக்கொண்டு அவர் ஜீவந்தராயிருக்கும்வரை ஒருவாறு பிறர்கண்டு பிரமிக்கும்படியான வழியில் சண்டை செய்துமிருக்கும் நடவடிக்கைகள் ஏமாற்றத்தைக் கொடுத்துவிடுமென்ற விசனத்தில் மூழ்கினவராய், மகாயுத்தம் ஓர் முடிவுக்கு வருமுன்னரே 1917ம் வருஷம் ஜனவரி மாதம் அவருடைய 87ம் வயதில் விண்ணுலகமடைய ஏகாதிபத்திய நாடு ராஜ்ய முறையில் முற்றும் மாறியதைக் கவனிக்கின் நன்கு புலப்படுமன்றோ?

குறிப்பு:—நஷ்ட இந்து கலாகுறை அமாவாசையில் பிறப்போருக்கும் சிறுவாலி அல்லது சாதிருஷ்டேந்தோ அமாவாசையிற் ஜனிப்போருக்கும் வித்தியாசமுண்டென்பது சாஸ்திர சம்மதம். ஹிதர்ஆலியின் ஜாதகத்தில் தனஸ்தானத்தில் ஷட் கிரகங்கள் ஒன்று கூடியிருந்தமையால் தேசாதிமன்னரது பதவியை எளிய குடும்பத்திற் பிறந்தும் பெற்றார். ஆஸ்திரியா ஏகாதிபத்திய பிரான்ஸிஸ் ஜோசப் சக்கரவர்த்தியாருடைய ஜாதகத்தில் நஷ்ட ஸ்தானத்தில் அஸ்தங்கத் தோஷங்களுடன் கூடிய நான்கு கிரகங்களிருந்தமையால் ராஜாங்கப் புரட்சியால் நஷ்டத்தை யுடையவரானார் என்றதே இங்கு போதுமான சான்றாகும். சமயம் நேரிடின் மற்றவைகளை யாங்காங்கு எடுத்துக் கூறுவோம். பிரஸ்தாப லக்கினம் விருச்சிகமாக இருக்க அதனை விடுத்து வேறு லக்கின பாவங்களை எதுபற்றிக் கூறல் வேண்டுமென வியமுற்று வினவுவோர்க்கு அமாவாசையை மட்டும் எடுத்துக்காட்டல் வேண்டும் என்றதால் அமாவாசையிற் பிறந்துள்ள ஜாதகரின் இயல்புகளை எடுத்து உதாகரித்தோமென்பதுவே விடையாகும்.

11. தனுசலக்கினம் — (1) தனுசு லக்கினத்துக்கு 1, 4ம் பாவாதி (தனுசு மீனாதிபதி) பதி வியாழனாவதாலும், அவன் சுபன் என்றதால் 1, 4க்குள்ள ஆதிபத்தியம் காரணமாக கேந்திரதோஷ

மடைந்து கெட்டுவிடுகிறான். லக்கினாதிபதிகள் கெட்டுவிடும் தன்மைகளையும் சிறிது ஞாபகத்திலிருத்த வேண்டியதும் அவசியமே.

(2) தனுசு லக்கினத்துக்கு 2-3ம் பாவாதி (மகர கும்பாதிபதி) பதியான சனி வியாழனுக்கு சமபாவமுடையவன் என்றாலும் வியாழன், செவ்வாய், சூரியன், சந்திரன் இவர்கள் ஒருவகுப்பினர். சனி, புதன், சுக்கிரன் இவர்கள் மறுவகுப்பினர். இவ்விரு வகுப்பினருள், ஒரு வகுப்பினர் மற்றோர் வகுப்பினருக்கு ஒவ்வாதவர் என்பதையும் தெரிக. 2ம் பாவாதிபத்தியத்தால் சனி மாரகத்தில் வலுக்கவும், 3ம் பாவாதிபத்தியத்தால் தோஷமுறுதலும் தனுசு லக்கினத்துக்குச் சனி நல்லவனன்று.

(3) தனுசுலக்கினத்துக்கு 5, 12ம் பாவாதிபதி (மேஷ விருச்சிகாதிபதி) யான செவ்வாய் லக்கினாதிபதியான வியாழனுக்கு மித்துருவானதாலும், 5ம் திரிகோண பலத்தைச் செவ்வாய் பாபனானாலும், அடைந்திருப்பது நல்லது என்றதாலும், பாபக்கிரகங்கள் கோணங்களிலிருத்தல் கூடாதென்பதை இதனைக் கற்றுக்கொள்ளும் மாணவர்கள் மறந்துவிடக் கூடாது. 12ம் விரையாதிபத்தியம் செவ்வாய்க்குக் கூடாதென்றாலும், செவ்வாய்க்கு தனுசு லக்கினத்துக்கு ஏற்பட்டுள்ள தாரதம்மிய பலத்தைக் கவனித்துப் பார்க்குமிடத்து செவ்வாய் நல்லவனும்.

(4) தனுசுலக்கினத்துக்கு 6, 11ம் பாவாதி (விரிஷப துலாதிபதி) பதி தனக்குள்ள 6, 11ம் பாவாதிபத்தியத்தாலும், லக்கினாதிபதிக்குச் சத்துருவென்ற நியாயத்தாலும் கெட்டுவிட்டான். சுக்கிரன் தனுசு லக்கினத்துக்கு மாரகாதிபதிகளின் சேர்க்கையைப் பெற்றால் ஜாதகனுக்குப் பெரும் நஷ்டங்களையும், அத்துடன் உயிர்ச்சேதத்தையும் கொடுத்து அல்லற்படுத்துவது திண்ணம். சுக்கிரனிலும் மிகக் கெட்டவன் தனுசு லக்கினத்துக்கு வேறு ஒரு கிரகமும் இருப்பதாக நமக்குத் தோன்றவில்லை.

(5) தனுசு லக்கினத்துக்கு 7, 10ம் பாவாதி (மிதுன கன்னி[illegible]பதி) பதியான புதனைச் சேர்க்கையினால் சுபன், அசுபன் எனத்[illegible]ானித்துச் சுபனானால் கேந்திராதிபத்திய தோஷ மின்மையைக்[illegible]ண்டு நிதானித்த பின்னரே புதனை தனுசு லக்கினத்துக்கு நல்ல

வனு? கெட்டவனு? என்று நிர்மானிக்க வேண்டியது சாஸ்திர சம்மதம் என்றதை எடுத்துக் காட்டினேம். புதன் மாரகாதிபதியாகானு என்ற விஷயத்தைக் கவனிக்கும்போது தனுசு லக்கினத்துக்கு மாரகாதிபதியாகவும் கூடுமென்பதே எமது சம்மதம். மற்றுமுள்ள நூலோர் இது விஷயமாக நிதானித்தலில் குழப்பத்தையும், ஐயப்பாட்டையும் வெளியிட்டுவிட்டுச் சும்மா இருந்துவிடுகின்றனர்.

(6) தனுசு லக்கினத்துக்கு 8ம் பாவாதிபதியான சந்திரன் வியாழனுக்கு மித்துருவானதாலும், சந்திரன் ஒரே ராசிக்கு மட்டும் ஆதிபத்தியம் பெற்றிருப்பதால் சந்திரனுக்கு அஷ்டம தோஷங் கிடையாதென்ற சாஸ்திர சம்மதத்தையுந் தழுவி தனுசு லக்கினத்துக்குச் சந்திரனையும் நல்லவன் என்ற நூலாசிரியரிற் சிலரின் கருத்தே நம்மதுமாதலால் சந்திரனை நல்லவன் என்கிறேம்.

(7) தனுசு லக்கினத்துக்கு 9ம் அதிபதியான சிம்மாதிபன் சூரியனுவதாலும், சூரியனை ஒத்த ஏனைய பாபகிரகங்கள் திரிகோணுதிபத்திய மடைதல் நல்லதென்றதாலும், வியாழனுக்குச் சூரியன் நட்பு என்றது பற்றியும் தனுசு லக்கினத்துக்கு சூரியனை நல்லவன் என்கிறேம்.

குறிப்பு:—தனுசு லக்கினத்திற் பிறந்தோர்க்கு இராஜயோகத்துவம் எக்கிரகத்தினுல் அல்லது எக்கிரகங்களின் சேர்க்கையினுல் உண்டாகும் என்பதைப்பற்றி ஆராய்தலிக்கு அவசியம் என்றது கொண்டு அதனைச் சிறிது ஆராய்ந்து நமது கோட்பாட்டையும் வெளியிடுவோம். இராஜயோகம் திரிகோண கேந்திராதிபத்தியத்தை அடைந்திருக்கும் ஒரே கிரகத்தினுலேனும், (உதாரணமாகக் கடகலக்கினத்துக்குச் செவ்வாயைப்போல் என்க. அதனைப் பார்க்க) அல்லது 9, 10ம் பாவாதிபர்கள் என்ற தர்மகர்மாதிபர்களின் சேர்க்கையாலேனும் கிடைக்குமென்க. தனுசலக்கின ஜாதகிக்கு ஏதேனும் ஒரே கிரகம் தர்மகர்மாதிபத்தியத்தைப் பெற்றிலதென்றுலும், வேறு எக்கிரகமும் 4, 5; 4, 9; 7, 5; 7, 9 - ஆகிய கேந்திர திரிகோணங்களையு மடைந்திருக்கவில்லை என்றதால் இரண்டு வெவ்வேறு கிரகங்கள் ஒன்று கேந்திராதிபத்தியமும், மற்றொன்று திரிகோணுதிபத்தியம் பெற்றுள்ளவைகளில், திரிகோணத்தில் முழுப்பல மடையும்

அதிபதியான சூரியனும், கேந்திரத்தில் முழுப்பல மடைந்த 10ம் கேந்திராதிபதியான (7-10) புதனும் சேரின் இராஜயோகமுண்டு எனலாமல்லவா? ஆம் என்றது விடையாகும். ஆனால், சூரியன் புதன் இவ்விருவர்களின் சேர்க்கையைப் பற்றியும் தனுசு லக்கினத்துக்கு இராஜயோகம் பிறப்பிக்கும் சம்பந்தத்தைப் பற்றியும், சில நூலோர் எதுவுமே கூறாது விடுத்திருக்கின்றனர். இதில் ஒரு முக்கிய விஷயத்தை கவனிக்கவேண்டிய துண்டு. சூரியன் புதன் இருவர்களின் சேர்க்கையால் தனுசு லக்கினத்துக்கு இராஜயோக முண்டென்பதை யாம் மறுக்கவில்லை என்றாலும், சூரியனுடன் சம்பந்தப்படும் எக் கிரகமானாலும் சரியே, அதிலும் புதன் அஸ்தங்கத முதலிய தோஷத்துக்குள்ளாதல் சகஜமாவது பற்றி, புதனின் சேர்க்கையால் இராஜயோகமிருப்பினும் அது பிரயோஜன மற்றதெனக் கருதிச் சில நூலோர் இராஜயோக சம்பந்தத்தைக் குறித்து தனுசு லக்கினத்துக்கு 9, 10ம் சேர்க்கையைப் பற்றி எதுவுமே சொல்லாது விடுத்தனர் போலும். மாரக சம்பந்தமாகப் பேசின் செவ்வாய் கொல்லான், வியாழன் கொல்லான், சூரியன் கொல்லான், ஆனால் சனி சூரியனுடனும் செவ்வாயுடனும் சேரின் கொல்லான் என்பது நூலின் துணிபு. இதையும் ஒருவாறு நாம் ஆராய்தல் பொருத்தமுடையதாகும். மாரகத்தில் சனியை ஒத்த வலுத்த கிரகங்கள் மற்ற கிரகங்களின் சேர்க்கையினால் மாரகத்தில் எப்படி இளைத்துவிடுவான் என்பது புலப்படவில்லை. அங்ஙனம் இளைக்கான் என்பதே எமது கருத்தாகு மென்பதையுங் காட்டிவிட்டோம். மாரகாதிபதிகளுடன் சேர்ந்த கிரகங்களும், மாரகங் கொடுப்பதில் வலுவுள்ளவர்களாகவே இருக்கவேண்டியது நியாயமாக இருக்க, இங்ஙனங் கூறியது எதுபற்றியோ? என்பது புலப்பட்டிலது. சந்திரனையும் புதனையும் மாரகர்கள் எனச் சொல்லலும் பிசகாகமாட்டாதல்லவா?

12. மகரலக்கினம்—(1) மகரலக்கினத்துக்கு லக்கினாதிபதி (1ம் பாவாதிபதி)யும், 2ம் பாவமான கும்பாதிபதியும் சனியே என்றதால் பாபனான சனிக்கு லக்கினாதிபத்தியத்தா லடையும் கேந்திர பலத்தால் நலமும், இரண்டாம் பாவத்தன்மையால் மாரகத்தில் வலுவடைதலும் கூடுமென்பதாலும், 2ம் பாவத்தின் சுபாசுபங்களை இரண்டாம்

அதிபனே மற்றுமுள்ள பலன்களால் நிதானித்துச் சொல்லவேண்டிய தென்பதாலும், பொதுப்படப் பார்க்குமிடத்து லக்கினதிபதி எவனே அவனே இங்கு மாரக ஸ்தானதிபதியாகவு மிருக்குங் காரணத்தால் சனி தன்னுடைய ஆதிபத்தியமுள்ள ராசியான மகரத்தில் பிறந்தவனுக்கு இரண்டாம் ஆதிபத்திய மாரக வலுவினல் கொல்லத் துணிவு கொள்வதற்கு மனமாகாததால் சனியைப் பொதுப்பட மற்றப் பலன்களினுங் கெடாதிருந்தால் மகரலக்கினத்துக்கு ஒருவாறு நல்லவன் என்ற எமது சித்தாந்தத்தை வெளியிட்டிருக்கிறோம்.

(2) மகரலக்கினத்துக்கு 3, 12ம் பாவாதி (மீன தனுஷாதிபதி) பதியான வியாழன் சனிக்குப் பகைவனுவதுடன் துஷ்ஸ்தான பாவங்களின் (3-12) ஆதிபத்திய தோஷத்தால் மகரலக்கினத்துக்கு வியாழன் கெட்டவன். ஆயுள் நஷ்டமுங் கொடுப்போனுவன் வியாழன்.

(3) மகரலக்கினத்துக்கு 4, 11ம் பாவாதி (மேஷ விருச்சிகாதிபதி) பதி செவ்வாய் பாபன் என்றதால் நாலாம் கேந்திரவனுவும், பதினென்றும் பாவத்தால் தோஷமு மடைகிறுன் என்ற நியாயங்களால் மகரலக்கினத்துக்கு செவ்வாய் கெட்டவன்.

(4) மகரலக்கினத்துக்கு 5, 10ம் பாவாதி (விருஷப துலாதிபதி) பதியான சுக்கிரன் லக்கினதிபதியான சனிக்கு நேசமுற்றவனும், சுக்கிரனே தனக்குள் மகரலக்கினத்துக்கு 5ம் திரிகோண பலத்தையும், 10ம் கேந்திர பலத்தையு மடைந்திருப்பதால் சுக்கிரனேயே இராஜயோகம் மகரலக்கினத்துக்குக் கொடுக்கக்கூடியவன் என்கலாம் அல்லவா? ஆனுல் சுக்கிரன் தனக்குள் பத்தாம் கேந்திராதிபத்தியத்தால் (துலாதிபதியானதால்) சுபன் என்ற நியாயங்கொண்டு கெட்டுவிடுகிறுனே, அப்படி யிருக்க சுக்கிரன் இராஜயோகத்தை மகரலக்கினத்துக்குக் கொடுக்கும் பலிஷ்டத்வ மடைந்திருக்கிறுன் என்ற வசனம் சிறிது பழுதுபடுமல்லவா என்பார் வினு மிகப் பொருத்தமுடையதே. அன்னர் வினவிற்கு விடையாவது, எந்த சுபகிரகமானுலும் திரிகோணதிபத்தியத்துடன் கேந்திராதிபத்தியமும் பெற்றிருந்தால் அப்பேர்ப்பட்ட சுபகிரகத்துக்குக் கேந்திரதோஷம் பங்க

மென்பது சொல்லாமலே யமையுமென்க. மகர லக்கினத்துக்குச் சுக்கிரன் இராஜயோக வலுவுள்ளவனுதலால் நல்லவனே.

(5) மகரலக்கினத்துக்கு 6, 9ம் பாவாதி (மிதுன கன்னியாதிபதி) பதியான புதன் லக்கினுதிபதியான சனிக்கு நண்பன். ஆரும் பாவாதிபத்தியத்தால் புதன் கெட்டுவிட்டான். ஒன்பதாம் பாவாதிபத்தியத்தால் திரிகோண பலத்தில் முழுப்பலம் பெற்ருன். நன்மையையும், தீமையையும் சீர்தூக்கி ஆராயுமிடத்து புதனுக்கு நன்மையான பலங்களை மிகுத்துக் காணப்படுவதால் புதன் மகரலக்கினத்துக்கு நல்லவன் என்று பெறலாயிற்று. இராஜயோகத்துக்குத் தர்ம கர்மாதிபதிகளின் (9-10) சேர்க்கை முக்கியமென்ருே மல்லவா? இங்கு ஒன்பதுக்குடைய புதனும், பத்துக்குடைய சுக்கிரனும் சேர்ந்தால் இராஜயோக முண்டென்பது விதியாதலால் அதனைப்பற்றிச் சொல்வது அவசியம். புதனுக்குள்ள ஆரும் ஆதிபத்திய தோஷத்தால் புதனுக்குள்ள ஒன்பதாம் பாவாதிபத்தியத்திற்குக் கேடும், பிதிர் ஞாதிகளை இட்ட சச்சரவும், ரோகாதிகளால் பீடையும், வாழ்வில் ஏற்றமும் தாழ்ச்சியும் அடிக்கடி இருந்துகொண்டிருப்பதும், வீணை வழக்குத்தொடர்புகளு மிருப்பதால் சுக்கிரனும் புதனும் சேர்ந்து மகரலக்கின ஜாதகனுக்குக் கிடைக்கும் இராஜயோகம் சுக்கிரன் ஒருவனுலேயே கொடுக்கப்படும், இராஜயோகத்திலும் தாழ்வுற்றதென்று நம் புஸ்தகத்தை வாசிப்பவர்களுக்கு எடுத்துக்காட்டி யிருக்கின்ருேம். இவைகள் போன்ற விஷயங்களின் பெருமையை சாஸ்திர விற்பத்தியடைய நாளடைவில் தெரியும். இப்போது இவைபோன்றவைகளிற் சிலருக்கு மனப்பற்றிருக்காது. எப்படியாயினும் பொறுமையுடன் கற்றுக்கொள்ளவேண்டியதே அவசியமாகும்.

(6) மகரலக்கினத்துக்குச் சப்தம ஸ்தானுதிபதி (7) யான சந்திரனை வளர்பிறையோன் தேய்பிறையோன் என்று தீர்மானித்தும் சுபன், அசுபன் என்று நிச்சயித்தும், அவனுக்குள்ள ஏழாம் பாவகேந்திரத்தின் தன்மையையு மறிந்து மகரலக்கினத்துக்கு நல்லவன் கெட்டவன் என்று நிச்சயிக்க. பொதுப்படச் சந்திரன் நல்லவனே எனினும், ஒருக்கால் மாரகவனுப்பெறினுமாம்.

(7) மகரலக்கினத்திற்கு அஷ்டமாதிபதி (8) யான சூரியன் ஒரே ராசிக்கு ஆதிபத்தியம் பெறலால் முன் தனுசு லக்கினத்தில் சந்திரனுக்குச் சொல்லியதுபோல அஷ்டம தோஷியாகமாட்டான். சனிக்கு சூரியன் பகைவன் என்றதால் மகரலக்கினத்துக்குச் சூரியன் கெட்டவன். செவ்வாய் முதலிய பாவகிரஹங்களும், வியாழன் மாரகாதிபதிகளுடன் சேரின் அவைகளை இந்த லக்கினத்துக்கு மாரகர் என்று சொல்லலாம்.

13. கும்பலக்கினம் — (1) கும்பலக்கினாதிபதியான சனியே விரையபாவமான மகரத்துக்கும் ஆதிபத்தியம் பெறலால், நஷ்ட பாவாதிபத்தியத்தை லக்கினாதிபதியே அடைந்திருப்பதால் கும்ப லக்கினாதிபதியான சனி லக்கினபாவத்துக்குக் கெட்டவன் ஆனால் மகரலக்கின பாவத்துக்கும் சனியே அதிபனாக இருக்க அவனை மகர லக்கினத்து நல்லவன் என்றதையும் கவனிக்க.

(2) கும்பலக்கினத்துக்கு 2, 11ம் பாவாதி (மீன தனுசாதிபதி) பதியான வியாழன் இரண்டாம் பாவத்தால் மாரகாதிபத்தியமும் பதினொராம் பாவத்தால் துஷ்ஸ்தான பாவாதிபத்தியமும் பெறவதாலும், வியாழன் சனிக்கு சத்துருவானதாலும் கும்பலக்கினத்துக்கு வியாழனைக் கெட்டவன் என்பார் கூற்று ஒருவாறு நியாயமாக இருப்பினும் 2, 11ம் பாவங்கள் தனலாப ஸ்தானங்களை சுபக்கிரஹமான வியாழன் பெற்றிருத்தலால் வியாழனுக்கு வேறுவித பலன்களால் இவை பங்கமாகிவிட்டால் கும்பலக்கின ஜாதகனுக்கு வாழ்வில் உயர்வும், தாழ்வும் இருத்தல் கூடுமெனலாம் எனினும், பொதுவாக வியாழன் கும்பலக்கினத்துக்குப் பொல்லான் என்பது எதுபற்றியோ எனில், கிடைத்துள்ள தனத்தை நாசம் செய்வதிலேனும் வேறு வகைளிலேனுமாம்.

(3) கும்ப லக்கினத்துக்கு 3–10ம் பாவாதி (மேஷ விருச்சிகாதிபதி) பதியான செவ்வாய் மூன்றா மாதிபத்தியத்தால் கெட்டும் பாபன் என்ற தன்மையில் கேந்திராதிபத்தியத்தால் நலமடைந்துமிருப்பதில் செவ்வாயை சனிக்கு பகைவன் என்றாதிய விஷயங்களை யெல்லாம் சீர்தூக்கிப் பார்க்குமிடத்து கும்ப லக்கினத்திற்குச் செவ்வாய் மாரக முதலியவைகளைக் கொடுக்கினும் கும்ப லக்கினத்திற்கு சமபாவ

முடையவன் என்பதே எமது கருத்தாகும். ஏனைய நூலோர் எவ்வித மான கொள்கையைப் பின் பற்றினும் அன்னோர் கொள்கையில் அவர் கள் தவறுண்டதாக ஒப்புவார்கள் என்பதை கீழே எடுத்துக் காட்டப் படும் விஷயத்திலிருந்து தெரிந்துகொள்வார்கள் என்பதிற் சந்தேக மில்லை. பெரும்பாலோர் கும்ப லக்கினத்திற்குச் செவ்வாயைக் கெட்டவன் என்றது பொருத்தமாகாததென்பதையுங் காண்க.

(4) கும்ப லக்கினத்துக்கு 4-9ம் பாவாதி (ரிஷப துலாதிபதி) பதியான சுக்கிரன் சுபன் என்ற நியாயங்கருதி கேந்திராதி பத்தியத் தால் கெட்டவன் என்றும், திரிகோணாதி பத்தியத்தால் வலுவுள் ளவன் என்றும் முன் மகர லக்கினத்திற்கு சுக்கிரனைப்பற்றிச் சொல் லியதைப்போல சுக்கிரன் கும்ப லக்கினத்துக்கும் தனக்குத் தானே கேந்திராதி பத்தியமும் திரிகோணாதி பத்தியமும் பெறலால் சுபன் என்ற காரணங்கொண்டு சுக்கிரனுக்கு ஏற்படுகிற கேந்திராதித்வம் பங்கமாவது தெரிக. இவனும் இராஜயோகத்தை கும்ப லக்கினத் துக்கு கொடுக்கும் ஆற்றலைப் பெற்றிருக்கிறுன் என்பதை இதைக் கற்றுக்கொள்ள விரும்புவார்கள் தெரியக்கடவர். இராஜயோகத்துக்கு தர்ம (9) கர்மா (10) திபர்களின் சேர்க்கையிருந்தாலன்றி கிடைத்தல் அரிது என்று பல இடங்களில் பிரஸ்தாபித்திருக்கிறோ மல்லவா? ஆனல் கும்ப லக்கினத்திற்கு சுக்கிரனுக்குள்ள துலாதி பத்தியத்தால் 9ம் பாவாதி பதித்துவமும், செவ்வாய்க்குள்ள பத்தாம் பாவாதி பதித்துவமும் ஏற்பட்டிருக்குங் காரணங்களால் சுக்கிரனும் செவ்வா யும் சேர்வதினல் கும்பலக்கின ஜாதகனுக்கு இராஜயோக முண்டென் பது நிச்சயம். அப்படி அவ் விருவர்களின் சேர்க்கையினல் உண்டா கும் இராஜயோகம் கும்ப லக்கினத்துக்கு சுக்கிரன் ஒருவனல் மட்டும் கிடைக்கும் இராஜயோகத்திலும் சிறந்தே காணப்படும் என்பது நிச்சயம். இதுபற்றிச் செவ்வாய் கும்ப லக்கினத்துக்கு நல்லவன்.

(5) கும்ப லக்கினத்திற்கு 5-8ம் பாவாதி (மிதுன கன்னியா திபதி) பதியான புதன் 5ம் திரிகோணாதி பத்தியத்தை அடைதல் நல்லதேயானல் அஷ்டம பாவாதி பத்தியமடைதல் கேடாவதில் சுக்கி ரனைச் சேர்க்கைபற்றி சுபன், அசுபன் எனத் தீர்மானித்துக்கொண்டு கும்ப லக்கினத்திற்கு நல்லவன் கெட்டவன் என்று சொல்லல் நியா

யம். சனி ஆண் அலி கிரகமாயும் புதன் பெண் அலி கிரகமாயு மிருப்பதில் புத்திர பாவ முதலிய தோஷங்களில் புதன் பெரும் பாலும் வலுத்துக் காட்டுவான்.

(6) கும்ப லக்கினத்துக்கு 6ம் பாவாதி பதியான சந்திரன் தனக்குள்ள துஷ்ஸ்தானாதி பத்தியத்தால் கெட்டுவிட்டான். ஜலகண்டம், க்ஷய முதலிய ரோகங்களால் மாரகமுங் கொடுத்தல் கூடும்.

(7) கும்ப லக்கினத்துக்கு ஏழாம் பாவாதி பத்தியம் பெற்ற சூரியன் பாவன் என்றதால் கேந்திராதி பத்தியம் சூரியனுக்கு நல்லதென்பதால் கும்ப லக்கினத்துக்கு சூரியன் நல்லவன் எனினும் இயற்கைப் பகையைப்பற்றியும் மாரக ஸ்தானம் பற்றியும் பொதுவான பலன் சூரியனுக்கென்க.

(குறிப்பு) மேலே காட்டியுள்ளவைகளிலிருந்து கும்ப லக்கினத்துக்கு அநேக பாவங்களின் (Bhavas) அதிபர்களான கிரகங்கள் தங்கள் தங்கள் பலாபலன்களின் வலுத்தன்மையில் ஏற்றமுந் தாழ்வுமாக கலந்துகொண்டே பெரும்பாலும் வருவதால் கும்ப லக்கினத்தில் பிறந்தோன் எவ்வளவு உயர்ந்த வாழ்விலிருப்பினும் அவமானம், மனக்கிலேசம் முதலியவைகளை அனுபவிக்காது போகான் என்றது பெரியவர்களின் வசனம். அதுபற்றியே கும்ப லக்கின ஜாதகிக்கு கிரகங்கள் எவ்வளவு வலுவுற்றதாக இராசிசக்கரத்திற் காணப்படினும் அதனை சாதாரணமாகவே கிரகங்கள் ராசி சக்கரத்தில் விருஷபலக்கின ஜாதகிக்கு அமைந்திருப்பதுடன் ஒப்பிட்டுப் பார்க்கின் விருஷப லக்கினமே கும்ப லக்கினத்திலும் சிறந்ததென்பார் .சாஸ்திரமறிந்த பெரியோர். செவ்வாய், சனி, வியாழன், சந்திரன், சூரியன் இவர்கள் மாரகராவார்கள்.

14. மீனலக்கினம் — (1) மீனலக்கினாதிபதி 1, 10ம் பாவாதி (மீன தனுசாதிபதி) பதி சுபகிரகமான வியாழனாக விருப்பதால் கேந்திரதோஷமடைந்து மாரகர்களின் சேர்க்கை முதலியவைகளை அடையினும் மாரகத்தைக் கொடுப்பதில் இளைப்பான். கேந்திராதிபத்தியத்தால் தன்னுடைய லக்கினத்துக்கு அவனே கெட்டவனாகிறான். இது விஷயமாக லக்கினாதிபதி லக்கினத்துக்குக் கெட்ட தன்மையை

அடைவதைப்பற்றி முன்னம் அநேக தடவைகளில் சொல்லியதை இங்கும் எடுத்துக் கூறுகிறோம்.

(2) மீனலக்கினத்துக்கு 2, 9ம் பாவாதி (மேஷ விருச்சிகாதி பதி) பதியான செவ்வாய் தனபாக்கிய பாவாதிபதியாயும் செவ்வாய் பாவன் என்ற விதிக்குத் திரிகோணாதிபத்தியம் பெறலால், நல்ல தாசையால் செவ்வாய் வேறு மாரகாதிபர்களுடன் சேர்ந்து மாரகம் முதலியவைகளைக் கொடுப்பான் என்றாலும் மீனலக்கினத்துக்கு செவ்வாய் நல்லவனே. முன்னம் மீனலக்கினாதிபதியான வியாழனைக் கெட்டவன் என்று மாத்திரம் சொல்லி நிறுத்திக்கொண்டோம். ஆனால் அவனுக்குள்ள பத்தாம் ஆதிபத்திய பாவம் இருப்பதால் ஒன்பதாம் ஆதிபத்தியமுடைய வேறு கிரஹத்துடன் சேர்ந்தால் இராஜயோகமுண்டாகுமென்பதை ஆராயுமிடத்து லக்கினாதிபதியான வியாழன் பத்தாம் பாவாதிபதியாவதாலும் செவ்வாய் 2-9ம் பாவாதிபத்தியத்தில் ஒன்பதாம் பாவமான தர்மாதிபதியாவதாலும் வியாழனும் செவ்வாயும் கூடியிருக்கின் மீன லக்கின ஜாதகனுக்கு இராஜயோகம் உண்டு என்பார் சாஸ்திரமறிந்த பெரியோர். இக்காரணம் பற்றி வியாழனை மீனலக்கினத்துக்குக் கெட்டவன் என்ற வசனம் ஆராய்ச்சியில் வைக்க யோக்கியமுடையது எனச் சொல்லும் சிலர் கூற்றும் மற்றுமோர் வகுப்பினர் வியாழனை மீன லக்கினத்துக்கு நல்லவன் என்றதும் பிசகாகமாட்டாதென்க. இவ்விதத் தன்மையில் வியாழனை நல்லவனாகக் கொள்வதுஞ் சரியே.

(3) மீன லக்கினத்துக்கு 3, 8ம் பாவாதி (விருஷபதுலாலக்கினாதிபதி) பதியான சுக்கிரன் துஷ்ஸ்தானங்களாதிபத்தியத்தால் மீன லக்கினத்துக்குக் கெட்டுவிட்டான்.

(4) மீன லக்கினத்துக்கு 4, 7ம் பாவாதி (மிதுனகன்னியாதிபதி) பதியான புதன் சேர்க்கையினால் கெடாதிருப்பின் சுபனாகிறதால் கேந்திரதோஷமடைந்து மீனலக்கினத்துக்குக் கெட்டவனாகியும் அச்சேர்க்கை காரணமாகக்கெட்டு அசுபனானால் கேந்திராதிபத்திய நலத்தில் வலுத்தும் மீனலக்கினத்துக்கு நல்லவனாகிறான்.

(5) மீன லக்கினத்திற்கு 5ம் பாவாதிபதியான சந்திரன் திரிகோணத்துவமடைந்து வியாழனுக்கு மித்ருவாகியிருப்பதால் சந்திரன் நல்லவனே.

(6) மீன லக்கினத்துக்கு ஆறாம் பாவாதிபதி சூரியன். இவன் வியாழனுக்கு நண்பன். எனினும் பாவாதி தோஷத்தால் மீன லக்கினத்துக்குக் கெட்டு விடுகிறான்.

(7) மீன லக்கினத்துக்கு 11, 12ம் பாவாதி (மகரகும்பாதிபதி) பதியான சனி கெட்ட ஸ்தானங்களுடைய ஆதிபத்தியம் அடைவதாலும் வியாழனுக்குச் சத்துருவானதாலும் மீனலக்கினத்துக்குச் சனி கெட்டவன்.

(குறிப்பு) சனி, புதன், சுக்கிரன், சூரியன், செவ்வாயாதியர்கள் மாரகத்தில் வலுத்தும் இளைத்தும் காண்பார்கள்.

15. இதுகாறும் இன்னலக்கினத்தில் பிறந்தார்க்கு இன்ன இன்ன பாவாதி பதிகள் இன்ன இன்ன தன்மை வாய்ந்தவராவார் என்ற பொதுவிதிகளின் கருத்துக்களை எடுத்துக் காட்டியும் ஆங்காங்கு அவசியம் எனத்தோன்றிய சந்தர்ப்பங்களில் சிறப்பு விதிகளையும் புற நடை விதிகளையும் சூசிப்பித்துக் காட்டியும் மேஷ லக்கினம் முதல் மீன லக்கினம் ஈறாக கூடிய 12 லக்கினங்களையும் ஒவ்வொன்றாக எடுத்துக்கொண்டு ஒவ்வொரு லக்கினத்துக்கு முள்ள பன்னிரண்டு பாவ வகைக்கு பன்னிரண்டு லக்கினங்களுக்கு மொத்தம் கூடியது 144. பாவாம்சங்களையும் பொதுப்படையாக எடுத்துக் கூறினோம். அவைகளின் சாராம்சத்தையும் இதை வாசிப்பவர்கள் கற்றறிந்திருப்பார்கள் என்ற நம்பிக்கை கொண்டு பாவங்களில் கிரகங்கள் நிற்கும் வகை விவரங்களுக்குத் தக்கபடி பலா பலன்களை பொது விதிப்படி ஆங்காங்கு வேண்டிய அளவு எடுத்துக்காட்டி விட்டோம். ஆரம்பத்தில் அவைகள் சிறிது முறண்போலத் தோன்றினும் முயற்சியின் பயனால் விஷயம் களங்கமற மனதிற்குப் புலப்பட்டு கற்பவர்களைச் சந்தோஷிப்பிக்கும் என்பது திண்ணம். சுபம்.

முதற்புத்தகம் முற்றுப்பெற்றது.

---

# ஜோதிஷ தரங்கிணி.

## இரண்டாம் புத்தகம்.

---

1. இலக்கினமென்பது முதலாவது பாவமாகும். இதுவே ஜீவன். இதைக்கொண்டே ஒருவரின் சரீரம், சரீர உறுப்புகளின் வேறுபாடு, சந்தோஷம், துக்கம், பலம், சொப்பனாதி அவஸ்தைகள், முயற்சி, ஆயுள்தீர்க்கம், கௌரவம், பொறுமை, ரோம வகுப்பும் அதன் நிற முதலிய லக்ஷணங்களும், ஜீவனோபாயம், உருவம், சர்மத்தின் தன்மை, நித்திரை, ஞானம், குற்றம், ஞானியின் தன்மையில் உலகப்பற்றைத் துறத்தல் (சந்நியாசத்துவம்) முதலியவைகளைத் தெளிக.

2. இரண்டாம் பாவம்:—குடும்பம், தனம், தெய்வபக்தி, இராஜபக்தி, குருபக்தி, பிதிர், மாதுருபக்தி முதலியன. நல்ல போஜனம், மெய், பொய், நாக்கு, நகம், கண், ஆடை, ஆபரணம், வயிரம், செம்பு, நவரத்னாதிகள், கோபம், ஏமாற்றுந்தொழில், விலைக்கு வாங்கலும் கொடுத்தலும், மாதுரியமான வார்த்தை, தனார்ஜிதம், அதில் முயற்சி, செட்டு, வித்தை, பொன், வெள்ளி, நவதானியங்கள், விநயம், நாசி, மனோஉறுதி, ஆள், அடிமை, கிராஹ்யசக்தி, பிறர்க்குப் போதிப்பதில் வல்லமை, கால்நடை, மாரகம்.

3. மூன்றும் பாவம்:—தைரியம், வீரியம், காது, பாதம், யுத்தம், சகோதரம், காதுரோகம் (Disease of the Ear) பிரயாணம், பூமி, மனோநிலைதடுமாறல், பாதநோய், பௌருஷம், கனவு, பூஜா இடங்கள், தயாளம், வேலையாட்கள், சாகசம், உறவினர், நண்பர், கழுத்து, கெட்ட உணவு, ஜாக்கிரதை, சக்தி, பிதிரார்ஜிதலாபமும் நஷ்டமும், ஆபரணாதிகள், நடத்தை, ஒழுக்கம், கலவியில் இன்பம், லாபம், உடலின் வளர்ச்சியும் தேகக்கட்டும் கர்ன பரம்பரையாக உயர்ந்ததென்று சரித்திரங்களிற் கூறப்பட்டுள்ள பரம்பரை, பிதிர்வழி ஜாதகங்கள், துப்புரவுள்ளதும் சிறியதுமான வாகனாதிகள், ஸ்தல யாத்திரை, அரியதொழில், வைதீககிரிகைகள்.

4. நான்காம் பாவம்:—கல்வி, பந்து, சுகம், கிரகங்கள், பூமி, வாகனம், ஆளடிமை, சிநேகிதர், ரமணியமானதும் சித்திரமுள்ளதுமான இல்லங்களும் வாகனங்களும், நாவாய், (கப்பல்) ஸ்நானகட்டம், குளம், தடாகம், நதி, மாதா, நந்தவனம், மாதுர், ஜாதி, ஆடைகள், பானங்கள், க்ஷீரம், வாசனாதிகள், கீர்த்தி, சாஸ்திரோக்தமாகச் செய்யப்பட்ட ஔஷதங்கள், வைத்தியன், தாழ்மை, ஹிருதயம், பொய், மெய், வாக்கு வல்லமை, கூடாரமுதலிய வசதிகள், ஜயம், இனிப்பு, லாபம், கிருஷித்தொழில், கோயில் குளமுதலியவைகளுக்குத் திருப்பணி செய்யுங்கைங்கரியம், திருவிழாக் கொண்டாடல், மாதுர்வழி, பொறுமை, பிதாவின் பெருமை அந்தஸ்து முதலியன, தனத்தை பூமியில் புதைத்தலாகியவை, மேல்வீடு, சிற்பநூல்விதிக்குச் சிறப்பாக விளங்கும் இல்லங்கள், கிரகப்பிரவேசம், கிரகமாறி வேறு வீட்டுக்குக் குடிபுகுதல்,சமாராதனை, மோசடி, எறும்புப் புற்று, வேதம், சாஸ்திர விற்பத்தி, காவியங்கள் நூல்களாதியவைகளை உண்டுபண்ணல், பசு, குதிரை, யானை.

5. ஐந்தாம் பாவம்:—புத்திரர்கள் பிதாவின்பெருமை இராஜமந்திரி மரியாதை தொழில் வல்லமை மனசு வித்தை சாமர்த்தியம் குடை சாமரம் எடுபிடியிடைக்கியம் காவியம் புராணாதிகளின் சிரவணம் பிறர் மதிப்பு வஸ்திரம் மனோபீஷ்டம் பிதிர்வழிப் பொருள் ஸ்திரிகள் மூலமாகப் பெரும் லாபமடைதல் முன் அறிதல் தாசிகளின் சேர்க்கை கௌரவம் அருள் இரகசியம் ஏதேனும் எடுத்துக்கொண்ட விஷயங்களை பாஷா வல்லமையுடன் எழுதும் சக்தி சுகஜீவனம் சிநேகம் பூர்வ நூல்களுக்கு வியாக்யானம் எழுதலில்தேற்சி இரைப்பை தியானம் அநுபவம் பிறருக்கு உபசாரனை விருந்து முதலியன செயல் உண்மைக்குப் பாடுபடல் மந்திரோச்சாரணம் புத்தி நுட்பம் ஆலோசனை சொல்லல் ஆர்ஜிதம் மத்தளம் பேரிகை, நற்செய்தி, (good Loding) வித்தை.

6. ஆறாம்பாவம்:—ஞாதி, சத்துரு, ஏமாற்றம், வழக்கு, ருசி, நோய், மாதுலன், அத்தை, கபம், கொடும் செய்கை, பைத்தியம், காரா கிரகப்பிரவேசம், நரம்பு (Glands) கஞ்சத்தனம், ஸ்திரமின்மை, மேக நீர்வியாதி, அதிக போஜனத்தால் களைப்பு, கடன், அவமானம்,

பழிச்சொல், க்ஷயரோகம், குஷ்டரோகம், மனோவியாதியும் சஞ்சலமும், வெட்டுக்காயம், அவஸ்தை, பிறரதுவெறுப்பு, ஊறுகாய், சட்டினி, அகாலபோஜனம், ரம்மியக்குறைவு, உத்ரகிரியை சம்பந்தமான கிரிகைகள், லாபத்தில் சோர்வு, விஷம், கூர்மையான ஆயுதம், உயர்ந்த ஆசனங்கள், நீர் ரோகம், வயிற்றளைச்சல், அறுவகை ருசி, குற்றத்துக்குள்ளாதல், புழுக்கைத்தன்மை (Slavey) சோரம், அபாயம், ஞாதிகளையிட்ட சச்சரவு.

7. ஏழாம்பாவம்:-மாரகம், விவாகம், வியபிசாரம், சம்போகத்திலிச்சை, ஸ்திரீநஷ்டம், பிரயாண அலைச்சல், வாசனுதிரவியங்கள், சங்கீதம், புஷ்பம், இராஜபோஜனம், நல்லபானங்கள், தாம்பூலாதிகள், ஸ்திரிகளின் சேர்க்கையினல் வெறி, மர்மஸ்தானம், ஆசனவாய், வியாபாரச்சரக்கு, பால், தயிர்,வெண்ணெய், எண்ணெய், மிட்டாய், தர்மம், தைரியம், சத்துருக்களின் அபஜெயம், எத்தனித்த காரியத்தில் ஜயம் பெற்று அதனல் பணலாபமடைதல், ரசாயன சோதனை, தத்துப் புத்திரன், அயல் நாட்டிலிருந்து குதிரைகளை யடைதல், காம சாஸ்திரத்தில் பூரண பாண்டித்தியம், நதி, தடாகம், நீர் நிலை முதலியனவுமாம்.

8. எட்டாம்பாவம்:—ஆயுள், சௌக்கியம், வெற்றி, இறந்துபோன குடும்பங்களில் உள்ள செல்வம், துக்கத்தோடு கூடிய முகம், மரணம், துன்பம், இறப்பின் காரணம், சச்சரவு, சரீரத்தினுடைய இயற்கைப் பிணிகள், அபாயம், தாயாதிகளின் பகை, களத்திரத்தின் சந்தோஷமின்மை, சத்துரு, தாமதம், அபராதமும் தண்டனைகளும், பணநஷ்டம், கடன், எதிர்பாராத லாபம், அழியாத முதல், போக்கிரிகளின் சேர்க்கை, பாவம், கொலை, சிரச்சேதம், எலும்பு முறிவு அல்லது நஷ்டம், பெருந்துயரம், உறுதி, வேலைக்காரர்களின்கூட்டம், கூடாததும் பயங்கரமானதுமான வேலைகளில் ஆரம்பித்தல், யுத்தம்.

9. ஒன்பதாம்பாவம்:-தர்மம், மதபக்தி, புண்ணியநதி, புண்ணியதீர்த்தம், புண்ணியஸ்நான கட்டங்கள், குருபக்தி, பெரியவர்களிடம் அன்பு, மனசுத்தி, சன்மார்க்க கிரியைகள், தெய்வபக்தி, பாஷா விற்பன்ன காவியங்களில் பிரிதி, பாக்கியம், வாகனம், மரியாதை, சன்மார்க்க கதையும் காவியங்களும், தலயாத்திரை, நல்லவர்களின்

சேர்க்கை, பிதா, மக்கள் (ஆண்பெண் உட்பட) அஷ்ட ஐஸ்வரியம், யானை குதிரை, கிரகம், பூமி, செல்வம், நல்அனுபவம், வேலையாட்கள், பேரிகை, மகுடாபிஷேகம், எருமை, தேவதாபிரதிஷ்டை, பாடசாலை, உபதேசம், அஷ்டமாசித்தி, வனம், மலைவாசம், (கோவில் நிர்மாணம்) யாகம்,

10. பத்தாம்பாவம்:- கப்பல், வியாபாரச்சரக்கு, இராஜ்யாதிகாரத்துவம், துரைத்தனத்தாரின் தயவு, குதிரை ஏற்றம், போர்புரிதல், இராஜபதவி, உத்தியோகம், கிருஷி, ஔஷதம், கீர்த்தி, புதையல், யாகம், ஜனத்தலைவன், குரு, மந்திரம், யந்திரம், மாதாயோக்கியதை, மந்திரி, அனுபவம், தத்து, பிரபுத்துவம், பெருமை, பிரயாணம், நல்வழியில் ஜீவனம், இராஜாதிராஜன், இராஜசின்னமுத்ராதாரி, சுயார்ஜித அதிகாரி, துரைத்தனம், செல்வாக்கு.

11. பதினொன்றாம்பாவம்:-பலவழியில் லாபம், ஆசை, பிறரையண்டி வாழ்தல், மூத்தசகோதரம், பிதுர்வழிப்பற்று, எல்லாவிதமான தெய்வங்களின் ஆராதனை, வித்தை (கல்வி,) இராஜ வித்தியா பிரபலம், பொன், வெள்ளி, சம்பாதித்தலில் திறமை, ரத்தினங்களிலும் ரத்தினாபரணங்களிலும் இச்சை, நஷ்டமான பொருளைத் திரும்பப் பெறுதல், கல்விகற்ற ஸ்திரீகள், தங்கம் பொன் இவைகளில் வேலை, மந்திராலோசனை சக்தி,. (நியாயவாதிகள்) அஸ்வம் முதலியவைகளில் லாபம், சத்ருவசிநேகம், எவ்விதத்துன்பத்தையும் பொறுத்துக்கொள்ளும் சுபாவம், நல்லவார்த்தை, மாதாவின் தீர்க்க ஆயுள், முழங்கால், காது, துடை, இச்சை, காவியம் இயற்றுவதிற்றிறமை, சிநேகம்,

12. பன்னிரண்டாம்பாவம்:-பூபிரதக்ஷணம், மலைநாட்டுவாசம், நித்திரையில் தொந்தரவு, மனக்குழப்பம், பாதம், சத்துருக்களையிட்ட பயம். சிறைச்சாலையிலடைபடல், அடிமைத்தனம், கடன் பாதை, பிதிர்பூமி, யானை, குதிரை, மோக்ஷம், இடதுகண், ஜனதுவேஷம், எலும்புமுறிவு, வியபிசாரம், விவாகநஷ்டம், சயனநஷ்டம், பூஜை, விலங்குபூணல், பைத்தியம், தாழ்மை, பிதிர், பிராத்ருநஷ்டம், பாதநோய், பல்நோய்.

---

## கிரகங்களின் காரகம்.

1. சூரியனுக்கு:—சிவதேவதை, தாமிரம், பிதிர் பாக்கியம் ஆத்மா, நேத்திரம், சிரசு, பிரதாபம், சௌரியம், தைரியம், இராஜ சேவை, உத்தியோகம், சைவானுஷ்டானம், தபசு, வனம், எக்ஞம், வியாதி, ஸ்திரீபோகம், சித்தசுவாதீனம் சிரோரோகம், ஜுரம், வயோதிகம், முள்ளுள்ள விருக்ஷாதிகள், மேல் நோக்கு (பார்வை) மானுஷ்யலோகம், மிருகாதிவர்க்கம், பக்ஷிஜாதி, பித்தம் திரவாசப் பிரீதி, மலைப்பிரதேசம், பவள முதலியவைகளாதியன.

2. சந்திரனுக்கு:- மனசு, கணபதிதேவதை, மாதுர் வம்சம், மனுக்களின் பிரசாதம், சித்த சுவாதீனம், உத்தியோகம், ஸ்நானதி, கந்தபுஷ்பங்கள், சாமரம், சத்ரம்,பலம், கீர்த்தி, முத்ராபரணம், மதுர க்ஷீரம், வஸ்திரம், பீதாம்பரம், சுகபோஜனம், நாணயம், (வெள்ளியா லாக்கப்பட்டன) தேசாடனம், சிலேஷ்மசித வாதரோகம், தாமரங்காய் ரோகம் (Enlargement o f spleen) பிராமணர், மந்தகுணம், மறதி, ஸ்திரி, அபிநயம் நித்திரை, பாவம் (sin) புளிப்பு, பருமன், கரும்பு, முத்து, க்ஷயம், வெளுப்பு, அரைஞாண், வெண்கலம், உப்பு, குள்ளம், (Shortness)வயிரம், வயிறு, கௌரி அல்லது பார்வதியிடத்தில் பக்தி, பரிகாசகுணம்,(Humour)பரோபகாரம், தயிர், கசப்பு,மத்தியலோகம், மத்திம ஆயுள், தோல்வியாதி, மீன், சர்ப்பம், தவளை ஆமை முதலிய ஜலசரங்களாதியன.

3. செவ்வாய்க்கு:- பூமி, சகோதரம், கொலைபால்திம்ரென்று மரணம், விதவா சம்போகம், ஜீவதுர்க்கை, சௌரியம், சாகசாக்கியம், ரணதுவேஷம், அக்கினிபயம், சோரம், யுத்த அரங்கம், உத்சாகம், வீரியம், சேனாதிபத்தியம், பிளவைரோகம், ஆயுததாரி, பொறுமை, க்ஷயரோகம், திருடர், சண்டை, சத்துரு சுவாதீனம், செவப்பு வஸ்திரம், ஜமீந்தார் போன்ற குறுநிலமன்னர்கள், சண்டைப்பாட்டு, சண்டைக்கும்மி, சண்டைச்சிந்து முதலியவைகளில் பிரீதி, நாற்கால் பிராணி, அரசன் (க்ஷத்திரியன்) முரட்டுச்சுபாவம், கோபம், அந்நிய நாட்டுப் பிரயாணம், உறுதி, பித்தவாயு, வாய்ச்சண்டை, பித்தம், உஷ்ணரோகம், காயம், இராஜசேவை, மேல்நோக்கு, குளிர், நோய், கீர்த்தி, மந்திராலோசனை (especially War cabinet) சுப்பிரமணிய

பக்தி (Hero Worship) கைப்பு, அரண்மனை, மாமிசம் புசித்தல், வேட்டையாடல், பிறரைக்கடித்தல், வெற்றி, புளிப்பு, பொன், பிராமணத்துவேஷம், ரேப்பை வியாதி, தட்டான், கொல்லன், சூளை வாயில் சுடுவோன், இஞ்சின் முதலிய கருவிகளிருக்குமிடம், நல்ல போஜனம், வில், வெடி, அரிவாள், பட்டாக்கத்தி, இரத்தம், ஆடு, ஆசை, குற்றம், வீடு, குறவன், சைனியம், காட்டுமிருகம், மலைப்பிரதேசமும் அங்கு வசித்தலும், போரிற்பழக்கம், யுத்த சன்னதமும் தளவாடமும், சஞ்சலமான மனதும் வார்த்தையும், குதிரையேற்ற முதலிய வாகனாதிகளில் சவாரி, இரத்தக்குறைவு, இரதம், வண்டி முதலிய வாகனாதிகளில் சவாரி.

4. புதனுக்கு:—விஷ்ணுதேவதை, பெண் அலி, அண்டரோகி, ஞானம், வித்தை, புத்தி, மாமன், வாக்குவல்லமை, உபாசனை, கணித ஞானம், சிற்பத்தில் தேற்சி, சங்கீத ஞானம், எக்ஞம், வைஷ்ணவ சம்பிரதாயம், சத்தியம், யுவராஜத்வம், வியாபாரம், லிகிதமூலம் ஆர்ஜிதம், அருபிசம்போகம், விந்துக்கட்டிழத்தல், ஆபுத்திரன், வாத நோய், குதிரைகஜானு, பிராமணர், காலாடி, காவியகமனம், கோட்டைச் சுவர், பச்சை, இயந்திரம் செய்பவன், ஜோதிஷ சாஸ்திரி, யாத்திரை, கோவில், விலையுயர்ந்த ஆபரணாதிகள், ரம்மியமான சொல், வேதாந்தம், தாய்வழிப்பாட்டன், கெட்ட சொப்பனம், தாதுநஷ்டம், சர்மம், வெண்கலம், உலகப்பற்றில்லாமை, விசித்திரமான மாளிகை, ஔஷதம், கழுத்து, குழந்தை, ஊர்வன, தீர்க்கதரிசனம், புண்ணிய லோகம், மரியாதை, மாமன்மைத்துனர்களாயிட்டபயம், சதிர், கூத்து, கேளிக்கை, டிராமா, விசுவாசம், நம்பிக்கை, விகட வார்த்தை, தமாஷான பேச்சு, அதிமேதை, மனோபாவத்தில் சமாசமான பாவம், கப்பல் வகை, ஆந்திரபாஷை, ருத்திரன், பக்ஷிவகை, சகோதரம், பாஷா வல்லமை, காடு, அதர்வணவேதம், கிரியை, கோபுரம், வெள்ளி, சிங்காரவனம், மறைவுள்ள ஸ்தலங்களும் நந்தவனங்களும், சிங்காரத்தோட்டங்களும், மூலைமுடங்கியுமான இடங்கள், பௌராணிகர், இலக்கணி, இரத்தின மதிப்பு, மந்திரம், ரசை, மதாசாரி.

5. வியாழனுக்கு:—புத்திரன், பிரக்ஞை, சாதனுபலம், யோகாப்பியாசம், அஷ்டமாசித்தி, ஆசாரித்துவம், உபதேசம், சுருதி,

ஸ்மிருதி புராணம் நற்கதி தெய்வபிராமணத்துவம் சாந்த தேவதை பிரமஸ்ரீ வித்தை விஜிதேந்திரியத்துவம் சுகம் இராஜ சன்மானம் இராஜாதி பத்திய ஜீவனம் ஆலோசனை நீதிவிவகாரத்துவம் புத்தி மூத்தோர் பொன் யானை இரதம் பசு சேனை புதையல் மீமாம்சசாஸ்திரம் குதிரை எருமை காளை ஸ்தூலசரீரம் தைரியம் கீர்த்தி தருக்க சாஸ்திரம் ஜோதிஷ சாஸ்திரம் பேரன் பேத்திமார்கள் இரைப்பை நோய் இருகால் பிராணிகளால் லாபம் வேதாந்தம் சித்தாந்தம் வீடு கோமேதகம் வியாபாரி இரத்தினதிகள் சௌக்கியம் அழகுள்ள மாடமாளிகைகள் இராஜாக்களால் வெகுமானிக்கப்படல் தொடை கோவில் தருமம் கண்ணிதை பிறர்க்குதவி சமத்துவம் விருத்தாகாரம் மஞ்சள் கிராமவாசியாகத் திரிதல் பல்லக்கு வாக்கின்தாட்டீகம் மூளை மந்திரம் துவிஜர்கள் புண்ணியதீர்த்தங்கள் புண்ணியலோகம் காவியம் விமானம் சத்சங்கம் சிம்மாசனம் தேவதா பிரதிஷ்டை தங்கப்பாத்திரம் வைடூரியம் யாகம் எக்ஞம் ஞானி சாமர்த்தியம் பிறர்மனதை வெளிதிலறியும் சக்தி தந்திரம் வாய்வுசரீரம் கபவாதம் புஷ்பராகம் வேதம் சிவனை வழிபடல் வைதீகம் அரசமரம்.

6. சுக்கிரனுக்கு:—செல்வம் ஐஸ்வரியம் வாகனம் வஸ்திராபரணம் பலவகை நிதிகள் களத்திரம் அநேகஸ்திரி சங்கமம் கந்த புஷ்பாதிலீலை மதனவியாபாரம் கப்பல்வியாபாரம் ரத்தினவியாபாரம் ஆலயம் சக்தி தேவதா பிரசாதம் ஸ்ரீவித்தியா உபாசனை லக்ஷ்மி கடாக்ஷம் இராஜஸ்திரி ரூபாவதிசம்போகம் வெண்சாமரம் குடை விவாகம் இருகாற்பிராணி புளிப்பு அக்கினி கீர்த்தி யௌவனம் மமதை வெள்ளி உப்பு ஊர்வனவற்றின்தோற்றம் சௌக்கியம் முத்து யஜுர்வேதம் வைசியர் துப்புரவு மதுரபாஷிணி நீர்நிலையுள்ளஸ்தலங்கள் யானை குதிரை உயர்ந்த காவியங்கள் பரதம் கேளிக்கை மத்திம ஆயுள் சங்கீதம் கனம் ஜடை முதலியவைகளில் வல்லமை அவதானவகைகளில் தேர்ச்சி களத்திரசௌக்கியம் காம இச்சை சங்கீத சம்பந்தமான நானுவகைக் கருவிகள் சுலோச்சனம் சிற்றுணவு சகல சாஸ்திர விற்பத்தி அனுபவஞானம் உலா ஜலக்கிரீடை நாடகவிற்பனை அலங்காரம் மெலிந்தசரீரம் அழகும் கட்டுமான ரோமம் கௌரி உபாசனை இராஜாங்க அதிகாரத்துவம் ரம்மியமான கண்களும் மர்மஸ்தானங்களும் இரகசியம் புதையல் இராஜ்யம் மருமக்கள்.

7. சனிக்கு:—சேத்துவம் மயக்கம் போஜனம் நீசம் போகத்துவம் மிருகங்களைப்போன்ற தன்மையில் ஸ்திரீபோகம் எருமை விருத்தி கடன் அடிமைப்படல் கிருஷி காராகிரகம் இராஜதண்டனை களவு ஆயுள் ஜாதிப்பிரஷ்டம் ஒழுக்கந்தவறல் வேதவிதிக்கு மாறுபடல் அங்கஹீனம் ஊனமான ஸ்திரிகளிடம் போகம் அபாத்திரன் மேகநீர்வியாதி சித்தப் பிரமை யானைத்தோல்போன்றவைகளில் வியாபாரம் துக்கம் சத்துருத்துவம் பெண்களால் சௌக்கியம் பெண் வேலையாட்கள் கழுதை சண்டாளர் காட்டுவேலைபாட்கள் வனவாசிகள் பக்ஷி உத்தரகிரியை முதலியவைகளும் அவைகளின் செலவும் மதாசாரப் பற்றின்மை தரித்திரம் அறட்டல்தனம் வாய்வுச்சேஷ்டை கிழட்டுத்தன்மை மூர்க்கம் கெட்டஸ்தலங்கள் அழுக்கு விபசாரத் தன்மையுள்ள புத்திரர்கள் சுத்தமில்லாத வீடுகளும் வசதிகளும் மனோசஞ்சலம் கோரம் உயிர்வதைசெய்யல் முதலிய பாவத் தொழில் இரக்கமின்மை சாம்பல் புழுதி முதலியவைகள் தானியாதிகள் ரத்தினம் உலோகம் அந்நிய மதசம்பந்தமுள்ள நூலைப்படித்தல் கம்பளவஸ்திரம் உஷ்ணம் காலக்ஷேபம் கவிழ்கண் பார்வை பிச்சை நாகலோகம் யுத்தபூமியில் அலைதல் துன்மார்க்கவழியில் தைரியம் எண்ணெய் மரம் சோம்பல் துர்க்கந்தமும் விஷக்காற்றுமுள்ள ஸ்தலங்களில் அலைந்து திரிதல் கடினம் பயம் ஆடு வெள்ளாடு எருமை ஸ்திரி போக இச்சையில் கேவலமான நடத்தை ஆகிய இவைகளாம்.

குறிப்பு:—பகலிற்பிறந்த ஜாதகனுக்கு சூரியன் பிதிர்காரகன், சுக்கிரன் மாதுர்காரகன், சனி சிற்றப்பகாரகன், சந்திரன் மாதுர் சகோதரி சித்தி பெரியதாயார் காரகன். இரவிற் பிறந்த ஜாதகனுக்கு சனி பிதுர்காரகன், சந்திரன் மாதுர்காரகன், சூரியன் சிற்றப்ப காரகன், சுக்கிரன் மாதுர் சகோதரி சித்தி பெரியதாயார் காரகன், சூரியனும் சனியும் ஒற்றைராசியிலும் சுக்கிரனும் சந்திரனும் இரட்டை இராசியிலும் ஒரு ஜாதகிக்கு இருந்தால் பிதிர் மாதுர் பெரியம்மை சித்தி முதலியவர்கள் நல்ல சௌக்கியத்துடனும் செல்வாக்குடனும் கீர்த்தியுடனும் மனசம்மியத்துடனும் வாழ்வார்கள். குடும்பமும் அபிவிருத்தியுடன் விளங்க நியாயமுண்டு.

8. இராகுவுக்கு:—பிதிர்பாட்டன் வம்சம் விஷபயம் மோக்ஷத்துவம் லோகாலோக பதவி பரதேசவாசம் கடுங்காவலுள்ள காரா

கிரகதண்டனை எதிரியரசர் படையெடுத்தல் துயரம் கப்பல் மூழ்கிப் போகுதல் ஜலகண்டம் ரோகஸ்திரி சேர்க்கை ஜாதிப் பிரஷ்டம் செய்யத்தகாத தொழிலியற்றல் விகடாதிவித்தை அங்கபின்னம் குத்துவெட்டுக்காயம் பிளவை குன்மாதி வாயுஉபத்திரவம் பித்தவாத வலிப்புரோகம் மூர்ச்சை வாயு குதர்க்கவாதம் கொடூர வசனம் குடை சாமராதிகள் எடுபட்ட ஸ்திரிக்கு ஜன்யமாகும் புத்திராள் சூதாட்டம் சண்டாளத்துவம் கருத்தொழில் புறமதஸ்தர் குன்றுகளிலும் மலைகளிலும் புற்றுகளிலும் குகைகளிலும் வாசம் நித்திரையில் சொற்பனவஸ்தை பழமைப்பட்ட வாகனாதி நாகலோகம் ஈழைநோயும் இருமல் நோயும் துர்க்கையின் உபாசனை கெட்ட செயல்களைச் செய்யத்தூண்டுபவர்களின் சேர்க்கை பொய் பிறரையிட்ட தொந்தரவு கால்நடை அராபிமுதலிய பாஷைகளைப்போன்று வலதுபுற மிருந்து இடதுபுறமாக எழுதல் முதலிய பாஷைகள்.

9. கேதுவுக்கு:- சித்தப்பிரமை விஷபாண்டு துஷ்டாதி நோய்கள் உதரவலி ஞானசாதனைகள் மாதுர்வழிப் பாட்டன் விரணகாயம் அக்கினியின் பயம் கீழ்குலத்தொழில் யுத்தாங்கம் சமயல் அக்கினி மரணம் பிரதேச ஜீவனம் பாவத்தொழில் புலாலுண்ணல் அகங்காரி தரித்திரம் பந்தனம் இராஜதண்டனை காராகிரகப் பிரவேசம் சண்டிகேஸ்வரர் உபாசனை விக்கினேஸ்வரர் உபாசனை ஈஸ்வர உபாசனை, வைத்தியன், நாய் கோழி சேவல் முதலியன கருடன் பருந்து வல்லூறு கழுகு க்ஷயம் கங்காநதியில் நீராடல் கிராதகர் நேசம் விஷம் புண் பரப்பிரம்ம வித்தியா இரைப்பை நோய் கண்ணோய் முட்செடி ஊமைபோல் மௌனவிரதங்கொள்ளல் சகல சௌக்கிய அனுபவம் துறவு பசி தாகம் வைசூரி கொம்பு சாமான்களில் பிரியமின்மை மௌட்டிகம் சூத்திர ஜாதியாரைப் போலப் பேசல் மனோ சஞ்சலமுதலியவைகளும் அந்தந்தக் கிரகங்களுக்குக் காரகங்களாகச்சொல்லியிருக்கின்றோம். இவை நீங்கலான இன்னும் இதர காரகங்கள் எண்ணிறைந்தவைகளாக இருக்கின்றவைகளை இங்கு பூராவும் எழுதுவதென்பது சாத்தியப்படமாட்டாது. ஜோதிஷ ஞான முதிர்ச்சியும் அனுபவமுமே இன்ன இன்ன காரகம் இன்ன இன்ன கிரகத்தைப் பொறுத்துள்ளதாக இருக்கவேண்டியதென்பதை

நிச்சயிக்கவல்லதாகும். அவைகளுக்கு ஓர் சிறப்புவிதியையும் மூன்றாம் பாகத்தில் எடுத்து விளக்குவோம். அதுகாறும் இவைகள் போதுமான தெனக்கருதி இங்கே நின்றுகொண்டோம்.

10. சூரியன்:—கோதுமை சந்திரன் அரிசி செவ்வாய் துவரை புதன் பச்சைப்பயறு வியாழன் கடலை சுக்கிரன் மொச்சைக்கொட்டை சனி எள்ளு இராகு உழுந்து கேது கொள்ளுக்குங்காரகர்களாகிறார்கள்.

11. சூரியன்:— மாணிக்கம் சந்திரன் முத்து செவ்வாய் பவளம் புதன் மரகதம் வியாழன் புஷ்பராகம் சுக்கிரன் வைரம் சனி நீலம் இராகு கோமேதகம் கேது வைடூரியத்துக்குங்காரகர்களாகிறார்கள்.

12. சூரியனுக்கும் செவ்வாய்க்கும் அக்கினி சந்திரனுக்கு ஜலம் புதனுக்கு பூமி வியாழனுக்கு ஆகாயம் சுக்கிரனுக்கு ஜலம் சனிக்கு வாயுமாகிய பஞ்சபூதங்களாம்.

13. நவாத்திரிகளின் நிறங்களையொத்த புஷ்பங்களுக்கும் அந்தந்தக் கிரகங்களை காரகர்களாவர் என்று தெரிக.

---

## விஷய சூசிகை.

இலக்கினம் என்ற ஜீவன் முதல் விரையமீறாகவுள்ள பன்னிரண்டு பாவங்களையும் சூரியன் முதல் கேது ஈறான நவக்கிரகங்களின் காரகங்களையும் குறித்துள்ள விவரங்களை சாஸ்திரோக்தமென ஆன்றோர்களாலாமோதிக்கப்பட்ட பல்வேறு ஜோதிஷ நூல்களிலிருந்து எமக்குக் கிடைத்தனவற்றுளிங்கு இச்சமயத்தி லவைகள் போதுமானவையெனத் தோற்றப்பட்டனவோ அவைகளின் விவரங்களை மாத்திரந் திரட்டிக்கூறல் சால்புடைத்தாகுமெனத் தெரிந்து அவைகளை எடுத்துக்காட்டினேம். அங்ஙனங் காட்டியிருப்பனவற்றுள் அவசியமெவையெனத் தோற்றப்பட்டனவோ அவைகளைச் சங்கிரகமாக எடுத்து விளக்குகின்றேம்:—தொட்டி முதல் தொண்டைமான் வரையிலுள்ள ஓர் மனிதனின்வாழ்வி லேற்றமுந் தாழ்வு மேலேகாட்டியுள்ள பாவங்களினாலும் சூரியன் முதல் கேது ஈறாகவுள்ள நவக்கிரகங்களின் காரகத்துவங்களாலு மேற்படுகின்றனவாம். தேக பீடையால் வாட்

டப்பட்டும் மனோசஞ்சலத்தால் நிலைகுலைந்துந் துன்யார்க்கமும் கொலைப்பாதகமும் நிறைந்துள்ள சிநேகிதர்களைக் கைக்கொள்ளுதலும், விசுவாசமற்ற ஜனங்களைப் பந்துக்களாக அடைதலும், அடங்காப் பிடாரியைப் பெண்டிராக அடைதலும், துன்மார்க்கரான மக்களை அடைந்திருத்தலும், நன்றிகெட்ட வேலையாட்கள் கிடைத்தலும், அரசருக்கும் சிற்றரசருக்கும் குருநில மன்னருக்கும் விரோதமாக நடந்து அவர்களால் விதிக்கப்படும் இராஜ தண்டனைக்குப் பாத்திர மாதலும், பிதிரார்ஜிதமாகக்கிடைத்த குபேரசம்பத்தை யொத்த செல்வத்தை யிழத்தலும், வாழையடி வாழையென வந்த பெருங் குடும்பங்கள் சந்ததியற்றுப் போதலும், இரத கஜ துரக பதாதிகளைப் பெற்றிருந்தும் அவைகளை யிழத்தலும், வசிப்பதற்கு இல்லமின்றியும் குடிக்கக் கூழின்றியும் உடுக்க ஆடையின்றியும் தேசங்கள் தோறும் அலைந்து பிறர்கண்டு மனமிரங்குவதற்குப் பாத்திரர்களாகா திருத் தலும், எடுத்த முயற்சியில் ஹானியடைதலும், வியாபாரங்களில் விடுத்த முதலில் நஷ்டமடைதலும், பிச்சை யெடுத்துண்டு காலங் கழித்தலும், பிறரால் சிச்சி என்று இழித்துச் சொல்லும் பழிச் சொற்களுக்குப் பாத்திரமாதலும், வாழ்வில் வெறுப்புற்று மலைப் பிரதேசம் குகை வன மாதியவைகளை வாசஸ்தலமாக அடைதலும், கல்வியில் நல்ல திறமையடைந்திருப்பினும் பெருங் கூட்டங்களி லாவது சாஸ்திர விற்பன்னர்களின் மத்தியிலாவது பிரசங்கிக்கும் போது பிறர் நகைக்குப் பாத்திரமாதலும் பாவச் செயல்களைச் செய்தலும் குலாசாரம் மதாசாரமாகியவைகளைக் கைநழுவ விடுதலும் புறமதஸ்தனுதலும் சன்மார்க்கர்களுக்கும் சந்நியாசிகளுக்குந் தீங்கி ழைத்தலும் நாற்காற்பிராணிகளிடத்தும் பக்ஷிகளிடத்தும் ஜீவகாருண் ணியமற்றிருத்தலும் பிறர் துன்புறுவதைக்கண்டு ஆனந்தித்தலும் அரூ பமும் சண்டாளத்துவமுமுள்ள ஸ்திரீகளைச் சேருதலும் வெகுஸ்திரீ சம்சர்க்கமும் மிருகங்களையொப்பக் காமாதி இச்சைகளைச் சம்போக வகையால் தீர்த்துக்கொள்ளுதலும் வாகனாதிகளிலும் விமான முதலிய வைகளிலும் மலையினுச்சிகளிலு மிருந்து விழுந்து உயிர் துறத்தலும் ஜலகண்டத்தாற் சாவும் அக்கினியில் அவிந்து இறத்தலும் வாளால் வெட்டுண்டிறத்தலும் சுடப்பட்டிறத்தலும் தற்கொலை புரிந்து உயிர் நீத்தலும் பிறரையடுத்து இழிதொழில்களாற் ஜீவித்தலும்

மௌட்டிகமும் ஜடமுமாக இருத்தலும் சூதாட்டமுதலிய பஞ்சமா கிருத்தியங்களுக்குப் பாத்திரமாதலும் யுத்தகளத்தில் முதுகுகாட்டி யோடலும் இராஜாதிராஜனாகப் பிறந்து இராஜ்யத்தை யிழந்து கஷ்ட மடைதலும் பிரஜைகளாற் புறக்கணிக்கப்படுதலும் இராஜாங்க தண்டனைக்குள்ளாகி நாட்டைவிட்டு அப்புறப்படுத்தப்படுதலும் பந்துக்களாலும் சிநேகிதர்களாலும் திரஸ்கரிக்கப்படுதலும் கூன்குருடு செவிடாகப் பிறத்தலும் மன்மதனை யொத்த ரூபலாவண்யங்களமைந்து பின்னால் அரூபமடைதலும் ஆகிய இவைபோன்றவைகளை ஓர் மனிதனின் வாழ்வின் தாழ்வெனலாமல்லவா?

சன்மார்க்கமும் சாத்விகமும் வாய்ந்துள்ள பெண்டீர் புத்திரன் சகோதரம் பெற்றோர் சிநேகிதர் பந்துக்கள் முதலியவைகளை யடைதலும் சிறிது முயற்சியின் அளவிலேயே பெருநிதிக்கு அதிபதியாவதும் பிறர்கண்ட மாத்திரத்தில் பெரும் மரியாதை செய்யத்தக்க பெருமையை யடைதலும் ஏகதேச முயற்சியின் பயனாக மகா கல்விமானாதலும் சன்மார்க்கத்தில் விலகாதிருத்தலும் திடகாத்திரம் பெறலும் சுறுசுறுப்பான சுபாவமும் கிராஹ்யசக்தியை அடைந் திருத்தலும் செழிப்புள்ள நாட்டிற்கு அதிபதியாவதும் இராஜத்துவ பதவியைப் பெறுதலும் இராஜாங்கத்தாராலும் மதாசாரியர்களான சங்கராசாரியர் முதலிய அத்தியக்ஷ குருக்கள்மார்களால் கௌரவப் படுத்தப்பட்டு பட்டங்கள் அளிக்கப்படலும், பொற்பதக்கங்கள் முதலியன சன்மானிக்கப்படலும், பிறரிடம் இரக்கங்கொள்ளும் சுபாவம் வாய்க்கப்பெறலும், நம்பிக்கையும் விசுவாசமுமுள்ள பந்துக் களையும் சிநேகிதர்களையும் அடிமைபாட்களையும் அடையும் பாக்கியம் பெறலும், மதாசாரப்பற்றை வைராக்யத்துடன் சிறிதேனும்வழுவாது கொண்டு செலுத்தலும், நைட்டிக பிரமசாரித்துவத்தை யடைந் திருத்தலும், பிறர் கண்டும் கேட்டும் பிரமிக்கும்படியான பேச்சில் வன்மையும் சாதுர்யமும் விநோதமும் விரவிய ஆற்றலைப்பெற்றிருத் தலும், வைத்திய சாஸ்திரத்தில் அஸ்வனிதேவரை யொத்திருத்தலும், எவர்கண்டாலும் வியமாகும்படியான தேஜஸுடன் கூடிய தோற் றமும், புண்ணியதீர்த்த கட்டங்களையும், ஆலயம் பாடசாலை தர்ம சாலை ஔஷதசாலைகளையும் நிர்மாணித்தலும், அவைகளின் பாது காப்புக்குப் பொருளீட்டலும், சாலை முதலியனவை யேற்படுத்தி வழிப்

போக்கர்களுக்கும் கால்நடைகளுக்கும் சௌகரியங்களை ஏற்படுத்தும் பரோபகார குணம் பொருந்தியிருத்தலும், சங்கீதம் நடனமாதிய கோஷ்டிகளுடனும் நித்திய கல்யாணத்துவத்துடனும் அனுபவிக்கும் பாக்கிய மடைதலும், இரத கஜ துரக பதாதிகளைப் பெறலும், அவைகளை ரம்மியமாக அனுபவித்தலும், கோ முதலியவைகளை ஏராளமாகப் பெற்றிருத்தலும், அபீஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்ளும்படியான செல்வமடைந்திருத்தலும், இந்திரனுடைய பதவிக்கு ஒப்ப மானுஷ்ய லோகத்தில் வாழ்தலும், குபேரனது நிதிக்கும் குறைவு கூறும்படியான கோடீஸ்வர சம்பன்னனாவதும், அஷ்டமாசித்திகளையடைதலும், வித்தியாதரரையொத்த சக்தியைப் பெறலும், வித்யுத் சக்தியில் வல்லமை பெறலும், விஞ்ஞசயமையோப்ப விளங்கலும், வாலகில்லியரைப்போன்ற சக்தியடையப் பெறலும், நினைத்த மாத்திரத்தில் பெருங்காவியங்களையொப்ப நூல்களையாத்தலிற் சக்திபெற்றிருத்தலும், ஓவியந் தீட்டலிற் தேர்ச்சியடைந் திருத்தலும், புத்தியின் சாதுர்யத்தால் அவதானங்களைச் செய்து பிறர் சரஸ்வதியோ என்று கருதும்படி இருத்தலும் பீமனை யொத்த பலிஷ்டத்துவமடைந்திருத்தலும் போர் முனையில் அஞ்சா நெஞ்சனாய் சிங்கம்போற் கர்ச்சித்து எதிரிகளை முதுகு காட்டி யோட்டுவிக்கும் ஆற்றலைப்பெற்றிருத்தலும், துஷ்டமிருகங்களிடத்துச் சிறிதுமஞ்சாது சென்று அவைகளை மடக்கியடித்து வசக்கும் பெற்றியினையடைதலும், அபாயநிலைமையின்மத்தியிற் சூழ்ந்திருப்பினும் மனோதைரியத்தால் தப்பித்துக்கொள்ளும் வன்மையடைதலும், சாகசங்களால் புஜவலியின் திறமையை நாட்டி மனோ தைரியத்தை விளக்கலில் பிறரைத் திகிலடையுமாறுசெய்தலும், பூரணாயுளுக்கு மேற்பட்டகாலம் ஜீவித்திருக்கும் பாக்கியத்தையடைதலும், ஜீரண உறுப்புகளும், மர்மஸ்தானங்களும் மற்றுமுள்ள ராஜ உறுப்புகளும் வலுவுற்றிருத்தலும், கண் நெஞ்சு முதலியன அளவுக்குத் தக்கவாறு பரந்து விசாலமாகிப் பிறரை பயக்குந்தன்மையில் வாய்க்கப்பெற்றிருத்தலும், பொன்னுடை (பீதாம்பரம்) யாலும் நவரத்னகசிதமான ஆபரணங்களாலும் விளங்கலும், புதையல் முதலியன ஏராளமாகக் கிடைக்க அனவகாரணமாக ஓரேக்ஷணத்தில் இராஜாதிராஜனையொத்த நிதிபதியாதலும், லாட்டரிச்சீட்டு முதலியனவைகளால் பெரும் செல்வ

மடைந்து மகோன்னததசையிலிருப்பதும் ஷட்ரசங்களுடன் கூடிய ஆகாராதிகளைப் புசித்தலும், வேடிக்கை விநோத உல்லாசவகைகளில் காலங்கழித்தலும், சதா சங்கீத பஜனைபாதிய கோஷ்டிகளுட னிருத்தலும், செப்படிவித்தை ஜாலவித்தை இந்திரஜாலம் மகேந்திர ஜாலம் யோகம் ஆசன இருக்கை முதலியவைகளுமாகிய இவை போன்றவைகளைப் பெற்றிருத்தலும் ஓர் மனிதனின் வாழ்வின் ஏற்ற மெனலாமல்லவா? ஆதலால் உலகிற்றோன்றிய மாந்தர்கள் முற்பவங்களி லீட்டிய இருவினைப் பலன்களை நன்குணர்வான் விதித்துள்ள ஜோதிஷ சாஸ்திர விதிப்படிக்குள்ள பன்னிரு ராசிகளாய் வகுக்கப்பட்ட பலன் காண்வாயில்களாய துவாதச பாவங்களையும் நவக்கிரகங்களின் காரகங் களாதிய விஷயங்களையுங் கொண்டே யறிய வேண்டுவனவாமென் பதை நம்மனோர் அறிக.

இதுபற்றியே அதிவீரராம பாண்டியனும் வெற்றிவேற்கையில்

"குடைநிழ லிருந்து குஞ்சர மூர்ந்தோர்
நடையெனிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர்.
சிறப்புஞ் செல்வமும் பெருமையு முடையோர்
அறக்கூழ்ச் சாலை யடையினு மடைவர்.
அறத்திடு பிச்சை கூவி யிரப்போர்
அரசோ டிருந்த சாளினு மாளுவர்.
குன்றத் தனையிரு நிதியைப் படைத்தோர்
அன்றைப் பகலே அழியினு மழிவர்.
எழுநிலை மாடங் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பா ழாகினு மாகும்.
மணவணி யணிந்த மகளி ராங்கே
பிணவணி யணிந்துதங் கொழுநரைத் தழீஇ.
உடுத்த ஆடை கோடி யாக
முடித்த கூந்தல் விரிப்பினும் விரிப்பர்.
பெற்றமுங் கழுதையு மேய்ந்த வப்பாழ்
பொற்றொடி மகளிரும் மைந்தரும் செறிந்து
செற்பொலி நெடுநக ராயினு மாகும்."

என்ற கூற்றின் உண்மையையும் ஒத்துநோக்குவர்க்கே கர்மானு பவத்தின் பலன் தெற்றெனத் தெளிவுறும்.

## கிரகங்களுக்குள்ள மித்துருசத்துருசமமாதிவைகளின் விவரப்பட்டியல்.

---

| வரிசை நம்பர். | கிரகங்களின் பெயர். | மித்துரு. | சமம். | சத்துரு. |
|---|---|---|---|---|
| 1 | சூரியன் | சந்திரன் செவ்வாய் வியாழன் | புதன் | சனி சுக்கிரன் |
| 2 | சந்திரன் | சூரியன் புதன் | செவ்வாய் குரு சனி சுக்கிரன் | ஒருவருமில்லை |
| 3 | செவ்வாய் | குரு சந்திரன் சூரியன் | சனி சுக்கிரன் | புதன் |
| 4 | புதன் | சூரியன் சுக்கிரன் | சனி செவ்வாய் வியாழன் | சந்திரன் |
| 5 | வியாழன் | சூரியன் சந்திரன் செவ்வாய் | சனி | புதன் சுக்கிரன் |
| 6 | சுக்கிரன் | புதன் சனி | செவ்வாய் குரு | சந்திரன் சூரியன் |
| 7 | சனி | புதன் சுக்கிரன் | வியாழன் | செவ்வாய் சந்திரன் சூரியன் |

யாதாமோர் கிரகம் எந்த ராசியைத் தனக்குத் திரிகோணாதிபத்தியமாக அடைந்திருக்கின்றதோ அந்த ராசிக்கு 2.12-5-9-4-8-க்குடைய கிரகங்களும் தனக்கு உச்சமாகக்கொண்ட ராசியாதிபதியும் அப்போர்க்கோத்த கிரகத்துக்கு மித்துருக்களாம். பட்டியலைப் பார்க்க.

| வரிசை நம்பர் | கிரகங்களின் பெயர் | மூலத்திரி கோணம் | பாவராசி விவரம் | 3-ம் கலத்தில் குறிப்பிட்ட ராசியின்பெயர் | 4-ம் கலத்தில் காட்டியராசியாதிபன் பெயர் | உச்சராசியும் அதன் அதிபனும் | சத்துரு மித்துரு தன்மை | ஷரா. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | சூரியன் | சிம்மம் | 2 | கன்னி | புதன் | | சமநட்பு | |
| | | | 12 | கடகம் | சந்திரன் | | நட்பு | சுக்கிரனும் சனி |
| | | | 5 | தனுசு | வியாழன் | | நட்பு | யுங் குறிப்பிடப் |
| | | | 9 | மேஷம் | செவ்வாய் | | நட்பு | பட்டதால் பகை |
| | | | 4 | விருச்சிகம் | செவ்வாய் | | நட்பு | என்று தெரிக. |
| | | | 8 | மீனம் | வியாழன் | | நட்பு | |
| | | | | | | மேஷம் செவ்வாய் நட்பு | | |
| 2 | சந்திரன் | ரிஷபம் | 2 | மிதுனம் | புதன் | | நட்பு | |
| | | | 12 | மேஷம் | செவ்வாய் | | சமம் | |
| | | | 5 | கன்னி | புதன் | | நட்பு | பகை எவருமே |
| | | | 9 | மகரம் | சனி | | சமம் | இலர். |
| | | | 4 | சிம்மம் | சூரியன் | | நட்பு | |
| | | | 8 | தனுசு | வியாழன் | | சமம் | |
| | | | | | | ரிஷபம் சுக்கிரன் சமம் | | |
| 3 | செவ்வாய் | மேஷம் | 2 | ரிஷபம் | சுக்கிரன் | | சமம் | |
| | | | 12 | மீனம் | வியாழன் | | நட்பு | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | 5 | சிம்மம் | சூரியன் | | நட்பு | புதனிங்கு சொல்லப்படாத தால் பகை. |
| | | | 9 | தனுசு | வியாழன் | | நட்பு | |
| | | | 4 | கடகம் | சந்திரன் | | நட்பு | |
| | | | 8 | விருச்சிகம் | செவ்வாய் | | | |
| | | | | | | மகரம் | | |
| | | | | | | சனி | | |
| | | | | | | சமம் | | |
| 4 | புதன் | கன்னி | 2 | துலாம் | சுக்கிரன் | | நட்பு | சந்திரன் இங்கு வாததால் பகை. |
| | | | 12 | சிம்மம் | சூரியன் | | நட்பு | |
| | | | 5 | மகரம் | சனி | | சமம் | |
| | | | 9 | ரிஷபம் | சுக்கிரன் | | நட்பு | |
| | | | 4 | தனுசு | வியாழன் | | சமம் | |
| | | | 8 | மேஷம் | செவ்வாய் | | சமம் | |
| | | | | | | கன்னி | | |
| | | | | | | புதன் | | |
| 5 | வியாழன் | தனுசு | 2 | மகரம் | சனி | | சமம் | புதனும் சுக்கிரனும் குறிக்கப்படாமையால்பகை கிரகங்கள் எனத் தெரிக. |
| | | | 12 | விருச்சிகம் | செவ்வாய் | | நட்பு | |
| | | | 5 | மேஷம் | செவ்வாய் | | நட்பு | |
| | | | 9 | சிம்மம் | சூரியன் | | நட்பு | |
| | | | 4 | மீனம் | வியாழன் | | | |
| | | | 8 | கடகம் | சந்திரன் | | நட்பு | |
| | | | | | | கடகம் | | |
| | | | | | | சந்திரன் | | |

| வரிசை நம்பர் | கிரகங்களின்பெயர் | மூல திரிகோணம் | பாவராசி விவரம் | 3-ம் கலத்தில் குறிப்பிட்ட ராசியின்பெயர் | 4-ம் கலத்தில் காட்டியராசியாதிபன் பெயர் | உச்சராசியும் அதன் அதிபனும் | சத்துரு மித்துரு தன்மை | ஷெரா. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 6 | சுக்கிரன் | துலாம் | 2 | விருச்சிகம் | செவ்வாய் | | சமம் | |
| | | | 12 | கன்னி | புதன் | | நட்பு | |
| | | | 5 | கும்பம் | சனி | | நட்பு | சூரியனும் சந்தி |
| | | | 9 | மிதுனம் | புதன் | | நட்பு | ரனும் பகை. |
| | | | 4 | மகரம் | சனி | | நட்பு | |
| | | | 8 | ரிஷபம் | சுக்கிரன் | | | |
| | | | | | | மீனம் வியாழன் சமம் | | |
| 7 | சனி | கும்பம் | 2 | மீனம் | வியாழன் | | சமம் | |
| | | | 12 | மகரம் | சனி | | | சூரியன் சந்தி |
| | | | 5 | மிதுனம் | புதன் | | நட்பு | ரன் செவ்வாய் |
| | | | 9 | துலாம் | சுக்கிரன் | | நட்பு | இம் மூவர்களும் |
| | | | 4 | ரிஷபம் | சுக்கிரன் | | நட்பு | பகை. |
| | | | 8 | கன்னி | புதன் | | நட்பு | |
| | | | | | | துலாம் சுக்கிரன் நட்பு | | |

குறிப்பு:—மேலுள்ள பட்டியலில் காட்டியுள்ள விவரப்படி மூன்று தாம் குறிக்கப்படுகின்ற கிரகம் அதிநட்பென்றும் இரண்டுதாம் குறிக்கப்படுகின்றது நட்பென்றும் ஒரே தாம் மாத்திரங் குறிக்கப்படுகின்றது சம நட்பென்றும் ஒரு கிரகத்தின் மூல திரிகோணராசியின் 2-12-5-9-4-8 பாவங்களிலிருந்து விலக்கியும் குறிப்பிடப்படாமலுமிருக்கின்றதைச் சத்துரு வென்றும் தெரிந்துகொள்க. கிரகங்களின் அதிமித்துரு மித்துரு சத்துரு பாவங்கள் மேற்சொல்லிய லக்ஷணப்படிக்கே பெரும்பாலர் கையாட்சி செய்து வருகின்றனர். இதைத்தான் கிரகங்களின் நைசர்க்கிக (சாஸ்வதமான) பலம் என்பது. இதைத்தான் சத்யாசாரியரது மதக்கோட்பாடென்பர் ஜோதிஷ நூலோர். யவனாசாரியர் முதலியோர் கிரகங்களுக்குள்ள மித்துருத்துவத்தையுஞ் சத்துருத்துவத்தையும் மாத்திரம் ஒப்புக்கொண்டு சமத்துவத்தை மறுத்துவிடுகிறார்கள். என்றாலும், அனுஷ்டானத்திலிருப்பதும் ஆன்றோர் பலர்களால் ஆமோதிக்கப்பட்டதுமான ஓர் விஷயத்தையும் இது சம்பந்தமாகக் கூறுவது தவறாகமாட்டாது. அதாவது கிரகங்களுக்குள் (1) மித்துரு (Friend)(2) அதிமித்துரு (3) சமமித்துரு (4) சத்துரு (5) அதிசத்துரு (6) சமசத்துரு (7) சமம் என்று ஏழுவகையான பேதங்களுமுண்டென்பதாம். நைசர்க்கிக மித்துரு சத்துரு சமம் ஆதிய விவரங்களைக் கிரகங்களுக்கு எடுத்துச்சொல்லிவிட்டோம். இனி கிரகங்களின் தற்கால சத்துரு மித்துரு சம நட்பாகிய விவரங்களையும் கூறுவோம். இராசி சக்கிரத்திலிருக்கும் ஏதேனும் ஒரு கிரகத்துக்கு 2, 12, 11, 3, 6, 4-ம் ராசிகளிலிருக்கும் கிரகமோ கிரகங்களோ தற்கால மித்துருவாகுமென்பார் ஒரு சாரார். வேறு ஒரு சாரார் இதனை ஆமோதிப்பதுடன் எந்தக் கிரகம் எந்த ராசியில் உச்சபலமடைகின்றதோ அந்த ராசியின் அதிபனையும் தற்கால மித்துருத்துவத்துக்குக் கூட்டிக்கொள்ளல் வேண்டுமென்பார். சாஸ்வத மித்திருத்துவத்திற்குச் சொல்லியதைப்போலவே தற்காலமித்துருத்துவத்துக்கும் சொல்லப்பட்டிருக்கும் 2, 12, 11, 3, 6, 4-ல் காணப்படாத பாவங்களிலிருக்கும் கிரகமோ கிரகங்களோ சத்துருவாவார்கள் என்றுந் தெரிந்து கொள்க. உதாரணமாகக் கீழே காட்டியுள்ள ஜாதக சக்கரத்தில் எடுத்துக்காட்டுவோம்.

| | | | |
|---|---|---|---|
| சனி சு பு | சூ | ரா | |
| | | | ல |
| செ | | | வி |
| சந் | கே | | |

1. முதலில் சனியை யெடுத்துக்கொள்வோம். சனிக்கு 2-ம் ராசியிலிருப்பது சூரியன். இரண்டாவது சூரியனை எடுத்துக் கொள்வோம். சூரியனுக்கு 12 லிருப்பவன் சனி. அதுபற்றி சூரியனுக்கு சனியும் சனிக்கு சூரியனும் தற்கால மித்துருவாகிறார்கள். ஆனால் நைசர்க்கிக மித்துருத்துவப்படிக்கு சனிக்கு சூரியன் பகையென்று முன்னங்காட்டியிருப்பதால் சனியின் தசையில் சூரிய புத்தியிலோ சூரியன் தசையில் சனியின் புத்தியிலோ கேடுகள் யாதுமின்றி சமபலன் கிடைக்குமென்று சொல்லல் நியாயமாகும்.

2. மூன்றாவது செவ்வாயை யெடுத்துக்கொள்வோம். 2ல் கிரகமில்லை. 3ல் சனி புதன் சுக்கிரனிருக்கிறார்கள். நைசர்க்கிக பாவத்தால் சனியும் சுக்கிரனும் செவ்வாய்க்குச் சமநட்புடையவர்களாயும், புதன் பகைவனாகவும் இருக்கிறார்கள். ஆனால் தற்கால மித்துருப்படிக்கு செவ்வாய்க்கு மூன்றாம் ராசியிலுள்ள சனி சுக்கிரன் புதன் மித்துருவாகிறார்கள். இங்கு செவ்வாய் சனி சுக்கிரன் நைசர்க்கிக பலத்திலும் தற்கால மித்துருபாவத்திலும் வலுவுற்றிருப்பதால் அவரவர்கள் தசாபுக்தி அந்தரங்களில் விசேஷித்த பலத்தைக்கொடுப்பார்கள். ஆனால் செவ்வாய்க்கு புதன் நைசர்க்கிக பலத்தில் பகைவனயினும் தற்கால மித்துருவாகவு மிருப்பதுபற்றி சமபலனையே எதிர்பார்த்தல் நியாயமாகுமென்க.

3. சனி புதன் சுக்கிரன் ஆகிய இவர்களுக்கு 11ம் ராசியில் செவ்வாயிருத்தலால் செவ்வாய் அவைகளுக்குத் தற்கால மித்துருவாகிறான். நைசர்க்கிக மித்துருபாவத்தில் சனிக்குச் செவ்வாய் பகைவனாகிறான். சுக்கிரனுக்கு செவ்வாய் சமநட்பாகிறான். புதனுக்கும் செவ்வாய் சமநட்பாகிறான் என்றதில் சனி புதன் சுக்கிரன் மூவர்க்கும்

செவ்வாய் தற்கால மித்துருத்துவமுடையவனுகவும் நைசர்க்கிக பாவத்தில் சனிக்குச் செவ்வாய் பகைவனுக சனி தசை செவ்வாய் புத்தியிலும் செவ்வாய் தசை சனி புத்தியிலும் சமமான பலனை யும் மற்றத் தசாபுத்தி அந்தரம் அந்தராந்தரம் முதலிய காலங் களில் சனி சுக்கிரன் செவ்வாய் நல்ல பலனையே கொடுப்பார்கள் என்றும் தெரிந்துகொள்க. மற்றவைகளையு மிதுபோற் கண்டு கொள்க. இந்தவிதமாகக் கிரகங்களுக்குள்ளும் மனித வர்க்கத்தின ராகிய நம்மவர்களுக்குளிருப்பதுபோல் ஒன்றுக்கொன்று ஏற் பட்டிருக்கும் பாசத்தையும் வெறுப்பையும் இருவினை ஒப்பையும் காரணங்களுடன் எடுத்துக்காட்டுவது ஆச்சரியப்படத்தக்கதாகவே இருக்கின்றது. இதைக்குறித்துப் பிரஸ்தாபிக்கும்போது ஓர் நூலா சிரியர் கீழ்வருமாறு கூறுகிறுர். "மேல்நாட்டாராகியஐரோப்பியர்களில் சிலர் ஜோதிஷ சாஸ்திரம் காலடியர்களால் கண்டு தொகுக்கப்பட்ட தென்றும், அவர்களே இந்தச் சாஸ்திரத்தை யுண்டாக்கியதால் அவர் களைத் தெய்வமெனக் கொண்டு ஸ்தோத்திர ரூபமாக ஆராதிக்க வேண்டியதென்றும், அபிப்பிராயங் கொள்ளுகிறுர்கள். இங்ஙனம் அபிப்பிராயங் கொள்ளல் முற்றிலும் பிசகு என்றும், கிரகங்களுக்குள் மித்துரு சத்துரு சமநட்பாதியவைகளைப் போன்ற இன்னும் வேறு விஷயங்களையுங் காட்டக்கூடிய சாஸ்திரமேதேனும் காலடியர்களுக்குள் இருப்பின் அதனை வெளிப்படையாகக் கூறி அவர்கள் சொல்லை நிலை நிறுத்திக் கொள்ளல் சாத்தியமாகுமா" என்கிறுர். இதனுல் இத்தகைய சாஸ்திரம் பூர்வம் நமதென்பதே அவரது அபிப்பிராயமாகுமல்லவா?

முன்னம் பிரதமா அப்பியாசத்தில் 63ம் அம்சத்தில் சூரியனுக்கு உத்திராயனத்திலும் சந்திரனுக்கு தக்ஷுணுயனத்திலும் வலு அதி கரிக்குமென்று சொன்னேமல்லவா? இக்கொள்கை ஒரு சாரரதாம். வேறு ஒரு சாரர் சூரியனுக்கும் சந்திரனுக்கும் உத்தராயனத்தில் வலுவென்பார். இதுவே நமது சம்மதமுமாகும். குஜாதி பஞ்ச கிரகங் கள் (செவ்வாய் புதன் வியாழன் சுக்கிரன் சனி) வக்கிரமாகவேனும் சமாகமாகவேனு மிருக்கும்போது வலுவடைவார்கள். கிரகயுத்தத்தில் உத்தரபாகத்தில் (வடபாகம்) இருக்கும் கிரகங்களில் எந்தக் கிரகங்கள் ஜோதியில் மிகுத்து இருக்குமோ அவைகள் வெற்றியுடையனவுமாகும். குஜாதி பஞ்ச கிரகங்கள் வக்கிரமாகும்போது சேஷ்டாபலம் உடைய

வர்களாகிறார்கள். குஜாதி பஞ்சகிரகங்கள் சந்திரனோடு சேருங்காலத்தில் சமாகமம் ஆகிறது. சூரியனுடன் குஜாதி பஞ்சகிரகங்கள் சேருங்காலத்தில் அப்படிச் சேர்க்கை அமையுங்கிரகங்களுக்கு அஸ்தம் (அஸ்தங்கதம்) மூடம் என்பது ஏற்படுகின்றது. ஆனால் சந்திரனோடு அவைகள் சேருங்காலம் சமாகமமாகிறது. குஜாதி பஞ்சகிரகங்களுக்குள்ளே கிரகயுத்தம் இப்பேர்ப்பட்ட காலங்களில் தான் ஏற்படலாகும். சந்திரன் சூரியனோடு சேருங்காலத்தில் அஸ்தம் என்ற மௌட்டிகம் ஏற்படுவதாகச் சொல்வது வழக்கமில்லை. இத்துடன் விருச்சிக லக்கினத்தில் 61ம் பக்கத்தில் சொல்லியிருப்பதைப் பார்த்து ஒப்பிட்டுக்கொள்க. சூரியன் சந்திரனோடு சேருங்காலத்தில் சமாகமும் ஏற்படுவதில்லையென்பது சகஜம். கிரகங்கள் வக்கிரகதியை யடையுமுன்னமும் அவைகள் சீக்கிரகேந்திரநிலையி லிருக்கும்போதும் அவைகள் எவ்வளவுக்கெவ்வளவு ஜோதியில் அதிகரிக்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு வுருவில் அதிகரிக்கின்றன. கிரகயுத்தத்தில் சூரியனோடு சனி கூடில் சனி இளைப்பான். சனியோடு செவ்வாய் கூடில் செவ்வாய் இளைப்பன். செவ்வாயோடு குரு கூடில் வியாழன் இளைப்பன், குருவோடு சந்திரன் கூடில் சந்திரன் இளைப்பன். சந்திரனோடு சுக்கிரன் கூடில் சுக்கிரன் இளைப்பன். சுக்கிரனோடு புதன் கூடில் புதன் இளைப்பன். புதனோடு சந்திரன் கூடில் சந்திரன் இளைப்பன்: இவைகள் கிரகயுத்தங்களா யினம். சுக்கிரனுக்கு மாத்திரம் தெற்குத் திக்கில் எவ்வித நிலைமையிலும் ஜெயமென்று சொல்வர் பெரியோர். ஒரே பாதத்தில் செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி இவர்கள் நிற்கில் கிரகயுத்தம். எதிர்நடக்குங் கிரகம் வெற்றி, வக்கிரம், தோல்வி. இவைகள் சூரிய சந்திரர்கள் கூடாது நிற்கின் எனத் தெரிக. தக்ஷிணாயன ராசிகளில் இருக்கும் கிரகம் வருங்கிரகத்தை வெல்லும். உத்தராயண ராசிகளில் இருக்கும் கிரகங்களை வரும் கிரகம் வெல்லும்.

செவ்வாய்க்கு 5ம் இடத்திலும், குருவுக்கு 7ம் இடத்திலும், சனிக்கு 9ம் இடத்திலும் சூரியன் வரின் வக்கிரம். இவைகளுக்கு 7ம் இடத்தில் சூரியன் வரில் அதிவக்கிரம். இவ்விடங்களிலிருந்து சூரியன் பிரிந்துபோகுங் காலம் வக்கிர நிவர்த்தி (ருஜ்வி).

கிரகங்களின் காலபலத்தைக் குறித்து பிரதமா அப்பியாசத்தில் 61ம் அம்சத்தில் சொல்லியிருப்பதைப் பார்க்க. அத்துடன் சேர்த்து

இதையுங் கொள்க. சுக்கிலபக்ஷத்தில் சுபர்களும் கிருஷ்ணபக்ஷத்தில் அசுபர்களும் காலபலத்தில் வலுப்பெற்றிருக்கிறார்கள். எந்தப் புதிய வருஷம் எந்தத்தினத்திற் பிறக்கிறதோ, அந்தத்தினத்துக்குள்ள கிரகமும், எந்தத் தினம் எந்தக் கிரகத்துக்கு உரியதோ அக்கிரகமும் எந்த ஹோரை ஆரம்பமோ அந்த ஹோரைக்கு அதிபதியான கிரகமும் எந்த மாதம் எந்த நாளில் பிறக்கிறதோ அந்த நாளுக்கு அதிபனான கிரகமுங் காலபலமுடையவர்களாகிறார்கள் என்றதில், சாந்திரமான விதிப்படிக்குள்ள வருஷதின ஆரம்பம் எந்தத் தினத்தில் பிறக்கிறதோ அந்தத் தினத்திற்குள்ள கிரகம் அந்த வருஷம் ஜனனமான ஒருவனுக்கும் அவன் எந்த மாதம் எந்தத் தினத்தில் பிறக்கிறானோ அந்த மாதம் பிறந்த கிழமையின் அதிபனும் அவன் பிறந்த தினத்தின் அதிபனுமாகிய கிரகங்களும் எந்த ஹோரையில் ஜனனமோ அந்த ஹோரையின் அதிபனான கிரகமும், அப்படி ஜனிப்பவனுக்கு காலபலமுள்ள கிரகங்களாகிறார்கள். இதைப் பலாபலன்கள் கூறுமிடத்துக் கவனிக்கவேண்டியது முக்கியமாகும்.

இந்த ஹோரையைப் பற்றிய முக்கிய விஷயம் குறிப்பிடல் நலமெனத்தோற்றலால் அதனை இங்கு எடுத்துச்சொல்லுவோம். ஹோரா என்ற சம்ஸ்கிருத மொழிக்கு இரண்டரை நாழிகைகொண்ட கால அளவு என்பார். ஒருதினத்தில் 60 நாழிகை இருத்தலால் ஹோரை ஒன்றுக்கு $2\frac{1}{2}$-நாழிகை விதம் ஒரு தினத்தில் 24 ஹோரைகளடங்கியிருக்கின்றன. இந்த ஹோரையை இராசி ஹோரை திரேகாண முதலிய தசவர்க்கங்களில் குறிப்பிடப்படுவதில் அடங்கிய (ஹோரை) துடன் சேர்த்து மயக்கங் கொள்ளலாகாது. அதன் விவரம் பின்னர் சொல்லப்படும். இன்று வியாழக்கிழமை (13—9—28)யை எடுத்துக்கொள்வோம். வியாழக்கிழமையில் முதல் ஹோரையில் ($0—2\frac{1}{2}$)ல் வியாழனும், இரண்டாம் ஹோரையில் ($2\frac{1}{2}—5$) செவ்வாயும், மூன்றும் ஹோரையில் ($5—7\frac{1}{2}$) சூரியனும் நான்காம் ஹோரையில் ($7\frac{1}{2}—10$) சுக்கிரனும் ஐந்தாம் ஹோரையில் ($10—12\frac{1}{2}$) புதனும் ஆறும் ஹோரையில் ($12\frac{1}{2}—15$) சந்திரனும் ஏழாம் ஹோரையில் ($15—17\frac{1}{2}$) சனியும் எட்டாம் ஹோரையில் ($17\frac{1}{2}—20$) வியாழனும் ஒன்பதாம் ஹோரையில் ($20—22\frac{1}{2}$) செவ்வாயும் பத்தாம் ஹோரையில் ($22\frac{1}{2}—25$) சூரியனும் பதினோராம் ஹோரையில் ($25—27\frac{1}{2}$) சுக்கிரனும் பன்னிரண்

டாம் ஹோரையில் (27½—30) புதனும் பதின்மூன்றும் ஹோரையில் (30—32½) சந்திரனும் பதினான்காம் ஹோரையில் (32½—35) சனியும் பதினைந்தாம் ஹோரையில் (35—37½) வியாழனும் பதினாறும் ஹோரையில் (37½—40) செவ்வாயும் பதினேழாம் ஹோரையில் (40—42½) சூரியனும் பதினெட்டாம் ஹோரையில் (42½—45) சுக்கிரனும் பத்தொன்பதாம் ஹோரையில் (45—47½) புதனும் இருபதாம் ஹோரையில் (47½—50) சந்திரனும் இருபத்தோராம் ஹோரையில் (50—52½) சனியும் இருபத்திரண்டாம் ஹோரையில் (52½—55) வியாழனும் இருபத்துமூன்றும் ஹோரையில் (55—57½) செவ்வாயும் இருபத்து நான்காம் ஹோரையில் (57½—60) சூரியனும் வரிசைக்கிரமமாகத் தங்கள் தங்கள் ஹோராகாலங்களில் அந்தந்தத் தினத்தில் ஆட்சி பெறுகிறார்கள் என்பதை ஞாபகத்தில் வைத்திருக்க வேண்டியது அவசியம். மேலே காட்டிய ஹோரைகளில் காட்டப்பட்டிருக்கிற ஹோரை அதிபர்களின் கடைசி ஹோரையாக வியாழக்கிழமையிலிருந்த சூரியன் ஹோரையை இதற்குஒன்றுவிட்டு இடமாக எண்ண வருவது சனிபோய் சுக்கிரனுவதால் வியாழனுக்கு அடுத்த தினம் வெள்ளி வந்ததைக் காண்க. ஜோதிஷம் கற்பவர்களுக்கு எளிதில் மனதிலாகும்படி இங்ஙனம் எழுதியுள்ளோம். சாஸ்திரோக்தமாகப் பின்னர் எழுதலாகும். இதுபோலவே மற்றத் தினங்களுக்கும் அந்தத் தினத்தின் முதல் ஹோரையை அந்தந்தத் தினத்தின் அதிபனை எடுத்து ஆரம்பித்துக்கொண்டு தலைகிழாக ஒன்றைவிட்டு மற்றொன்றை எண்ணிக்கொள்க. இம்முறை தவறுகமாட்டாது.

ஸ்தானபலத்தைக் குறித்துள்ள விவரங்களை ஆராய்வோம். உச்சம் அடைந்த கிரகம் மித்துரு பாவத்திலிருக்கும்கிரகம் சுக்ஷேத்திரம் திரிகோணாதிபத்தியமடைந்துள்ள தன்னுடையராசியிலிருக்கும் கிரகம் தன் சொந்த நவாம்ச (வர்க்கோத்தமாம்சம்) மடைந்த கிரகம்ஆகிய இவைகளுக்கு ஸ்தானபலமுண்டு.

திக்குப் பலத்தைக் குறித்து விசாரிப்போம். ஜன்ம லக்கினம் எதுவோ அதுவே கிழ்த்திசையாகும். அப்படிக்குள்ள லக்கினம் எதுவானாலும் சரி, அதில் வியாழனும் புதனும் அல்லது அவ்விருவர்களில் யாராவது இருந்தாலும் சரி, அப்படிக்குள்ள வியாழனுக்கோ

அல்லது புதனுக்கோ அப்படிக்கின்றி அவைகளிரண்டுமே லக்கி னத்திலிருக்குமானல் திக்குப்பலத்தில் முழுப்பலமுண்டென்பது சாஸ் திரம். தெற்குத்திசை அதாவது லக்கினத்துக்குப் பத்தாம் கேந்திர ஸ்தானத்தில் சூரியனானாலும் சரியே, செவ்வாயானாலும் சரியே, அல் லது அவ்விருவர்கள் கூடியிருப்பினும் சரியே, அவர்கள் முழுப்பல மடைந்தவராவார்கள். மேல்திசை அதாவது லக்கினத்துக்கு ஏழாம் கேந்திரத்தில் சனி முழுப்பலம் பெறுகிறான். லக்கினத்துக்கு வட திசையான நான்காம் கேந்திரத்தில் சுக்கிரனும் சந்திரனும் வலுவில் பூரணபல மடைகிறார்கள். எந்தக் கிரகத்துக்கு எந்த ராசி மூல திரி கோணராசியாகின்றதோ அந்த மூல திரிகோண ராசியில் அதற் குள்ளபலம் எவ்வளவென்று சாஸ்திரோக்தமாக ஏற்படுகிறதோ அந்தப் பலத்தைப் பூராவும் தன் மூலதிரிகோண ராசிக்கு ஏழாம் ராசியில் இழந்துவிடுகின்றதென்பதையும் பலாபலன்களைக் கூறும்போது கவனிக்கவேண்டியதாகும். திருக்பலமென்பது கிரகங்களின் பார்வை யினால் ஏற்படும் பலாபலனாகும். நல்லவர்களின் பார்வையினால் நன் மையும் பாவர்களின் பார்வையினால் தீமையும் பலிதமாகும். கிரகங் களின் பார்வை (திருஷ்டி) முதலியனவற்றைக் குறித்துள்ள முழுவிவ ரங்களையும் கிரகங்களில் சுபர் அசுபர் இவர்களென்பதைப் பற்றியும் முதல் புத்தகத்தில் 48, 49, 59 அம்சங்களில் கூறியிருப்பனவையும் ஒப்பிட்டுப் பார்க்க. IV-வதுபிரிவில் கிரகங்களின் (1) நைசர்கிக பலம். (2) தற்கால மித்துருபலம். (3) சேஷ்டாபலம். (4) காலபலம். (5) ஸ்தானபலம். (6) திக்குபலம். (7) திருக் (பார்வை) பலம். (8) அஸ்த மூடம்-மௌட்டியம். (9) வக்கிரம். (10) ருஜ்வி. (11) சமாகமம். (12) கிரகயுத்தமாகியவைகளை எடுத்துக் கூறியுள்ளோம். அவைகளின் சாராம்சத்தைச் சுருக்கி இங்கு கூறல் அவசியமாதலால் அவைகளைக் கூறுவோம்.

(1) சுக்ஷேத்திர மூலதிரிகோணாதிபர்கள் தங்கள் தங்கள் ராசி களிலிருப்பது பற்றிச் சந்தோஷம் செல்வப்பெருக்கமாகியவைகளையும் (2) மித்துரு ஸ்தானத்திலிருக்குங் கிரகங்கள் பெருமை புகழ் இரா ஜாக்களின் அபிமானத்தால் பொருளீட்டல் முதலியவைகளையும் (3) வர்க்கோத்தம பலமடைந்துள்ளகிரகம் ஒருவனைக் கீர்த்திமானுக்கு வதும் (4) சுபர்களால் பார்க்கப்படுகிற கிரகங்கள் செல்வவானாகவும்

சௌந்தரியவானாகவும் நிதானமுள்ள மனத்தன்மையையுடையவனாகவும் பிறர் ஒப்பும்படிக்குள்ள பெருந்தன்மையுடையவனாகவும் சுபர்கள் ஆண் ராசியிலிருந்து பார்க்கின் கீர்த்திமானாகவும் கல்விமானாகவுமிருத்தலையும் பெண் ராசியில் சுபர்கள் பார்க்கின் களங்கமற்ற ஹிருதயனாகவும் தைரியமுள்ள தன்மையை யுடையவனாகவும் தெய்வபக்தியுடையவனாகவும் ஆக்கவோ அல்லது அவ்விதமான தன்மைகளைக் கொடுக்கவோ சக்தியுடையவராகிறார்கள் (5) திக்குபலத்தில் வலுவுற்ற கிரகங்கள் தாங்கள் எத்திசையில் வலுவுற்றிருக்கிறார்களோ அத்திசையில் ஜாதகிகளைப் போகும்படிச்செய்வித்து நல்லதசைக்கு உயர்த்துவிக்கும் ஆற்றலமைந்திருக்கின்றனர் (6) சேஷ்டாபலமடைந்துள்ள கிரகங்கள் பூஸ்திதியில் அபிவிருத்தியையும் பிறரால் மானிப்பையும் செல்வ முதலியவைகளையும் கல்வியில் விருத்தியையும் கொடுக்காதிருக்கார்கள். சுபர்கள் வக்கிரமடைந்திருத்தலுக்கும் பாபர்கள் வக்கிரமடைந்திருப்பதற்கும் வித்தியாச மிருக்கிறதைக் கவனிக்காத நம்மவருள் பல்லோர் அவைகளிரண்டுதர வக்கிரங்களுக்கும் பலனைக் கூறும்போது வித்தியாச மிருப்பதாகவே நினைக்கிறதில்லை. சுபர்களின் வக்கிர காலங்களில் ஜாதகிக்கு நல்ல பலனைக் கொடுக்குந் தன்மையை யுடையவராவர். ஆனால், பாபர்கள் வக்கிரமானால் தீய பலன்களை ஜாதகிக்குக் கிட்டுவனவாகும். அலைச்சல் மனோ சஞ்சலம் கொடுத்து வைத்திருக்கும் பொருள் திரும்பவும் கைக்குக் கிட்டாமை முதலியனவாம். (7) கிரகயுத்தத்தில் வெற்றி பெறுங்கிரகம் சௌக்கியம் சிநேகிதர்களையிட்ட லாபம் பொதுவாக எந்த முயற்சியிலும் நன்மையை யடைதல் சத்துருக்களின் அடக்கமும் தோல்வியும் பூமிலாபம் முதலியவைகளைக் கொடுக்கும் ஆற்றலுள்ளவர்களாம். (8) காலபலத்தில் வலுவுள்ள கிரகங்கள் வாகனாதிகளையும் நாற்கால் பிராணிகளில் விருத்தியும் சத்துரு நாசத்தையுங் கொடுப்பார்கள். அஸ்தங்கதோஷ முதலியவைகளையும் மற்றுமுள்ள வேறு தோஷங்களையும் அடையாத கிரகங்கள் நிஷ்களங்கமாகத் தங்களுடைய முழுஜோதியுடன் பிரகாசிக்குமேயானால் அவைகளையிட்ட பயன்கள் எண்ணிறந்தனவெனலாம். அதுபோலவே லக்கினத்தையும் தீய கிரகங்கள் பார்க்காதிருக்குமாயின் ஜாதகியின் வாழ்வு உயர்வு அடையுமென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை,

இலக்கினத்தில் வியாழனும் புதனும் பத்தாம் பாவத்தில் சூரியனும் செவ்வாயும் ஏழாம் பாவத்தில் சனியும் நான்காம் பாவத்தில் சுக்கிரனும் சந்திரனும் திக்கு பலத்தில் முழுப்பலமடைகிறார்கள் என்றோம். இதுவே பொதுவிதியென்றாலும் இது சம்பந்தமாக மற்றோர் முக்கியசித்தாந்தமுண்டு. அதனையுமிங்குகாட்டுவோம். அஃது வருமாறு, (1) கிழ்த்திசை ராசிகளான மேஷம் சிம்மம் தனுசு ராசிகளில் வியாழனும் புதனும் தென்திசை ராசிகளான ரிஷப கன்னியா மகர ராசிகளில் செவ்வாயும் சூரியனும் மேற்குத்திசை ராசிகளான மிதுன துலா கும்ப ராசிகளில் சனியும் வடதிசை ராசிகளான கடகம் விருச்சிகம் மீனராசிகளில் சுக்கிரனும் சந்திரனும் இருக்கின் முழுப் பலம் என்பதாம். இதனையும் பலன்கூறும்போது கவனித்தல் முக்கிய மென்பதை மனதில் வைக்க. இதுகாறும் ஷட்பலன்களின் விவரங்களை யொருவாறு எடுத்துக்காட்டினோம். இவ்விதமான பலன்களினால் கிரகங்களுக்கு வலுவுண்டென்பதைச் சாதாரணமாக உலகிலுள்ளவிஷயங் களைக்கொண்டு உதாகரித்துக் காட்டி இதனை வாசிக்கும் நம்மவருக்குச் சமாதானமாகும் விதத்தை யெடுத்துச் சொல்வோம். நைசர்க்கிக பலத்துக்கு உதாரணமாக ஒரு குடும்பத்திலிருப்பவர்களை யெடுத்துக் கொள்வோம். இவர்களுள் ஒருவருக்கொருவர் வேறுபட்டமனத்தினர் களாகவும் வேறு பட்டரூபமடைந்தவர்களாகவுமிருப்பினும் இரத்தக் கலப்பினாலோ அல்லது இயற்கையில் ஏற்பட்டுள்ள ஜன்மவாசனுபவத் தினாலோ அவர்களுக்குள் ஏற்பட்டுள்ள வாத்சல்யத்தாலோ அல்லது இன்னதுதான் காரணமென்று எவராலும் எடுத்துச் சொல்லக் கூடாத ஓர் நியாயங்கொண்ட உறவின் கட்டுப்பாடோ அல்லது உணர்ச்சியோ அவர்களை விலகாதிருக்கச் செய்கிறதன்றோ? அதே தன்மையில் நைசர்க்கிக கிரகங்களும் தங்களுக்குள்ள கிரணஜோதி களினியல்புகளில் ஒரே தன்மையில் இயற்கையிலமைக்கப்பட்டிருத்த லால் வேறு எவ்வித மாறுபட்ட கிரகங்களின் கிரணதிகளுள் அவை களின் கட்டுப்பாட்டை உடைத்தல் கூடாதெனத்தெளிக. (2) தற்கால மித்துரு கிரகங்களின் விவரங்களையும் எடுத்துக் காட்டுவோம். கேசவனுக்கும் நாராயணனுக்கும் இயற்கையில் பகைமை வாய்ந்திருக்க கேசவன் நாராயணனிலும் பலமும் செல்வாக்கும் பெற்றிருப்பதை யறிந்த நாராயணன் தனக்கு வேண்டிய வேறு ஒருவனாலோ அல்லது

கேசவனுக்கு வலுச் செல்லாததும் நாராயணனுக்குச் செல்வாக்கு
முள்ள இடத்தில் வலிபடைத்தவனான சிநேகன் ஒருவனால் கேச
வனுக்குத் தீங்கையிழைத்தல் கூடுமெனத் தெரிந்தோ பிறரால்
சொல்லக்கேட்டோ சமாதான வழியை கேசவன் நாராயணனிடம்
எதிர் பார்ப்பதே தற்காலத்தில் சாதகமாகக் கூடுமென்று இருவரும்
நேசமாவதையொக்கும். (3) சேஷ்டா பல கிரகங்களின்றன்மையைப்
பற்றியுள்ள விவரங்களாவன. கிரகங்கள் தங்களது சேஷ்டா
காலங்களில் மற்ற கிரணாதி வகைகளினால் ஜோதியதிகரித்தோ அல்லது
அதன் காரணமாக வலுவுற்றோ நன்மையையவைகள் பெறுவதால்
அவ்வித நன்மையையே பிறர்க்கும் கொடுக்கும் ஆற்றல் பெற்றிருப்ப
தாம். களைத்தும் இளைத்துமிருப்பவர்கள் வெளி இடங்களிற் சென்று
நல்ல ஆகாயம் நீர் முதலியவைகளைப் பருகி மனக்கிளர்ச்சியை யடைந்
தும் தேக வலுப்பெற்றும் பிறர்க்கு உதவியாக தைரியத்துடன் வாழ்
வதையொப்பிடுக. (4) காலபலமடைந்துள்ள கிரகங்களின் விவரம்
ஓர் மனிதனின் வாழ்நாளில் பால்யமான காலத்தில் எவ்வளவோ
பலமடைந்து சாகசங்களால் தன் வலிமையை நிலை நிறுத்தியதன்
பின்னர் அந்த மனிதன் தனது வயோதிகத்தில் நடப்பதற்குச்
சக்தியற்றும் பார்வை முதலியவை குன்றியும் இருப்பதை
யொக்கும். வெயில் காலங்களிலும் மழைக்காலங்களிலும் இரவுபகற்
காலங்களிலும் அந்த மனிதனுக்கு பால்யத்திலும் வயோதிகத்திலும்
தேக இயற்கையும் மனோஇயற்கையும் ஆகாராதிகளின் உருசியின்
இயற்கையுமாகிய பலவகைகளில் எங்ஙன மாறுபட்ட இயல்பினை
யடைதல் நியாயமோ அதுபோலவே கிரகங்களும் வருஷம் அய
னம் ருது மாதம் பக்ஷம் வாரம் ஹோரையாதியவைகளில் தங்கள்
தங்களுக்கென்று ஒவ்வொருகாலங்களிலும் குறிப்பிட்டதும் மாறுபட்
டதுமான பலமடைந்துள்ளவைகளாகின்றன. (5) ஸ்தான பலமடைந்த
கிரகங்களுக்கு விவரம். எந்த எந்தக் கிரகங்களுக்கு எந்த எந்தத்தன்
மைகளால் எந்த எந்த இடங்களில் இருத்தலில் வலுவுண்டென்ப
தக்கும் அவைகள் அங்கிருந்து பெயர்ந்தால் வலுவில் குறைந்து
விடுகின்றன என்ற நியாயத்துக்கும் சமாதானம் வேண்டுமாயின்
நதிகளிலோ சமுத்திரங்களிலோ வாழ்கின்ற முதலை சுறுமீன் முத
லிய ஜலசரங்கள் ஜலத்தினுட் செல்லும் முழுவலிபடைத்த யானை

லையேனும் பெருங்கப்பல்களையேனும் பிடித்துச் சின்ன பின்னமாக்கும் தன்மையை வகித்திருந்தும் அவைகள் தங்களுக்குள்ள வாசஸ்தலமான நீரினின்றும் வெளிப்படுமாயின் ஆகாரத்துக்கலைந்தும் உணர்ந்தும் தள்ளாடித்தள்ளாடிச் செல்லும் நாய்களுங் கூட அவைகளை எளிதில் எதிர்த்துக் கடித்துங் கொதரிவிடுமென்பதை நம்மவரில் பலர் பார்த்திருக்கவுங்கூடும். இராஜாக்களுள்ளும் தங்களது சிம்மாசன ஸ்தானத்தை பகைவராலேனும் வேறு காரணங்களாலேனும் இழக்கநேரிடின் அவர்கள் வேறிடங்கள் சென்று வசிப்பதில் எவ்வளவு ஸ்தான பிரஷ்டர்களாகியிருக்கிறார்கள் என்பதும் நாமறிந்தவிஷயமே. (6) திக்கு பலம் வாய்க்கப்பெற்றுள்ள கிரகங்களைக்குறித்துள்ள விஷயம் நம்மவர்களுள் சிற்சிலருக்கு ஒவ்வொரு திசையில் மாத்திரம் செல்வாக்குப் பெற்றிருப்பதுபோல அதாவது ஒரு ஜில்லாவிலுள்ள கலெக்டருக்கு அந்த ஜில்லாவில் தன்னுடைய செல்வாக்குப் பூராச்செல்வதாக இருந்தும் அதே இராஜாங்கத்தாருக்குச் சொந்தமான அடுத்த ஜில்லாவில் தன் வரம்பின் அதிகாரம் எவ்விதம் செல்லாது தடைபடுகின்றதோ அதேபோல் கிரகங்கள் நாலாபக்கங்களிலும் ராசி சக்கிரத்தில் அமைந்திருப்பினும் தங்களுடைய பலாபலன்களை ஏககாலத்தில் எல்லாத் திசைகளிலும் ஒன்றுபோலச் செலுத்துவதற்குக் கூடாமையாகும் என்று தெரிக. (7) திருக்குபலம் வாய்ந்துள்ள கிரகங்களின் தன்மையின் விளக்கம். எவனாவது ஒருவனுக்கு பலிஷ்டனான மாற்றான் ஏற்பட்டு அவனால் மற்றவனுக்குக் கெடுதல் வருமென்று தெரிந்த மற்றொரு செல்வாக்குடையவன் இருவர்களில் இளைத்தவன்மேல் கருணை கொண்டோ வேறு காரணங்கொண்டோ தன்னுடைய பார்வையில் வைத்துக்கொண்டிருப்பானாகில் வலுத்தவன் காரியம் இளைத்தவன் இடம் இக்காரணத்தால் செல்லல் தடையாகுமல்லவா? எவன் துஷ்டனாகவும் அநீதியான செய்கைக்குட்பட்டவனாகவுமிருக்கிறானோ அவனை இராஜாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட போலீஸ் அதிகாரிகள் சதா பார்வையில் வைத்து அவனைக் கெட்டசெய்கைக் குட்படாமலிருக்கத் தடைப்படுத்தி வைத்திருப்பதை யொக்கும் என்பதையும் உவமானமாகக்கூறலிற் றவறாகமாட்டாது. கெட்டபலன்களைக் கொடுக்கும் கிரகங்களை சுபர்கள் பார்ப்பதாக இருக்குமானால் கெட்டவர்களின் அக்கிரத்தியம் குறைவுபடுமென்பதை உணர்க.

## முக்கிய விஷயங்களின் குறிப்பும் சாராம்சமும்.

1. *இராஜயோகம்:*—திரிகோணமும் கேந்திரமும் ஒன்றுபடச் சேர்ந்திருத்தலினும் அவைகளை வகித்துள்ள இருகிரகங்களாக இருக்க வேண்டியதவசியமா? கடகலக்கினத்துக்கு செவ்வாய் 5-10க்கு உடையவனாக இருக்க இதில் தர்மாதிபதியின் சேர்க்கை (9) இல்லாமல் மற்றோர் திரிகோணமான 5-ம் பாவாதிபத்தியத்தால் செவ்வாய் எப்படி கடகலக்கினத்துக்கு இராஜயோகம் கொடுத்தல் கூடுமென்றும் சாதாரண யோகத்திலும் சிறிது சிறந்தே விளங்குமென்றும் சொல்லலையுமா? இஃது ஒருவாறு நியாயமெனினும் தர்மாதிபதியும் கர்மாதிபதியும் சேர்வதிலும் அதாவது வியாழன் 9-12க்குள்ளதில் 12வது கெட்டுவிட்டதால் ஒருவிதம்பலமடைந்தும் மற்றோர்விதம் பலமிழந்துமிருக்கும் வியாழனின் சேர்க்கையால் செவ்வாய்க்குக் கிடைக்கும் பலத்திலும் செவ்வாய் ஒன்றுக்கே இயற்கையிலமைந்துள்ள 5-10ன் களங்கமற்ற பலம் சிறந்ததென்பதே சிறப்பு விதியென்றுதெரிக. ஒரே கிரகத்துக்கு திரிகோணாதிபத்தியமும் கேந்திராதிபத்தியமும் இருக்க வேண்டுமாயின் 4-9; 5-10; 4-5; 5-9; 9-10; ஆகிய ஸ்தானங்களை வகித்த கிரகங்களின் ஆதிபத்திய இராசிகளாக இருக்கவேண்டியதவசியமாகுமெனத்தெரிக. இதனால் அப்படிக்கு வந்துள்ளது ஒவ்வொரு கிரகமாகவே தனித்துமிருக்க வேண்டியதென்பதைச் சொல்லாமலே நீங்கள் தெரிந்துகொள்ளலாமல்லவா? ஆயினும் அதனையுமிங்கு காட்டிவிடுதல் நலமெனத் தோற்றலால் எடுத்து உதாகரிக்கின்றோம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | கடகலக்கினத்துக்குச் | செவ்வாய் | 5—10 க்குடையவன். |
| 2. | ரிஷபலக்கினத்துக்குச் | சனி | 9—10 க்குடையவன். |
| 3. | சிம்மலக்கினத்துக்குச் | செவ்வாய் | 4—9 க்குடையவன், |
| 4. | துலாலக்கினத்துக்குச் | சனி | 4—5 க்குடையவன். |
| 5. | மகரலக்கினத்துக்குச் | சுக்கிரன் | 5—10 க்குடையவன். |
| 6. | கும்பலக்கினத்துக்குச் | சுக்கிரன் | 4—9 க்குடையவன், |

என்றதிலிருந்து இராசிகளில் ரிஷபம் கடகம் சிம்மம் துலாம் மகரம் கும்பங்களாகிய இராசிகளின் லக்கினங்களாக இருக்கவேண்டியவனவென்றும் கேந்திர திரிகோணங்களையுடையகிரகங்களாக செவ்வாய் சுக்கிரன் சனி ஆகிய இம்மூன்று கிரகங்கள் மாத்திரமே என்றும் தெரிக.

(4) இத்தன்மையை மற்றக் கிரகங்கள் ஏன்பெற்றில என்ற வினவிற்குச் சமாதானம் வருமாறு:-சூரியனுக்கும் சந்திரனுக்கும் தனித்தனி ஒவ்வொரு ராசியே ஏற்பட்டுள்ளதால் கேந்திர திரிகோணத்துவமடைய நியாயமில்லாது போயிற்றென்பது வெட்ட வெளிச்சமே. புதனும் வியாழனும் தனித்தனி இரண்டு ஆதிபத்திய ராசிகளையடைந்தும் அவைகள் கேந்திர திரிகோணங்களை யடையாது இருப்பதென்னை என்ற வினவிற்கு விடையாவது: அவைகள் இரண்டும் இராசி சக்கரத்தில் மூலை வீடுகளை இரண்டு இரண்டாகப் பெற்றிருத்தலில் எங்ஙனம் கேந்திரத்திரிகோணச் சேர்க்கை ஒன்று பட்டுக்காணல் கூடும்? கூடாதென்க.

(5) கேந்திரதிரிகோணங்களை யடைந்துள்ள இரண்டு கிரகங்களைக் குறித்துள்ள விஷபங்கள். இராஜயோகத்துக்கு தர்மாதிபதியான ஒன்பதாம் ராசியாதிபதியும்,கர்மாதிபதியான பத்தாம் ராசியாதிபதியுமான இரண்டு கிரகங்களின் சேர்க்கையில், மேஷலக்கினத்துக்கு ஒன்பதுக்குடைய குருவும் பத்துக்குடைய சனியும் ஒன்று சேரின் இராஜயோகமிருத்தல் நியாயமெனினும், வியாழனுக்குள்ள பன்னிரண்டாமாதிபத்திய முதலிய காரணங்களினாலும் சனிக்கேற்பட்டுள்ள பதினோராம்பாவாதிபத்தியத்தாலும் 12-11 கெட்டஸ்தானங்களாவதாலும் இவைகளின் சேர்க்கையில் கிடைக்கும் இராஜயோகம் பழுதுபட்டதாகுமென்ற சிறப்புவிதியினையும், ஒருவன் இராஜனாகப் பிறப்பினும் அந்த ஸ்தானம் அடிக்கடி சஞ்சலத்துக் குட்படுமென்பதனையு மறிக. இதுபற்றியே 9-10க்குடைய கிரகமோ (சனி) அல்லது கிரகங்களோ சேர்ந்திருப்ப, அதில் 3-6-8-11-12 பாவாதிபர்களில் எவருடைய சேர்க்கைபாவதிருப்பின் இராஜயோகம் பங்கத்துக்குட்படும் என்றது சாஸ்திரத்தினது துணிபு. இதுபற்றியே, (1) மேஷலக்கினத்துக்கு வியாழனும் சனியும் சேர்க்கையடைவதும், (2) ரிஷபலக்கினத்துக்குச் சனி 9-10க்குடையவனுவதில் தனித்துச் சிரேஷ்டமாயினும், 8 11க் குடைய வியாழன் சேரின் இராஜயோகங் கெடுவதும், இப்படி 8-11க் குடைய கிரகம் ரிஷபலக்கினத்துக்கு வியாழனும் விருச்சிக லக்கினத் துக்குப் புதனும் என்று தெரிக. 8-11க்குடைய ஆதிபத்தியங்களைப் பொருந்தியவர் புதனும் வியாழனுமாம். 8-11க்குடையார் இராஜ

யோகத்தைக் கெடுத்தலில் முழு வலுவுடையராவர் என்றது சிறப்பு விதியெனத் தெரிக. விருச்சிக லக்கினத்தாக்குச் சந்திரனும் சூரியனும் சேர்க்கையாவதில் 9-10க்குடையோர்களாயினும், புதன் 8-11க்குள்ள தன்மையை யடைவதால் அவ்விருவர்களுடன் சேர்ந்தால் இந்த யோகம் முழுவதும் பாதிக்கப்படுமென்பதும் சிறப்புவிதியே. 3-6-8-11-12 என்றவைகளில் 8-11ஐப்பற்றிச் சொல்லிவிட்டோம். இனி 3-6ஐப்பற்றிச் சொல்லுவோம்:—மேஷலக்கினத்தாக்கும் துலாலக்கினத்தக்கும் முறையே புதனும் வியாழனும் 3-6ம் பாவத்தைப் பொருந்தியுள்ளாராவதுபற்றி தர்மாதிபனும் (9ம்) கர்மாதிபனும் (10ம்) சேருமிடங்களில் இவைகள் சேர்வதனாலும் பங்கமே. ஆனால், 9-10க்குள்ளவர்கள் சேர்க்கையில் இவர்கள் சேர்க்கை கூடாதென்பது பொது விதியாயினும், ஷட்கிரகங்கள் (ஆறு) கூடி நல்லஸ்தானங்களிலிருப்பதும் அவ்விதம்கூடிய கிரகங்கள் பாபர்களின் தோஷமுதலியவைகளையும் பார்வைகளையும் பொருந்ாதிருப்பதுடன் லக்கினத்தையும் பாபர் பாராதிருந்தால் மகாயோகம் என்பர். முன் காட்டியுள்ள விருச்சிகலக்கினபலனிற் கூறியிருப்பதை 61-ம் பக்கத்தில் பார்க்க. தர்மகர்மாதிபர்களைப் பாபர்கள் பார்ப்பதுந் தீதே. இதுகாரணம் பற்றியன்றோ 9-10க்குள்ள ஆதிக்கம்பெற்ற இரண்டு கிரகங்களிலும் சனிபோன்ற ஒரே கிரகமும், 5--10க்குடைய இரண்டு கிரகங்களிலும் செவ்வாய் போன்ற ஒரே கிரகமும், 4-5க்குடைய இரண்டு கிரகங்களிலும் சனிபோன்ற ஒரே கிரகமும், 4-9க்குடைய இரண்டு கிரகங்களிலும் செவ்வாய் போன்ற ஒரே கிரகமும், 5-10க்குடைய இரண்டு கிரகங்களிலும் சுக்கிரன்போன்ற ஒரே கிரகமும், 4-9க்குடைய இரண்டு கிரகங்களிலும், சுக்கிரன் போன்ற ஒரே கிரகமும் ரிஷபம் கடகம் துலாம் சிங்கம் மகரம் கும்பமாகிய லக்கினங்களுக்குச் சிறந்ததென்றது சிறப்பு விதியாகுமென்பதே எமது அபிப்பிராயமாகும்.

(6) தர்மாதிபன் கர்மாதிபன் வீட்டிலும் கர்மாதிபன் தர்மாதிபன் வீட்டிலும் பரஸ்பரம் மாறியிருத்தலும் ஓர் வகை இராஜயோகத்தை யொத்ததாகும். இதைத்தான் பரிவர்த்தனையென்று சொல்வது.

(7) கேந்திராதிபர்கள் திரிகோணாதிபர்களினிடையில் இருப்பதும் அல்லது அவர்கள் பரஸ்பரம் பார்வையை வகித்திருப்பதும்

இராஜயோகமாகும். உதாரணமாக ரிஷபலக்கினத்தை எடுத்துக் கொள்வோம். இந்த லக்கினத்துக்குக் கேந்திராதிபர்கள் 1 சுக்கிரன், சூரியன், செவ்வாய், சனி. 2. திரிகோணாதிபர்கள் 5-க்குள்ள புதனும் 9-க்குள்ள சனியுமாகியவர்களில் ஒன்றினுள்ள சுக்கிரன் முதலியவர்களாயினும், அவைகளில் சிலவைகளாயினும், இரண்டிலுள்ள புதன், சனியாதிபர்களிடையிலிருக்கவோ பரஸ்பரம் பார்க்கப்படவோ இருப்பதானல் யோகமுதலியவைகள் அக்காலங்களிலுண்டெனலாம்.

(8) இராகு கேந்திர திரிகோணங்களிலிருந்து அவ்வதிபர்களின் சேர்க்கை பார்வை முதலியவைகளையடைந்திருந்தால் சாயா கிரகங்களான இராகு கேதுக்களும் நல்லயோகத்தைக் கொடுக்கும் வலுப்பெறுகிறார்கள். கேந்திரம் திரிகோணத்துவங்களை யடையாத கிரகங்கள் கேவலம் இராகு கேது கேந்திர திரிகோணங்களிலிருக்கும் தன்மையையடைவதினல் அங்ஙனம் வலுவற்ற கிரகங்களின் சேர்க்கையடைவதின் காரணமாக இராகு கேது வலுவிழந்து கெட்ட பலனையே பெரும்பாலுங் கொடுப்பார்கள் என்பதையும் தெரிந்து கொள்ளல் அவசியம். கேந்திர திரிகோணங்களை யடைந்த ஒரேகிரகம் (9-10க்குள்ள சனியை நீக்கி) கொடுக்கும் இராஜயோகம் எவ்விதமான தீங்குகளினின்றும் நீங்கியிருக்கும். 9-10க்குடைய இரண்டு கிரகங்கள் கொடுக்கும் இராஜயோகத்திலும் சிறந்ததாக இருக்க நியாயமில்லையென்பது யுத்திக்குப் பொருத்தமுடையதாம். இவ்விதம் இரு கிரகங்களின் சேர்க்கை தீங்கில்லாதிருத்தல் பெரும்பாலும் குதிரைக் கொம்பாகவே முடியும். எமது அனுபவத்தில் தர்மாதிபனுங் கர்மாதிபனும் சேர்ந்து இராஜயோகத்துவமடைந்திருக்க அவைகளுடன் 8, 11க்குடையவர் சேர்ந்து கெடுத்துவிடுகிற கொடுமையின் செயல், வேறு 3, 6, 12க்குள்ள ஆதிபத்தியங்களைக் கொண்ட கிரகங்களுக்கு இருப்பதாகத் தெரிந்திலது. இதுபற்றியே மறுபடியும் இதை எடுத்துச் சொல்லியது. 8, 11க்குடையவர் புதன், வியாழன் இவ்விருவர்களே. இவர்கள் சுபர்களாக இருந்தும் என் இவ்விதமாதல் எனக்கேட்போருக்கு விடையை அடுத்த புஸ்தகத்தில் பலாபலன் கூறும் பகுதியில் வெளியிடுவோம்.

(9) இராகு கேதுக்களைக் குறித்துள்ளன:- இவைகள் சாயா கிரகங்களாவதால் இவைகளுக்கென்று இராசிமண்டலம் பன்னிரண்டி

லும் ஆதிபத்தியம் சுக்ஷேத்திர முதலியவைகள் ஏற்பட்டிருக்கிறதாகத் தெரியவில்லை. ஆனால் பராசரரால் இயற்றப்பட்ட தசாசந்திரிகை என்ற நூலில் ரிஷபத்தை இராகுவுக்கு உச்சராசியாகவும், விருச்சிகத்தைக் கேதுவுக்கு ஸ்வராசியாகவுங் கூறப்பட்டுள்ளது. இதையே நம்மவரில் பெரும்பாலர் அனுஷ்டித்து வருவதும். (2) இராகு கேது எந்த ராசியிலிருக்கின்றதோ அந்த ராசியாதிபதியைக் கொண்டும், இராகு கேதுவுடன் சேர்ந்திருக்கும் கிரகங்களைக்கொண்டும், எக்கிரகங்களாற் பார்க்கப்படுகின்றனவோ அவைகளைக்கொண்டும், அவைகளுக்குள்ள பலா பலங்களை நிச்சயித்தல் முறை என்பார் ஜோதிஷர்கள். முன் னூல்களில் தசா புக்தியின் அனுஷ்டானம் சொல்லப்படாததால் உடு தசாகாலத்தில் இராகு கேதுக்கள் வழக்கத்துக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறதென்று தெரியவருவது காண்க. மேஷமுதல் கன்னி ஈறாகவுள்ள ராசிகளில் இராகுவுக்கும் துலாமுதல் மீனம் ஈறாகவுள்ள ராசிகளில் கேதுவுக்கும் பலம் என்பார். இவ்விருவகை ஆறு ராசிகளில் உள்ள இராகுவும் கேதுவும் கெடாதிருக்கில் நல்ல பலனை தங்களது தசாபுக்திகளில் கொடுத்தல் கூடுமென்பதும் ஓர் வகுப்பினர் முறை. இஃதே எமது சம்மதமுமாகும்.

(10) மாரக விஷயம்(பொதுவிதி):- ஏழாம் பாவாதி பத்தியத்திலும் இரண்டாம் பாவாதி பத்தியம் மாரகத்தில் வலுவுள்ள ராசியாகும். இரண்டாம் பாவத்திலும் ஏழாம் பாவத்திலும் இருக்கிற கிரகங்கள் இரண்டாம் பாவத்தையும் ஏழாம் பாவத்தையுங் காட்டிலும் மாரகத்தில் வலுப்படைத்துள்ளோராவர். இரண்டாம் பாவாதிபதியுடனும் ஏழாம்பாவாதிபதியுடனுமிருக்கிற கிரகங்கள் மேலே சொல்லியவைகளிலும் மாரகத்தில் வலுப்பெற்றவர் ஆவர் உதாரணமாக: கடகலக்கினத்தில் ஜனித்ததாக வைத்துக்கொள்வோம். இலக்கினத்துக்கு இரண்டாம் பாவம் சிம்மம், ஏழாம்பாவம் மகரம் இவை இரண்டிலும் சிம்மராசியே மாரகத்தில் வலுவுள்ளது சிம்மத்தில் சுக்கிரனும் மகரத்தில் வியாழனுமிருப்பின் இவையிரண்டும் சிம்மாதிபதியான சூரியன் மகராதிபதியான சனியைக்காட்டிலு மாரகத்தில் வலுவுடையவனவன். ஆனால் இரண்டாம் ஆதிபத்தியத்தையும் ஏழாம் ஆதிபத்தியத்தையுமுடைத்துள்ள கிரகங்களோடு அதாவது சூரியனோடும் சனியோடும் செவ்வாய் சந்திரன் முதலியவேறு கிரகங்கள்

சேருமாயின் இவைகளை (செவ்வாய் சந்திரன்) முன் சொல்லியுள்ள எல்லாவற்றிலும் மாரகத்தில் கொடுமையான பலமுடையவர்களாவார்கள்.

(11) லக்கினத்துக்கு எட்டாம் பாவமும் அந்த எட்டாம்பாவத்திற்கு எட்டாம் பாவமும் ஆயுள் ஸ்தானங்களாகும். இப்படிக்கு அமைந்துள்ள எட்டாம் பாவத்துக்கும் அதற்கு எட்டாம் பாவத்துக்கும் 12-ம் பாவம் மாரக ஸ்தானங்களாகும். இது சிறிது விவரம் விளங்கலில் கஷ்டமிருத்தல் கூடுமென்பதைக் கருதி அதனை விவரிப்போம். உதாரணமாக,

| | | | |
|---|---|---|---|
| 4 ரா 11 | 5 வி 12 | 6 ல 1 | 7 2 |
| 3 10 | | | 8 சனி 3 |
| 2 9 | | | 9 செ-சு 4 |
| 1 சந் 8 | 12 7 | 11 6 | 10 கு-பு கே 5 |

இந்தஜாதகி பிறந்தகாலத்தில் கேதுதசையிலிருப்பு சுமார் சிறிது கூட 5வருஷமும் 8 மாதமும். இந்த ஜாதகத்தில் லக்கினத்துக்கு 8-ம் பாவம் தனுசு. இந்தத் தனுசுக்கு 8-ம் பாவம் கடகம். அப்படிக்கு வந்துள்ள கடக லக்கினம் மூன்றும் பாவமாயும் இருப்பதால் மூன்றும்பாவமும் எட்டாம்பாவமும் ஆயுள் ஸ்தானங்களாகும். இங்கு எட்டாம் பாவத்திற்கு 12ம் பாவம் விருச்சிகமும் இந்த 8க்கு 8-ம் பாவத்திற்கு 12-ம் பாவம் மிதுனமும் ஆவதால் மிதுனம் லக்கினத்துக்கு 2-ம் பாவமாயும் விருச்சிகம் 7-ம் பாவமாயும் இருப்பதை சக்கிரத்தில் கண்டு கொள்க. இப்படிக்கு அமைந்துள்ளவைகள் 7-ம் பாவமும் 2ம் பாவமுமாக ரிஷபலக்கினத்துக்கு மிதுனமும் விருச்சிகமுமாவதால் அவைகள் மாரகஸ்தானங்களெனப்படும். ஆயுள்ஸ்தானமான 8-ம் பாவத்திற்கு விரையமான 12-ம் பாவம் 7-வதும் அந்த 8க்கு 8-ம் பாவ

மான கடகத்திற்கு விரையமான 12-ம் பாவம் 2-ம் பாவமான மிதுனமாவதாலும் அவைகளை மாரகஸ்தானங்களெனக் குறிப்பிடலாயிற்று. ஆயுள் ஸ்தானங்களான 3-8ம் பாவங்களானவைகளுக்கு 2-ம் 7-ம் நஷ்டஸ்தானங்களான 12ம் பாவமாவதால் உயிர்நஷ்டமென்ற பொருள்படலால் 2,7 யும் மாரகஸ்தானங்களெனச் சொல்லலாயிற்று. இரண்டாம் பாவத்திலும் ஏழாம் பாவத்திலும் இங்கே கிரகங்கள் யாதொன்றுமே கிடையாது. அப்படிக்கிருக்கிற கிரகங்கள் பாவாதிபத்தியங்களிலும் மாரகத்தில் வலுவுடையவர்களாவார்கள் என்று முன்னம் சொல்லியிருக்கிறோம். இதிலும் இரண்டாம் பாவாதிபதிக்குள்ள கிரகத்துடனும் ஏழாம்பாவாதிபதிக்குடைய கிரகத்துடனும் சேருங்கிரகம் வலுவுடையதாகும் என்றோம். அதனால் இந்த 2க்குள்ள புதனுடனும் 7க்குள்ள செவ்வாயுடனும் யார் யார் சேர்ந்திருக்கிறார்கள் அல்லது அவ்விருவர்களை எவர் எவர் பார்க்கிறார்கள் என்று தெரிந்துகொண்டபின்பு மாரக வலுவை நிச்சயிக்க வேண்டியதென்று இதுகாறும் கற்றுக்கொண்டதிலிருந்து தெரிந்துகொண்டோம்.

இரண்டுக்குடைய புதனுடன் சூரியனும் கேதுவும் ஏழுக்குடைய செவ்வாயுடன் சுக்கிரனுமிருக்கிறார்கள். புதன் உச்சனும் தன பஞ்சமாதிபதியாயுமிருந்து பஞ்சம ஸ்தானத்தில் வலுத்துவிட்டதாலும் செவ்வாய் மித்துரு ஸ்தானத்தில் கேந்திர ஸ்தானத்தில் லக்கினாதிபதியுடன் சேர்ந்துவிட்டதாலும் கொல்ல வலுவிழந்து விட்டான் என்றும் செவ்வாயாலும் புதனாலும் பார்க்கப்படுவது இராகு. இந்த ராகுவுக்கு வியாழன் செவ்வாய் சுக்கிரன் புதன் சூரியன் கேதுவாகிய இவர்களின் பலனைக் கவனிக்கவேண்டியதில், இராகு தசையின் முடிவு கடந்து வியாழதசை ஆரம்பமாகும் காலஅளவே மாரகமாக முடிந்ததென்பதாம். இது ஓர் பெரும் சுதேச மகாராஜா அவர்களின் ஜாதகம். கல்வியில் மகாதேர்ச்சியும் ஆக்ஷித்திறனில் வல்லோர் எனவும் விளங்கினர். ஹிருதயஸ்தானமும் மனதின் பாவமும் ஏற்றமுற்றும் சிற்சில விஷயங்களில் குறையுமெனச் சொல்ல நியாயமுடைத்தென்பதையுங் காண்க. இம்மன்னரது ஆக்ஷியின்கீழ் பூமிவிருத்தியும், இராஜ்பாதிகார கிரகங்களின் தசாபுத்தி அந்தரங்களின் இறுதிக்காலங்களில் மாரகமுமுண்டென்பர். இரண்டாம் பாவத்திலும் ஏழாம் பாவத்திலும் இருக்கிற கிரகங்களின் தசாபுத்தி சித்திர முதலியவைகளின் இறுதிக்காலங்களும்மாரக

முன்டென்பார். இந்தப் பொதுவிதிக்குள்ள தன்மைப்படிமாரகம் ஏற் படாதிருந்தால், இரண்டு ஏழுக்குடையவர்களின் தசாபுக்தி சித்திரங்க ளில் மாரகம் உண்டென்பார் சாஸ்திரமறிந்த பெரியோர். மேலும் மாரக ஸ்தானங்களிலிருக்கும் கிரகங்கள் மாரகத்தைச் செய்யத் தவறின் அவர்களை அதிபதியாகவுடைய கிரகங்கள் மாரகத்தைக் கொடுக்கும். அவைகளும் மாரகங் கொடுக்கவில்லையென்றால் கெட்டுவிட்ட கேந்திர திரிகோணங்களைப் பொருந்திய கிரகம் அல்லது கிரகங்கள் மாரகத்தைக் கொடுக்கும். அவைகளும் மாரகம் கொடுக்கச் சக்தியற்றனவென்றால், மூன்று எட்டுக்குடையவர்களை மாரகம் கொடுப்பவர்களாவார்கள். மேலே காட்டியுள்ள ஜாதகத்தில் எட்டாம் பாவாதிபதியான வியாழன் தன்திசையை இராகு விட்டு ஏற்குங்காலத்தில் மேலே காட்டிய ஜாதகத்தில் மாரகங் கொடுத்ததை யறிக. மாரக விஷயமாக மேலே சொல்லியுள்ளவைகளை நிச்சயிக்க இன்னும் சில விஷயங்கள் இப்புத்த கத்தில் அவசியமெனத் தோற்றுவதையும் சொல்வோம். ஜாதகத்தில் எந்தக் கிரகம் மிகுத்துப் பலமடைந்து கெட்டுவிட்டதோ அப்போப் பட்ட கிரகம் மாரகத்தில் வலுவுள்ளதாகும். அதாவது தங்களுக்கு ஏற்பட்ட அறுவகை பலீஷ்டங்கள் கெட்டும் கோசாரங்களிற் கெட்டும், அஸ்தமனமாதிய தோஷங்களடைந்து மிருக்கப்பட்டவைகளால் மாரகமும் நேரிடும். சனி கெட்டுவிட்டால் மாரகத்தில் வலுத்து மாரகத்தைக் கொடுக்காது விடான். மாரகத்தில் மற்றெல்லாக் கிரகங்க ளிலும் சனி கெட்டவன் என்பது பொதுவிதி. அவனே ஆயுள் காரகனுகிறன். ஆயுர்த்தாபம், அம்சாயுர்த்தாயம், பிண்டாயுர்த்தாயம், தசாபுக்தி, கோசர முதலியவைகளால் ஆயுளை நிச்சயித்தலைக் குறித்து அடுத்த புத்தகத்தில் எடுத்து விவரிப்பதுடன், இங்கு இது சம்பந்த மாக பாலாரிஷ்டம், மத்யாரிஷ்டம், யோகாரிஷ்டம், அற்பாயுள், மத்தி மாயுள், பூரண ஆயுள், அபரிமித ஆயுள் என்பதையுங் கூறிமுடிப்போம்.

I. அற்பாயுளை (1) அற்பத்தில் அற்பம். (2) அற்பத்தில் மத்திமம் (3) அற்பத்தில் பூரணம். II. மத்தியாயுளை (1) மத்திப ஆயுளில் அற்பம். (2) மத்திம ஆயுளில் மத்திமம். (3) மத்திம ஆயுளில் பூரணம். III. பூரணுயுளை (1) பூரணுயுளில் அற்பம். (2) பூரணுயுளில் மத்திமம். (3) பூரணுயுளில் பூரணம். இவைகளை நிருத்திக் கொள் வோம்.

தசாவிவரம்:-கேந்திர திரிகோணதிபத்தியம் பெற்றுள்ள கிரகங்களின் தசாகாலங்களுக்குள்ள புக்திகளில் இவைகளின் சேர்க்கையைப் பெற்றிராத ஒரு பாபக்கிரகத்துக்குள்ள காலததில் நல்ல பலனை கிடைக்க நியாயமுண்டு. உதாரணமாக விருச்சிக லக்கினத்தை எடுத்துக்கொள்வோம். இதற்கு இராஜயோக காரகர்கள் சந்திரனும் சூரியனும். ஜாதகிக்கு சூரிய தசையேனும் சந்திர தசையேனும் நடப்பதாக வைத்துக்கொள்ளுவோம். இவைகளிரண்டிலொன்றையேனும் சேர்ந்திராத பாவகிரகமான சனியின் உட்பிரிவின் காலங்களிலேதேனும் நடப்பதாக வைத்துக்கொள்ளுவோம். சூரிய தசையில் சனிபுக்தியும், சந்திர தசையில் சனிபுக்தியும், நல்ல தன்மையாகவே தானிருக்கவேண்டும் என்பது பொதுவிதி. இவைபோன்ற விஷயங்கள் எல்லாம் சாதாரணமானதெனக்கொண்டு அசட்டையாக மறந்துவிடக்கூடாது. நாம் எழுதிப் பதிப்பிக்கப் போகிற பல பாவங்களில் விஷயங்கள் மிகுத்தும் சிறிது கடினமும்போற் காணுதிருக்கும் வண்ணம் இதைப்படிப்பவர்களுக்கு இருக்கவேண்டியதென்பது முக்கிய கொள்கையாதலால் அடிக்கடி இங்ஙனம் சொல்ல நேரிடுகிறது.

இதுபோலவே ஏதேனும் ஒரு பாவகிரகம் இரண்டு சுபகிரகங்களின் சேர்க்கையையடையாது அவைகளின் மத்தியிலிருக்குமாயின், இங்ஙனமமைந்துள்ள பாவகிரகத்தின் புக்திகாலங்களான உட்பிரிவின் காலங்களில் அப்படிக்குள்ள இரண்டு கிரகங்களுக்குள்ள தசைகளில் நன்மையுண்டாகும். இவ்விதியும் முக்கியமென்க.

இதுபோலவே பாவகிரகங்கள் இரண்டின் இடையிலுள்ள சுபகிரகத்தின் உட்பிரிவின்காலம் அந்த இரண்டு பாபகிரகங்களின் தசையில் வருமாயின் கேடானபலனைத்தான் எதிர்பார்த்தல் நியாயமாகும்.

முன்னம் கேந்திர திரிகோணதிபர்களுடன் 3 6 8 11 12 பாவாதிபர்கள் சேரின் தர்மாதிபரும் கர்மாதிபரும் தாங்கள் கொடுக்கும் பலனைக் கெட்டுவிடுவார்கள் என்று சொல்லியிருக்கிறோமல்லவா? ஆனால் சிலமதத்தினர் தோஷம் வாய்ந்துள்ள கிரகங்கள் நல்லபலனைக் கொடுக்குந்தன்மையைப் பெற்றுள்ள கேந்திர திரிகோணதிபர்களின் சேர்க்கையினால் நல்லபலனைத் தருவதாகச் சொல்லுவர். இதுவும் சரியே. கேந்திர திரிகோணதிபர்கள் 3 6 8 11 12க்குள்ளாரின் சேர்க்கையை

யடைந்தால் கெட்டுவிடுவார்கள் என்றும், அவர்கள் தங்களது நன்மை பாகத்தில் குறைவார்கள் என்றும் சொல்லியுள்ளதே தவிர, 3-6-8-11-12க்குள்ளவர்கள் அவர்களின் சேர்க்கையில் எப்படி யிருப்பார்கள் என்ற பிரஸ்தாபமில்லாததால் அத்தகைய 3-6-8-11-12க்குள்ளவர்கள் பலிஷ்டர்களான கேந்திர திரிகோணாதிபதிகளிடமிருந்து தங்களுடைய கெட்ட தன்மையில் அவர்களிடமிருந்து நன்மையான பாகங்களினால் நாளுக்குநாள் சிறுகச்சிறுக வலுத்தும், தீமையான பாகங்களினால் நாளுக்குநாள் சிறுகச்சிறுகக் குறைந்தும் வருவார்கள். இதுபற்றியே 3-6-8-11-12ம் பாவங்களை உபசயராசி யென்றதுபோலு மென்பதையுந் தெரிக. ஆதலால் இக்கொள்கை நமக்கும் சம்மதமாதலால் இதுவும் சரியே யென்றோம். (4) தசாபுக்திகளைக் குறித்த கிரகங்கள் இருந்துள்ள ஸ்தானம்; ஆதிபத்தியம், மூலதிரிகோணம், உச்சம், நீசம், சேர்க்கை, பார்வை, வக்கிரம், அதிசாரம், மூடம், மித்துரு, சத்துரு முதலியவைகளைக்கவனித்தே ஜாதகிக்குப் பலனை தசாபுக்திகளிலும் உட்பிரிவாதியவைகளிலும் சொல்லல்வேண்டும்.

முதலாவது எந்தத் தசையை ஆரம்பமாக எடுக்கவேண்டியதிருக்கின்றதோ அந்தத் தசையின் கிரகாதிபதியே புக்திகளில் முதலானவனாவன். அப்படிக்கு ஆரம்பிக்கும் தசை நக்ஷத்திரங்களைப் பொறுத்துளதாகும். விவரம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | அசுபதி | மகம் | மூலம் | கேது | 7வருஷம் |
| 2 | பரணி | பூரம் | பூராடம் | சுக்கிரன் | 20 ... |
| 3 | கார்த்திகை | உத்திரம் | உத்திராடம் | சூரியன் | 6 ... |
| 4 | ரோஹணி | ஹஸ்தம் | திருவோணம் | சந்திரன் | 10 ... |
| 5 | மிருகசீரிஷம் | சித்திரை | அவிட்டம் | செவ்வாய் | 7 ... |
| 6 | திருவாதிரை | ஸ்வாதி | சதயம் | இராகு | 18 ... |
| 7 | புனர்பூசம் | விசாகம் | பூரட்டாதி | வியாழன் | 16 ... |
| 8 | பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி | சனி | 19 ... |
| 9 | ஆயில்யம் | கேட்டை | ரேவதி | புதன் | 17 ... |
| | | | | | 120 |

இதைத் தான்உடு (நக்ஷத்திரம்) தசையென்பது. இதன் மொத்தம் 120 வருஷங்களாகும். உடு தசா விம்சோத்ரியென்று சொல்வது. இது நமது இராஜதானியிலும் இலங்கையின் உத்தரபாகத்திலும் பெரும்பாலும் வழங்கப்பட்டு வருகின்றது. இந்துஸ்தான் தேசத்தில் வழங்குவது 108 வருஷக் கணக்கைப் பொறுத்துள்ள அஷ்டோத்ரி மார்க்கமாகும்.

தசாநாதனையொத்த தன்மையில் ஏகதேச நியாயத்தால் வலு ஏற்பட்டுள்ள கிரகங்கள்:- (1) தசாநாதன் சேர்ந்த கிரகங்கள். (2) தசாநாதனுடையஆட்சிமூல திரிகோணங்களிலிருக்கும் கிரகங்கள். (3) தசாநாதனுக்குள்ள அறுவகைப் பலத்தைப் பொறுத்துள்ள விவகார தசையில் எவ்வளவு பலம் தசாநாதனடைந்திருக்கின்றனனோ அவைகளை யொப்ப சமபலம் வாய்ந்துள்ள கிரகங்கள். இவைகளும் முக்கியமே. தசாநாதனின் சேர்க்கையைப் பெறாத கிரகங்களின் உட்பிரிவின் காலங்களில் அப்படிச் சேர்க்கைபெற்றிருக்கும் கிரகங்களின் போக்கினைக்குத் தக்கவாறே பலனைத் தருவதாக இருக்கும் என்பது விதியாதலால், இதில் ஒரு விஷயம் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய தவசியமாகிறது. இதுகாறும் கூறிக்கொண்டு வந்ததிலிருந்து மூன்று விஷயங்கள் முக்கிய மானதாகும். அவையாவன:—

(1) தசாநாதனைப் பொறுத்தும் அவனுடைய சேர்க்கை பார்வை முதலியவைகளை யடைந்தும், தசாநாதனுக்குள்ள பலத்துக்குத் தக்கவாறு இருப்பதும் (2) தசாநாதனுக்கு ஏறுக்குமாறாகச் செய்ய வலுப்பெற்றிருப்பதும், அதாவது தசாநாதன்கொடுக்கும் நன்மையை குறைக்கவோ அல்லது முற்றிலும் அழித்து விடவோ கூடிய சக்தியைப் பெற்றிருத்தலும் (3) தசாநாதனுக்குப் பாதி இணங்கியும் பாதி முரண்பட்டுமிருத்தலுமாகிய சுபாவங்களுடைய கிரகங்களாகுமெனத் தெரிக. உதாரணம்:-தசாநாதன் நலத்தைக் கொடுக்கும் தன்மையையும் புக்திநாதன் தீமையைக் கொடுக்கும் தன்மையையும் வாய்க்கப் பெற்றிருந்தால் ஜாதகிக்குத் தீமையைத் தான் எதிர் பார்த்தல் நியாயமாகும். தசாநாதன் லாபத்தைக் கொடுக்க இச்சைகொள்கிறான், புக்திநாதன் அதற்குப் பாதி இணங்கியும் பாதி இணங்காதுமிருந்தால் லாபம் கிட்டுவதும், உடனே அப்படிக் கிடைத்துள்ளதை இழந்து

விடுவதுமாம். கேந்திராதிபதியின் தசையில் திரிகோணாதிபதியின் புக்தி நேரிடுவதானால், தசாநாதனின் தன்மைக்குத் தக்கவாறே புக்தி நாதனான திரிகோணாதிபதியும் கொடுப்பான் என்பதை நிதானித்துக் கொள்ளவும். ஆனால் அப்படிக்குள்ள தசாநாதன் கெட்டதன்மையை யடையாமல் பலிஷ்டத்துவ மடைந்திருப்பது அவசியம்.

மாரக ஸ்தானாதிபதிகளான 2, 7க்குடையவர் நல்ல பலன்களைப் பொருந்தியுள்ளவராக இருந்தால், அவர்களுடைய காலங்களில் நல்ல யோகத்தைக் கொடுப்பார்கள். இப்படிக்கு இராஜயோகம் போன்ற வைபவங்களை அவர் கொடுத்தும் பாபர்களின் புக்தி முதலியவைகளில் அவைகளைக் கெடுத்தும் விடுவார்கள். மாரகாதிபதிகளான 2, 7க்குள்ள வர்கள் சுபர்களாக இருப்பார்களேல், நல்ல பதவியை ஜாதகிக்குக் கொடுப்பார்கள். ஆனால் சுபர்கள் மாரகாதிபர்களின் சேர்க்கையை யடைந்திராவிட்டால் சாதாரண யோகத்தைமட்டுமே கொடுப்பார்கள். தசாநாதனும் புக்திநாதனும் நல்ல பலமுடையவர்களாக இருப் பார்களேயானால் உன்னதமான கீர்த்திவாய்க்கப் பெற்றுள்ள பெரும் யோகத்தை ஜாதகிக்குக் கொடுப்பார்கள். மாரகாதிபர்களைச் சேர்ந்துள்ள தர்ம கர்மாதிபதிகள் கொடுக்கும் யோகம் கேவலம் தர்ம கர்மாதிபதிகள் கொடுக்கும் யோகத்திலும் சிறந்து காட்டுமென்பதும் ஞாபகத்திலிருக்கவேண்டியது முக்கியம். இதனால் மாரகாதிபர்கள் சுபர்களாக இருந்து சுபர்களின் சேர்க்கையடைந்துள்ள கிரகங்கள் நல்ல பலனைத்தரும் என்பது பொதுவிதியாதலையுந் தெரிந்துகொள்ளல் நலம். இராஜயோகங் கொடுக்கும் கிரகங்கள் தங்கள் புக்திகளிலும் கொடுக்காதிருக்கார்கள். இராஜயோகங் கொடுக்கும் கிரகங்களைச் சேராத நல்ல தன்மையுள்ள கிரகங்களின் புக்திகளிலும் நல்ல பலன் கிடைக்கின்றன. தசாநாதன் கெட்டவனாக இருக்க அவனைச் சேர்ந் திருக்காத நல்ல தன்மையை யடைந்துள்ள புக்தி நாதன் காலங்களில் நல்லபலன்கிடைக்கமாட்டாது. புக்திநாதன் வலுத்திருக்க தசாநாதன் கெட்டிருக்கில், நன்மையும் தீமையுங் கலந்தே யிருக்குமென்பதாம். நல்ல யோகத்தைக் கொடுக்க வலுப்பெற்றுள்ள கிரகங்கள் கெட்ட தன்மையை யடைந்த கிரகங்களைச் சேர்ந்திராவிட்டால் கெட்ட தன்மையை யடைந்துள்ள கிரகங்களின் புக்தி முதலிய காலங்களில்

பெரும் நஷ்டங்களையே எதிர்பார்த்தல் முறையாகும். மாரகத்தில் வலுப்பெற்றிருக்கும் கிரகம் தன் சேர்க்கையை யடைந்துள்ள நல்ல கிரகங்களின் புக்தி காலங்களில் மாரகங் கொடுக்கமாட்டான். ஆனல் தன் சேர்க்கையை யடைந்திருக்காத அசுபர்களின் புக்தி காலங்களில் மாரகத்தைக் கொடுத்தல் நிச்சயம். மாரகாதிபர் அல்லது மாரகங் கொடுப்பதில் வலுப்பெற்ற கிரகங்களில் இராஜயோகம் ஆரம்பிப்ப தால், அப்பேர்ப்பட்ட மாரகாதிபர்கள் அல்லது மாரகங் கொடுப்ப வரை யடுத்துப் பின்வரும் அசுபரின் புக்திகாலங்களில் அந்தயோகம் சம்பூரணத்தையடையுமென்பார் என்பது சிறிதும்பொருத்தமில்லாத தால் நற்பலன்களைக் கொடுக்குந் தன்மையை வாய்ந்த கிரகங்கள் மாரகாதிபர் அல்லது மாரகம் கொடுப்போரின் சேர்க்கையைப் பெற்றால், இராஜயோகம் ஆரம்பமாகி அதனையடுத்துள்ள புக்திகள் பாபர்களின் காலமானலும், அந்த ராஜயோகம் வலுப்பெறலாகும் என்பதாம். சுக்கிரனும் சனியும் தங்கள் தங்கள் தசைகளிலும் புக்தி களிலும் கெடாதிருந்தால் பெரும் வாழ்வையும் சுகானுபவத்தையுங் கொடுப்பார்கள்.

தனதிபதியையும் விரையாதிபதியையும் அவைகள் சேர்ந்துள்ள கிரகங்களின் பலாபலத்தினலும், அவைகள் ஏறிநிற்கும் ராசிகளின் பலத்தினலும் நிதானிக்கவேண்டும். இந்த இரண்டு பாவங்களும் தனம் நஷ்டமாவதால் தனமே சௌக்கிய முதலிய உலக சௌகரியங் களுக்கும் புண்ணிய முதலிய வைதிக கிரியைகளுக்கும் காரணமாத லால் இரண்டாம் பாவத்தால் கொடுக்கப்பட்டதை வைத்தே மோக்ஷ முதலியவைகளைப் பெறல் சாத்தியமாவதால் பன்னிரண்டு விரைய மானது எனத் தெரிக. இதன் விரிவு அவசியமாவதால் அதனையு மிங்கு சொல்லுவோம்.

ஆயுள்பாவமான எட்டாம் பாவத்திற்கு நஷ்டபாவமான 12ம் பாவம் ஏழாம் பாவமாகிறது. இது மாரகஸ்தானம். கேந்திரமான ஏழாம் பாவத்திற்கு பன்னிரண்டாம் பாவம் ஆறம்பாவமாகிறது. இது கெட்டது ஆறும்பாவத்திற்கு 12-ம் பாவம் 5-ம் பாவமாகிறது. இது திரிகோணம்: நல்லது. 5-ம் பாவத்திற்கு பன்னிரண்டாம் பாவம் 4-ம் பாவமாகிறது. இது கேந்திரம். நாலாம் பாவத்திற்கு 12ம் பாவம்

3-ம் பாவமாகிறது இது கெட்டது. 3ம் பாவத்திற்கு 12-ம் பாவம் 2-ம் பாவமாகிறது. இது மாரக ஸ்தானம். இதுவே தன ஸ்தானமுமாகும். இரண்டாம் பாவத்துக்கு 12-ம் பாவம் லக்கினம். இதுவே ஜீவன். இதற்கு 12-ம் பாவமே 12-ம் பாவமாகிறது. விரையஸ்தானமானதால் பன்னிரண்டாம் பாவம் கெட்டதே. 12-ம் பாவத்துக்கு 12-ம் பாவம் 11-ம் பாவமாகிறது. இது கெட்டதே. 11-பாவத்துக்கு 12-ம் பாவம் 10-ம் பாவமாகிறது. இது கேந்திரம். 10-ம் பாவத்திற்கு 12-ம் பாவம் 9-ம் பாவமாகிறது: திரிகோணம். 9 (பாக்கியம்)-ம் பாவத்துக்கு 12-ம்பாவம் 8 ஆகிறது: கெட்டது. 8-ம்பாத்துக்கு 12ம் பாவம் 7-ம் பாவமாகிறது. இலக்கினத்துக்கு முன்னும் பின்னுமுள்ள 2-12 கெட்டதென்க. இதை சக்கிரமூலமாக விளக்க தனுசு லக்கினத்தை எடுத்துக்கொள்ளுவோம்.

| | | | |
|---|---|---|---|
| 4 | 5 | 6 | 7 |
| 3 | | | 8 |
| 2 | | | 9 |
| ல 1 | 12 | 11 | 10 |

இலக்கினத்துக்கு முன்னும் பின்னுமான ஸ்தானங்கள்

| | |
|---|---|
| 2-ம் | 12-ம் அழிவு, நாசம். |
| 3 | 11 கெட்ட ஸ்தானங்கள். |
| 4 | 10 கேந்திரங்கள். |
| 5 | 9 திரிகோணங்கள். |
| 6 | 8 கெட்ட ஸ்தானங்கள். |
| 7 | கேந்திரம். |

குறிப்பு:—1-4-7-10 கேந்திரங்கள். 1-5-9 திரிகோணங்கள். 3-6-8-11-12 கெட்ட ஸ்தானங்கள் என்பதைச் சக்கரத்தாலுமறிக.

2.12-ம் பாவங்களைச் சேர்க்கைபற்றியும் சந்தர்ப்பங்கருதியும் அநுபோக வாயிலாக அறிவதே சிரேஷ்டம். 3-6-8-11-12-க்குடைய அதிபர்கள் சுபர்களானாலும் கெட்டுவிட்டார்கள் என்பதே சாஸ்திரம். ஆனால் 3-6-8-11-12 களிலும் பாபரிருக்கப் பிறந்தாருள் இராஜனை யொத்த வாழ்விலிருப்பவர்களைப் பார்க்கிறோம். சாஸ்திரமும் அந்த ஸ்தானங்களில் பாபர்களிருப்பது பெரும் யோகலக்ஷணமெனக் கூறலையும் கவனிப்பது அவசியமாகும்.

1-4-7-10 மட்டும் கேந்திரமென்கிறோம். அதுபோல திரிகோணத்தைப்பற்றிச் சொல்லும்போது 1-ஐ விட்டு 5-9யும் மாத்திரம் குறிப்பிடுகிறார்கள். 1-5-9 என்று சொல்வது நியாயமாகும். கீழே காட்டியிருப்பதையும் சிறிது கவனிக்க.

முதலாவது லக்கினம் ஜீவன் என்ற 1. எல்லாவற்றிற்கும்பொது என்பதைத் தெரிக.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 4 | 7 | 10 | | கேந்திரங்கள். |
| 1 | 5 | 9 | | | திரிகோணங்கள். |
| 1 | 2 | 5 | 8 | 11 | கேந்திரத்துக்கு அடுத்துவரும் பணபரங்கள். |
| 1 | 3 | 6 | 9 | 12 | டணபரத்து அடுத்துவரும் ஆபோகிலிமங்கள். |

## விஷய சூசிகை.

இப்புத்தகத்தில் பன்னிரண்டு பாவங்களைக் குறித்துள்ள பொது லக்ஷணங்களடங்கியுள்ள விதிகளையும் கிரகங்களின் காரகத்துவங்களையும் எடுத்து விவரமாக ஒருவாறு சொல்லி முடித்தோம். அவைகளால் மனிதர்களுக்கு ஏற்படும் ஏற்றமும் தாழ்வும் இவைகள் என்பதையும் பூர்வ ஜன்ம கர்மானுஷ்டானத்தின் பலனையே இந்த ஜன்மத்தில் அடைய நியாயமிருக்கிறதென்றும், அதனையநுபவிப்பதற்கே மனிதன் மறுஜன்மம் அடைகிறான் என்றும், அவன் பூர்வஜன்மத்தில் செய்த கர்மத்தின் பயனாக அவனுக்குக் கிரகங்களமைகின்றனவென்றும், ஜோதிஷ சாஸ்திரம் விளக்குகின்றதேயன்றி ஐந்தாம் பாவத்திலும் ஏழாம் பாவத்திலும் பாபர்களிருத்தலால் அவைகளின் பாவங்களின்

பலன்கள் விருதாவாகின்றனவேயன்றி முன் செய்த வினைப்பயனை மாட்டாதென்பார் கூற்று விருதாவாகுமே யன்றி வேறென்னும்? நைசர்க்கிக பாவத்துக்கு பட்டியல் எழுதி மனதில் எளிதிற் படியும் வண்ணம் விளக்கியுள்ளோம் சமாகமம் சீக்கிரகேந்திரம் கிரகயுத்தமுத லியவைகளையும் மூடம், வக்கிரம், அறுவகைப் பலன்களின் விவரம், பகல் இரவு காலங்களில் ஜனித்தோர்க்கு பிதிர்முதலிய காரக்கிரகங்கள், இராஜயோகம் யோகம் சாதாரணயோகமாதியவைகள், சுபர் அசுபர் விளக்கம், சுபர் அசுபர் எந்த ராசியில் எந்த நிலைமையில் கெட்டு விடுகிறார்கள் என்ற விவரம், தர்மகர்மாதிபர்களின் பரிவர்த்தனையின் பயன்,இராஜயோகத்துக்குள்ள பொதுவிதி சிறப்புவிதிகளுக்குத்தெளி வுரை, இராகு கேதுக்களைக் குறித்துள்ள பலாபலன் விவரம், மாரக சம்பந்தமான விவரம், ஆயுளைக்குறித்துள்ள குறிப்பு விஷயம், உடு தசாபலனைக் கொடுப்பதில் தசாநாதன் புக்திநாதன் முதலிய உட் பிரிவினர்களின் காலவிவரம், நக்ஷத்திரங்களும் தசைகளும் நல்ல பலனையுந் தீயபலனையுங் கொடுக்கும் இயல்பின கிரகங்கள் எத்தன்மை யில் எப்பொழுது அடைகிறார்கள் என்ற விவரங்கள், 2-12ம் பாவங் களின் விவரம், அவைகளின் மர்மம் சவ்வியம் அசவ்வியம், 5-9 திரி கோணங்களுடன் லக்கினத்தையும்சேர்த்துக் கணக்கிடல் நியாய மென்ற விவரங்களை யெல்லாம் சவிஸ்தாரமாகக் கூறியுள்ளோம்.

இவைகளை நிதானித்துப் படித்து மனதில் கொள்வோர்க்கு ஜோதிஷ சாகரத்தில் இப்புத்தகமாகிய கப்பலின் உதவியைக்கொண்டு அச்சமும் ஆலேச்சமுமின்றி ஆங்குகோஷித்து எழும் அலைகளிற் சின்னஞ் சிறியவைகளாகவுள்ளவைகளை யொருவாறு கடந்து மத்திய பாகமும் அலையின் கொந்தளிப்பு அதிகரித்துக்கொண்டும் ஆழம் நிலை யாததுமான பகுதிக்கு வந்துள்ளோம். இக்கப்பல் மத்திம பாகத்துக்கு அப்பால் கடக்கும் ஆற்றலற்றிருப்பதால் ஆங்கு காணப்படும் ஆஸ் வாசம் என்றதிட்டின் கரையிலிறங்கிக்கொண்டபின்னர் இனிபிரயாண சன்னதமாக இருக்கும் மூன்றும் புத்தகமாகிய கப்பலிலேறிச்சென்று எல்லாம் வல்ல இறைவன் கருணையால் கரைசேருவோமாக. இப்புத் தகத்தை ஜோதிஷ சாஸ்திரங் கற்பவர்கள் பிறருதவியின்றி விஷயங்களை உள்ளவாறுகற்றுக்கொள்ள எழுதியுள்ளோம். இப்புத்தகம்தமிழ்நாட்டில்

என்றென்றும் நிலைபெறுமென்பது எமது திண்ணமாவதால் இப்புத்தகத்துடன் யாமும் நெடுங்காலம் ஸ்தூல சரீரமழிந்த பின்னரும் இருப்பது நிச்சயமெனத் தோற்றலால் இறைவனுமவ்வாறே கருணை கூர்வார் என்பதைத் திண்ணமாகக் கொண்டேம். சுபம்.

யாமியற்றிய இந்நூல் 18—9—28 இரவு சுமார் 35-50 நாழிகைக்கு முடிவு பெற்றது. அதற்குள்ள ஜாதகம் வருமாறு:—

ரா சந்

| | | | |
|---|---|---|---|
| | ல-வி | ரா | செ |
| | | | |
| | | | |
| | சனி கே | சந் | கு-பு சு |

ல

பு-சு

கு சனி

செ-கே வி





# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 9 | 1 | ஸிலீம் | சிலீம் |
| 11 | 2 | (Hesiod) | எடுத்துவிட |
| ... | 16 | தேசங்களுக்குட் | தேசங்களுக்குச் |
| ... | 23 | நசித்துவிட்டதென்றும் | நசித்துவிட்டனவென்றும் |
| 12 | 28 | சின்னுபின்னம் | சின்ன பின்னம் |
| 14 | 6 | பிளரின்ச | பிளாரின்ச |
| 15 | 12 | அவனுடைய | அவருடைய |
| ... | 28 | போபு | போப் |
| 17 | 10 | ஒடப்பதாகவும் | ஒடப்பனவாகவும் |
| 21 | 19 | நிவ்யெக்னுன் | தெவ்யெக்னுன் |
| 22 | 16 | கண்டுபிடித்து | கண்டுபிடிக்க |
| 32 | 27 | இவைகள் | இவைகளை |
| 33 | 18 | இருண்டு | இருண்டும் |
| ... | 24 | இவைகள் | இவைகளை |
| ... | ... | சனிக்குமாம் | சனிக்குமாமென்க |
| 35 | 7 | விடையை | விடை |
| 43 | 13 | பாவங்களுக்குர் | பாவங்களுர் |
| ... | 24 | நிர்மாணிக்கவேண்டியது. | நிர்மாணிக்கவேண்டியது |
| 44 | 7 | 3, 6 | 3, 8 |
| ... | 12 | உத்திராடம் | உத்தர |
| ... | 13 | 5, 20 | 50, 20 |
| ... | 20 | 3, 6, 2, 7-க்குள்ள புதன் சுக்கிரன் | 3, 8, 4, 7-க்குள்ள சுக்கிரன் புதன் |
| 45 | 14 | சூரியனுடைய | சூரியனுடன் |
| 52 | 7 | காரகனாதல் பற்றி | காரகனாக இருந்தும் |
| ... | 25 | கேந்திராதி | திரிகோணாதி |
| 53 | 16 | சேர்க்கை | சேர்க்கையில் |
| ... | ... | விவரம் | விடையை |
| 54 | 29 | கரும | கடும் |
| 59 | 30 | புஸ்தகத்தில் | புஸ்தகத்தில் விடையை |
| 62 | 2 | நிஷ்பிரயோஜனமற்றதாகும் | பிரயோஜனமற்றதாகும் |

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 62 | 20 | அங்ஙனமுன்னது | அங்ஙனமுன்னது |
| ... | 30 | யுத்தங்களிலிரு | யுத்தங்களிரு |
| 69 | 16 | 82 | 82(?) |
| 71 | 29 | சுக்கிபனை | புதனை |
| 73 | 28 | கெட்டு | கெட்டும் |
| 76 | 27 | Good Loding | Good Tidings |
| 77 | 6 | Slavey | Slavery |
| ... | 31 | கதையும் | கதைகளும் |
| 85 | 19 | திரமை | திறமை |
| 86 | 11 | சகோதரம் | சகோதரர் |
| 98 | 29 | கீழ்திசை | கீழ்த்திசை |
| 99 | 13 | இழர்துவிடுகின்ற | இழர்துவிடுகிற |
| 101 | 27 | ஞானிகளுன் | ஞானிகளும் |
| 103 | 1 | சின்றுபின்ன | சின்னபின்ன |
| ... | 6 | பார்த்திருக்கவுங்கூடும் | பார்த்திருக்கவுங்கூடுமென் |
| 104 | 8 | இஃது | இவை [பதே |
| ... | 9 | 9, 12, 12 | 9, 6, 6 |
| 111 | 30 | பூரணபுவில் | பூரணபுவில் |
| 119 | 22 | ஆலைச்சலுமின்றி | அலைச்சலுமின்றி |

இவை நீங்கிய பிற பிழைகளும் பலவுள. அவைகளுள் ஒருமையிற் பன்மையும் பன்மையிலொருமையும் கலந்து வருவனவற்றுள் "அல்லவா" எனக் காணப்படுமிடங்கடோறும் "அன்றோ" வெனப் பெரும்பான்மையி லமைத்துக்கொள்க. எங்கெங்கு "விருஷிக" மெனக் காணப்படுகின்றதோ ஆங்காங்கு "விருச்சிக" மென மாற்றிக்கொள்க. இந்நூலை யாம் முடிவு பெறச்செய்த காலம் அளவிற்சுருங்கிய பதினைந்து தினங்களே யாதலால் சிற்சில இலக்கணப்பிழைக ளாங்காங்கு புகுதற்கிடமாயின. அடுத்தபதிப்பி லிக்குறைகள் நீக்கப்படும். மதுரை மீனலோசனி அச்சுக்கூடத் தலைவர் திருவாளர். அ. முத்துச்சாமி பிள்ளையவர்களிதனை அக்கறையுடன் அச்சிட்டுக்கொடுத்த உதவி பாராட்டற்பாலதே.

எஸ். குருகுஹதாஸப் பிள்ளை,
ஆக்கியோன்.

